# உள்ளே...

கண்ணப்பன் இலாகாவில் ஒரு பகீர்! 10







4
விழிப்புணர்வுத் தொடர்



கவர் ஸ்டோரி 12

ஸ்கேனிங் காயத்ரி ரகுராம் 16

கல்கி
26.10.2003



• மணி சங்கர் அய்யர்

மணி சங்கர் அய்யர் தாக்கப்பட்ட சம்பவம் மற்றும் அரசு மேடைகளில் கடைப்பிடிக்கப்படும் கண்ணியம் ஆகியவை குறித்து இங்கே பேசுகிறார், மூத்த காங்கிரஸ் தலைவரும் சட்டமன்ற உறுப்பினருமான எஸ்.ஜி.விநாயகமூர்த்தி.

உணர்ச்சிகளைத் தூண்டிய செயல். இந்தப் பின்னணியோடுதான் அய்யர் தாக்கப்பட்ட விவகாரத்தையும் பார்க்க வேண்டும். முதல்வர் எதிர்க்கட்சிகளை, வழிபாடு செய்யும் கரசேவைக் கூட்டமாகக் கருதக் கூடாது. ஜனநாயகத்தில் ஆளும் கட்சி, எதிர்க்கட்சிகளை முகம் பார்க்கும் கண்ணாடியாகவே கருத வேண்டும். கண்ணாடியில் பார்க்கும்போது முகத்தில் குறைகள் தெரிந்தால், அது கண்ணாடியின் குற்றமல்ல. இதைப் புரிந்து கொள்ளாமல் கண்ணாடியை உடைக்கின்ற செயல், ஜனநாயகத்தையே குழி தோண்டிப் புதைக்கின்ற படு பாதகமான செயலாகவே அமையும்.



• எஸ்.ஜி.விநாயகமூர்த்தி

# "தொண்டர்களைத் தூண்டிய முதல்வர்!"

**மணி சங்கர் அய்யர் தாக்கப்பட்ட சம்பவம் ஜனநாயக மரபுகளுக்குச் சவாலாக இருக்கிறதே!**

நாடாளுமன்ற உறுப்பினர் அய்யர் தாக்கப்பட்டது, தரம் தாழ்ந்த, மோசமான செயல். தொகுதி சம்பந்தப்பட்ட பிரச்னைகளை, முதலமைச்சரிடத்தில் பொது மேடையில் சொல்ல, ஒரு நாடாளுமன்ற உறுப்பினருக்குப் பொறுப்பும் கடமையும் உண்டு. அதைத்தான் அய்யர் செய்தார். அதில் தவறென்ன இருக்கிறது? பத்திரிகைச் செய்திகளைப் பார்க்கும்போது, அய்யர் கொடுத்த கோரிக்கைகளில் உள்ள சாதக, பாதகங்களை முதல்வர் பேசியதுபோல் தெரியவில்லை. ஆனால் மரபுகளை மீறி, ஒரு வருடத்திற்கு முன்னால் மணி சங்கர் அய்யர், தம்மைப் பற்றித் தவறானபடி எழுதியிருப்பதாக அந்தக் கூட்டத்தில் குறிப்பிட்டது, அ.தி.மு.க. தொண்டர்களின்

**அய்யர் ஆபாசமாகப் பேசினார் என்று முதல்வர் சொல்லியிருக்கிறாரே!**

ஒரு பொது மேடையில், ஆயிரக்கணக்கான அ.தி.மு.க. தொண்டர்கள் கூடியிருக்கின்ற ஒரு நிகழ்ச்சியில், முதலமைச்சரை ஆபாசமாகப் பேசினார் என்ற வாதத்தை ஏற்றுக் கொள்வது கடினமாக இருக்கிறது. அவரைத் தாக்கியவர்கள் யார் என்பதைப் புலன் விசாரித்துக் கண்டு பிடித்து, நடவடிக்கை எடுக்குமாறு ஏற்கெனவே கேட்டிருக்கிறோம். இந்த நிலையில் காங்கிரஸின் உட்கட்சி விவகாரங்களைச் சொல்லி, காங்கிரஸ்காரர்களே தாக்கியிருக்கக் கூடும் என்கின்ற உள்ளர்த்தத்தோடு அறிக்கை கொடுத்திருப்பது, விஷமத்தனமானது மட்டுமல்ல, விசாரணையை திசை திருப்புகின்ற செயல்.

**எதிர்க்கட்சிகள் என்ன செய்யப் போகின்றன?**

எதிர்க்கட்சிகள் இணைந்து செயல்பட்டால் தான், இது போன்ற பிரச்னைகளுக்குக் கட்டுப்பாடு கொண்டு வர முடியும். சட்டமன்றத்திலேயே எதிர்க் கட்சிகளைப் பார்த்து "பொறுப்பு கெட்டத் தனமாக நடந்து கொள்கிறார்கள்" என்ற மோசமான வார்த்தையை முதல்வர் சொல்லியிருக்கிறார். அதை எதிர்த்து வெளிநடப்புச் செய்ததோடு அன்றைய நடவடிக்கை முடிந்துவிட்டது. தி.மு.க. உறுப்பினர் பரிதி மீது நடவடிக்கை எடுத்தபோது, அந்தக் கட்சி உறுப்பினர்கள் பட்ஜெட் கூட்டத் தொடர் முழுக்க பகிஷ்கரிப்பு செய்தனர். இது எந்த வகையில் தீர்வைக் கொடுக்கும் என்று தெரியவில்லை. ஆனால் ஒன்றை மட்டும் நினைத்துப் பார்க்கிறேன். மத்திய அரசில், அதுவும் வாஜ்பாய் தலைமையின் கீழ் பங்கு கொண்டு செயல் படும் தி.மு.க., மாநில அரசை மட்டும் எதிர்ப்பதென்பது சரியான நிலைப்பாடாகத் தெரியவில்லை. கலைஞருக்கும் ஸ்டாலினுக்கும் பல வகைகளில் தொந்தரவு கொடுக்கப் பட்டிருக்கிறது. வைகோ ஒரு வருட காலத்திற்கும் மேலாக ஜெயிலில் இருக்கிறார். இத்தனைக்கும் பிறகு மத்திய கூட்டணிக் கட்சியிலிருந்து வெளியே வர தி.மு.க., ம.தி.மு.க., பா.ம.க. தயங்குவதும்தான் மாநிலத்தில் நிலவுகின்ற அசாதாரணச் சூழலுக்குக் காரணம். இவர்கள் வெளியே வந்தால் மத்திய, மாநில அரசுகளை எதிர்த்து, ஒரு முனைப்போடு செயல்பட காங்கிரஸ் கட்சிக்கும் உத்வேகம் கூடும்.

**காங்கிரஸ் என்ன செய்யப் போகிறது?**

கட்சியின் தொண்டர்களைத் தேர்தலுக்குத் தயார்ப் படுத்துவது ஒரு பக்கம் இருந்தாலும், ஜனநாயகச் சீர்குலைவுகளை எதிர்த்துப் போராடுவதற்கு அவர்களைத் தயார் செய்வது மிக, மிக, அவ்சியம்.

**விரைவில் சட்டமன்றம் கூடவிருக்கிறது. என்ன யுக்தியை கையாளப் போகிறீர்கள்?**

இந்தச் சம்பவங்களைத் தவிர, அரசு ஊழியர் பிரச்னை, குடி தண்ணீர்ப் பிரச்னை, விவசாயிகளின் வேதனை மற்றும் மக்களைப் பாதிக்கின்றன வேறு பல பிரச்னைகளையும் பற்றி சட்டமன்றத்தில், எதிர்க் கட்சிகளோடு கலந்து பேசி எடுத்து வைப்போம். சட்டமன்றக் காங்கிரஸ் தலைவர் எஸ்.ஆர்.பி. இது சம்பந்தமாக ஏற்பாடு செய்வார்.

சந்திப்பு : **ப்ரியன்**
படங்கள் : **ராஜன்**




**கல்கி**

**பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில்**
அச்சிட்டு வெளியிடுபவர் :
**கி.ராஜேந்திரன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 97

ஆசிரியர் :
**சீதா ரவி**

ஆசிரியர் குழு :
**செ. ஏக்நாத் ராஜ்**
**அனுராதா சேகர்**
**ஆர்.சி. ஜெயந்தன்**

வடிவமைப்பு :
**எஸ். ஸ்டீஃபன்**
**பி.ஆர். ராஜன்**

தொலைபேசி :
22345622, 23, 24
தொலைநகல் :
044 - 22345621

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.330/-
ஆறு மாதம் : ரூ.165/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 62 யு.எஸ். டாலர்
இலங்கை : ரூ.2000/-

**Bharathan Publications Private Limited.**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 097.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு

## விழிப்புணர்வுத் தொடர் -1

# நமக்கே உரிமையாம்!

இந்தியா என்றால் அது ஒரு நாடு என்பது தெரிகிறது. இந்தியர்கள் என்றால் அவர்கள் அந்நாட்டைச் சார்ந்தவர்கள் என்பதும் தெரிகிறது. அப்படியென்றால், இந்திய அரசு யாருடைய அரசு?

எல்லா இந்தியர்களுக்கும் பொதுவாக, எல்லோருடைய உணர்வுகளையும் தேவைகளையும் பிரதிபலிக்கின்ற அரசு ஒன்றே, இந்திய அரசாக இருக்க முடியும்.

நடைமுறை அப்படி அல்ல. பெரும்பான்மை வாக்காளர்கள் ஓர் அரசியல் கட்சியைத் தேர்ந்தெடுக்கிறார்கள். அந்தக் கட்சி ஆட்சியை அமைக்கிறது. இதனை ஜனநாயகம் என்றும், இதுவே ஜனநாயகத்திற்கு உகந்த முறையென்றும் கருதுகிறோம். பெரும்பான்மையின் முடிவுகளை மற்றவர்கள் (சிறுபான்மையினர்) ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று கருதுகிறோம்.

ஜனநாயகத்தைப் பற்றி நாம் ஏற்றுக் கொண்டுள்ள அனுமானங்களை மறு பரிசீலனை செய்ய வேண்டும்.

பெரும்பான்மை என்பது மெஜாரிட்டி. பெரும்பான்மையின் ஆதிக்கம் என்பது மெஜாரிட்டேரியன் ஆதிக்கம். ஒரு ஜனநாயக நாட்டில் பெரும்பான்மையின் ஆட்சியைத் தவிர்க்க முடியாது. ஆனால், அதுவே பெரும்பான்மையின் ஆதிக்கமாக மாறிவிடக் கூடாது.

பண்பட்ட ஜனநாயக நாடுகளில் பெரும்பான்மையின் ஆட்சிக்கும், பெரும்பான்மையின் ஆதிக்கத்திற்கும் இடையே உள்ள நுணுக்கமான வேறுபாட்டை உணர்ந்திருக்கிறார்கள். எனவே, அந்த நாடுகளில் எந்த ஓர் அரசியல் கட்சிக்கும் அவர்கள் பெரும்பான்மை பலத்தைத் தருவதில்லை. இரண்டு அல்லது மூன்று அரசியல் கட்சிகளைக் கொண்ட கூட்டணி அரசே தங்களுக்கு உகந்த அரசு என்று கருதுகிறார்கள். நார்வே, ஸ்வீடன், டென்மார்க், ஐஸ்லாண்ட் ஆகிய நாடுகள் நல்ல உதாரணங்கள்.

பெரும்பான்மை என்று ஏதாவது உண்டா? உண்மையில் பெரும்பான்மை என்று எதுவும் கிடையாது. காலத்திற்கும் சமயத்திற்கும் தேவைக்கும் ஏற்ப பெரும்பான்மை உருவாக்கப்படுகிறது. எழுபத்தைந்து ஆண்டுகளுக்கு முன் தமிழ்நாட்டில் பிராமணர் - பிராமணர் அல்லாதோர், என்று சமூக மற்றும் அரசியல் களங்களில் போட்டி தலை தூக்கியது. நான் - பிராமின் இயக்கம் என்றே அதைக் குறிப்பிட்டார்கள். ஒருவர் பிராமணரா அல்லது பிராமணர் அல்லாதவரா என்பது முக்கியக் குறியீடாக இருந்தது. ஓட்டல்களில் 'பிராமணர்கள் சாப்பிடும் இடம்' என்று தனியாக ஒரு பகுதி





# ப.சிதம்பரம்

ஒதுக்கப்பட்டது. அதை பிராமணர்கள் அல்லாதவர்கள் 'பிராமணர்கள் சாப்பிடும் இடம்' என்று கேலியாக விமர்சித்தார்கள். பள்ளிக்கூடப் படிவங்களில் பிராமணரா அல்லது பிராமணர் அல்லாதவரா, என்ற கேள்வி இடம் பெற்றிருந்தது.

அது ஒரு காலம். இன்று பிராமணர் அல்லாதவர் எல்லோரும் ஒன்று சேர்ந்து ஒரு முடிவை எடுத்து, அதனைப் பிராமணர் மீது திணித்தால் அந்த நிலையை ஒரு ஜனநாயக நாட்டில் ஏற்றுக் கொள்ள முடியுமா? என்ன செய்வது, அது பெரும்பான்மையின் முடிவு, அதற்குப் பிராமணர்கள் கட்டுப்பட்டுத்தான் ஆகவேண்டும் என்று சொல்வதை ஏற்றுக் கொள்ள இயலாது. காரணம், அந்த முடிவு ஒரு தற்காலிக அல்லது சுயநலப் பெரும்பான்மையின் ஆதிக்கத்தைக் குறிக்கிறது. அத்தகைய ஆதிக்கத்தை ஒரு ஜனநாயக நாட்டில் அனுமதிக்க இயலாது.

இனம், மதம், நிறம், மொழி, சாதி என்று பல அடிப்படைகளில் பெரும்பான்மைகள் உருவாக்கப்படுகின்றன. இதுவே பெரும்பான்மை என்று சித்திரிக்கப்படுகிறது.

ஒரு சாதியினர் தங்கள் எண்ணிக்கை பலத்தைக் கொண்டு "நீங்கள் தேர் வடம் பிடிக்கக் கூடாது, நீங்கள் இந்தக் குளத்தில் தண்ணீர் எடுக்கக் கூடாது" என்று மற்ற சாதியினரைப் பார்த்துச் சொல்வது பெரும்பான்மை ஆதிக்கம்.

234 உறுப்பினர்களைக் கொண்ட ஒரு சட்டமன்றத்தில் 135 இடங்களைப் பெற்றிருப்பதாலேயே, ஆளும் கட்சி தன்னுடைய விருப்பத்திற்கேற்ப சட்டங்களையும் அவசரச் சட்டங்களையும் நிறைவேற்றுவது பெரும்பான்மை ஆதிக்கம்.

இந்தியாவில் 83 சதவிகித மக்கள் இந்துக்கள். இந்து திருமண விதிகளையோ, இந்து வாரிசுரிமை விதிகளையோ மற்ற மதங்களைச் சார்ந்தவர்மீது திணிப்பது, பெரும்பான்மை ஆதிக்க மனப்பான்மையையே காட்டுகிறது.

ஊர்ப் பஞ்சாயத்து என்ற பெயரில் மோசமான, இரக்கமற்ற தீர்ப்புகள் வழங்கப்படுகின்றன. எளிய சமுதாயங்களைச் சார்ந்தவர்கள் இழிவு படுத்தப்படுகிறார்கள். வேறு சாதிகளைச் சார்ந்த ஓர் ஆணும் பெண்ணும் காதலித்தாலோ, திருமணம் செய்து கொண்டாலோ, ஊர் 'பெரியவர்கள்' ஒன்று கூடி அவர்களைத் தண்டிக்கிறார்கள். பழைய மரபுகளையும், மதிப்புகளையும் இந்தத் தலைமுறையின் மீது திணிக்கிறார்கள். இவையெல்லாம் பெரும்பான்மை ஆதிக்கத்தின் வன்முறைச் செயல்கள்.

வேலை பார்க்கும் இடங்களில் பெண்கள் மீது இழைக்கப்படும் பாலியல் வன்முறைகளுக்குக் காரணமான ஆணாதிக்கம், ஒரு வகையான பெரும்பான்மை ஆதிக்கமே.

உலகம் சுருங்கிவிட்டது என்று சொல்கிறோம். உலகத்தில் 'கலப்படம்' அதிகரித்து விட்டது. எந்த நாட்டிலும் ஒரே இனம், ஒரே மதம், ஒரே மொழி, ஒரே நிறம் என்ற நிலையில்லை. இதற்குப் பல காரணங்கள் உண்டு. ஒரு முக்கியமான காரணம், குடியேற்றம். குடியேற்றம் என்பது இன்று நேற்றுத் தோன்றியதல்ல. பல நூறாண்டுகளாக மக்கள் இடம் பெயர்ந்து கொண்டிருக்கிறார்கள். மேற்கு இந்தியத் தீவுகள், தென் ஆப்பிரிக்கா, கிழக்கு ஆப்பிரிக்க நாடுகள், இலங்கை, மொரிஷியஸ், மலேசியா, சிங்கப்பூர், பிஜி, இந்தோனேஷியா, மையன்மார் ஆகிய நாடுகளில் இந்தியர்கள் குடியேறினார்கள்.

காலனி ஆதிக்க முறையும் குடியேற்றத்திற்கு வழி வகுத்தது. ஐரோப்பிய நாடுகளிலிருந்து அலை அலையாக மக்கள் அமெரிக்காவில் குடியேறினார்கள்.

இவர்கள் எல்லோரும் வேலை, வருமானம் என்று பொருளாதார வாய்ப்புகளைத் தேடி நாடு பெயர்ந்தார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

அதே பொருளாதார சக்திகள் இன்றும் செயல்படுகின்றன. வளருகின்ற நாடுகளிலிருந்து வளர்ந்த நாடுகளுக்கு மக்கள் குடியேறுகிறார்கள். வளர்ந்த நாடுகளில் அவர்கள் தேவைப்படுவதால், அந்த நாடுகள் அவர்களை வரவேற்கின்றன. இன்று நர்ஸ் பயிற்சி பெற்ற ஒரு பெண்ணுக்கு உடனடியாக அமெரிக்க விசா கிடைக்கிறது. பயணச் செலவு, பயிற்சிக் காலத்தில் ஊதியம் (ஸ்டைபெண்ட்), தங்கும் வசதி, பிறகு நிரந்தரப் பணி என்று அமெரிக்கா அவர்களுக்குச் சிவப்புக் கம்பளம் விரிக்

## எல்லோரும் நல்லவரே!

✉ வித்தியாசமான கடைசிக் காட்சி மூலம் 'ஜீவ நதி'யை வாசகர் மனதில் பாய்ந்தோட வைத்து விட்டார் பிரபஞ்சன். அலட்டல் இல்லாத காட்சிகள், ஆற்றொழுக்கு நடை, யதார்த்தமான கதாபாத்திரங்கள் எனச் சொல்லிக் கொண்டே போகலாம்.
தஞ்சாவூர், கோ. ராமதாஸ்.



✉ இருபத்து ஆறுவாரம் எங்கள் ஜீவனுடன் ஆத்மார்த்தமாய் ஒன்றிவிட்ட ஜீவநதி, தொடராய்த் தெரியாமல் உண்மை நிகழ்ச்சியை தினமும் நேரில் ரசித்து மகிழ்ந்த உறவாய்ப் பிரதிபலித்தது!
பள்ளிபாளையம், ரஞ்சனிப்ரியன்.

✉ வானத்தை வசப்படுத்திய பிரபஞ்சனுக்கு 'ஜீவநதி' ஒரு சிற்றோடைதான். பெயருக்கு ஏற்றாற் போல் பிரபஞ்சத்திற்கு இன்றையத் தேவை 'பாஸிட்டிவ் திங்கிங்'தான் என்று அடிக்கோடிட்டு வெளிப்படுத்தி இருக்கிறார். எல்லோருமே நல்லவர்களாக இருக்க முடியும் என்பதற்கு இத்தொடரின் கதாபாத்திரங்கள் சான்றுகளாக உள்ளனர்.
சென்னை, கே.எஸ். நாராயணன்.

✉ சமுதாயத்தில் பல்வேறு நிலைகளில் பல்வேறு குணங்களில் உள்ள சராசரி மக்களுடன் எங்களையும் கலந்து உரையாடச் செய்துவிட்டார் பிரபஞ்சன்.
திருநெல்வேலி - 7, வி. திலகம்.

கிறது.

இந்தியா போன்ற பெரிய நாடுகளில் உள்நாட்டுக் குடியேற்றத்தைத் தடுக்க முடியாது. ஒரு மாநிலத்தில் பல மதங்களைச் சார்ந்தவர்கள், பல மொழிகளைப் பேசுபவர்கள் இருப்பதை, இயல்பான வளர்ச்சி, இயல்பான மாறுதல் என்று எடுத்துக் கொள்ள வேண்டும். மொழிவாரி மாநிலம் என்று நாம் அமைத்துக் கொண்டாலும், பல மொழிகளைப் பேசும் மக்கள் ஒவ்வொரு மாநிலத்திலும் இருப்பார்கள். அவர்களின் எண்ணிக்கை சொற்பமாக இருக்காது.

ஒரு சமுதாயத்தின் பன்மைத் தன்மை டெல்லி, சென்னை, மும்பை, பெங்களூர் போன்ற பெருநகரங்களில் கண்கூடாகத் தெரிகிறது. லண்டன் நகரத்தைப் பற்றி வேடிக்கையாகச் சொல்லப்படுவதைக் கேட்டிருக்கிறேன். 'லண்டன் தெருக்களில் ஆங்கில மொழியைக் கேட்பதே அரிதாகிவிட்டது' என்று சொல்வார்கள்!

இருபத்தோராம் நூற்றாண்டில் இதுபோன்ற சமுதாயங்களே உருவாகும். இந்தச் சமுதாய மாற்றத்திற்கேற்ப நம்முடைய அரசமைப்புகள் இருக்க வேண்டும்.

புதிய வார்ப்புச் சமுதாயங்களில் பெரும்பான்மை, சிறுபான்மை என்பதெல்லாம் பத்தாம் பசலித்தனமான அணுகுமுறைகளாகி விடும். பல நேரங்களில் எது பெரும்பான்மையின் கருத்து என்பதைக் கூடத் தீர்மானமாகச் சொல்ல முடியாது. ஒரு பொருளை எடுத்துக் கொண்டால், ஒன்றுக்கு மேற்பட்ட கருத்துகளுக்கு இடமளிக்கும் வகையில், சட்டங்களையும், விதிகளையும், திட்டங்களையும் உருவாக்க வேண்டிய நிலை ஏற்படும்.

ஓர் அரசுதான் இருக்க முடியும். ஆனால், அந்த அரசு ஒருதலைப் பட்சமாகவோ, ஒரு கட்சியின் கொள்கையை மட்டுமே சார்ந்தோ இருக்க முடியாது. மாற்றுக் கருத்துகளுக்கும், கொள்கைகளுக்கும், உணர்வுகளுக்கும் இடமளிக்க வேண்டும். எனவேதான், ஒரு கட்சி அரசை விட, சில கட்சிகள் இடம் பெறும் கூட்டணி அரசு உகந்தது, என்பது என்னுடைய கருத்து.

Checks and Balances என்று கேள்விப்பட்டிருப்பீர்கள். எதற்கும் வரம்புகள் வேண்டும். ஒவ்வொரு நாட்டிலும் வேறு வேறு உத்திகள் கையாளப்படுகின்றன. புதிய உத்திகள் மேற்கொள்ளப்படுகின்றன. அமெரிக்க ஜனாதிபதிக்கு அமெரிக்க நாடாளுமன்றம் வரம்புகளை விதிக்கிறது. இந்தியாவில் வரம்பில்லாமல் செயல்படும் அரசுகளுக்கு, உயர்நீதி மன்றங்களும் உச்சநீதி மன்றமும் வேலிகளை அமைக்கின்றன.

பெரும்பான்மை ஆதிக்க உணர்வுகளுக்கு எப்படி வரம்புகளை உருவாக்குவது என்பதைப் பற்றிச் சிந்திக்க வேண்டும். ஜனநாயகத்தின் முதல் விரோதி பெரும்பான்மையின் ஆதிக்கமே.

(தொடரும்)

செய்கின்றன.

கவிதாவில் நீங்கள் தேர்ந்தெடுக்க இரண்டு தேர்வுகள் உள்ளன. அவை i) க்யூமுலேடிவ் ii) நான்-க்யூமுலேடிவ். 1 ஆண்டு முதல் 5 ஆண்டுகள் காலவரம்பு வரை டெபாசிட்கள் செய்யலாம்.

எனவே கவலைகளுக்கு குட்பை சொல்லுங்கள் ஐடிபிஐயின் **கவிதா பிக்ஸெட் டெபாசிட்கள்** மூலம் **ஆனந்தத்துக்கு** ஹலோ சொல்லுங்கள்.

**பாதுகாப்பு மற்றும் உத்தரவாதத்துக்கான பந்தம்**




கிரிசிலின் "FAAA" ஃபிட்ச்-ன் "tAA+(ind)" மற்றும் இக்ராவின் "MAA+" மதிப்பீடு

- காலாண்டுதேர்வுக்கு ரூ. 25,000/- மற்றும் வருட மற்றும் க்யூமுலேடிவ் தேர்வுக்கு ரூ.10,000/- அதன்பின் ரூ.1,000/- ன் மடங்குகளில்.
- **மாத/காலாண்டு/வருட** அடிப்படையில் அல்லது க்யூமுலேட்டிவ் அடிப்படையில் வட்டி வழங்கப்படும்.
- வாரிசு நியமன வசதிகள் உண்டு.
- வருமான வரிச்சட்டம் 1961. பிரிவு 80-L ன் கீழ். ரூ.12,000/- வரை வரிச்சலுகை உண்டு.
- ரூ.5,000/- வரையிலான வருமானத்திற்கு வரிக்கழிவு (TDS) விலக்குண்டு.
- டெபாசிட்களுக்கு சொத்துவரியிலிருந்து விலக்கு உண்டு.
- வருமான வரிச் சட்டம், 1961 பிரிவு 11(5)ன் கீழ், மத/அறக்கட்டளைகளுக்கு முதலீடு செய்யத் தகுதியானது.
- உங்கள் நகரத்தில்/ஊரில் வட்டிக்கான / முதிர்வுக்கான காசோலைகளை அதே மதிப்பில் ரொக்கமாக்கிக் கொள்ளலாம்.
- வேண்டுகோளின் பேரில் ஆர்பிஐ ஈசிஎஸ் வசதி மூலம், வட்டியை உங்கள் வங்கிக் கணக்கில் நேரடியாக வரவு வைக்க முடியும்.



# இண்டஸ்ட்ரியல் டெவலப்மெண்ட் பாங்க் ஆஃப் இந்தியா

ஐடிபிஐ டவர், டபிள்யூடிசி காம்ப்ளெக்ஸ், கஃப் பரேடு, மும்பை - 400 005. தொ.: (022) 2216 3252, 2215 3628, 2216 1427. இணையதளம்: www.idbi.com

## மூத்த குடிமக்களுக்கு 0.5% வட்டி கூடுதலாக

கூடுதல் விபரங்களுக்கு தொடர்புகொள்க :: **பெங்களூர்**- விவியன் பிரிட்டோ -210 5047, 210 5335; **சென்னை**- ஆர். விஜயலட்சுமி -2230 1241; **கோயம்புத்தூர்**- ஜானகிராமன்-231 0262; **ஹைதராபாத்** - ராம்கிருஷ்ணா/பூர்ணிமா -2323 4870; **கொச்சி**-சாமுவேல் -231 2964; **மங்களூர்**- தனபாலன்-444 952; **விஜயவாடா**- டானியேல் சுதாகர் -257 1025; **விசாகபட்டணம்**- ஜிவிசி பாஸ்கர்-256 5067.

**ஆம், நான் கவிதா ஃபிக்ஸெட் டெபாசிட் பற்றி தெரிந்து கொள்ள விரும்புகிறேன்.** பெயர் : .................... வயது: ....................

முகவரி: ....................

தொ. எண்: .................... ஈ-மெயில் ஐடி: .................... இந்த கூப்பனை தபாலில் அனுப்பவும். திரு வெங்கடேஷ்வர்ஜெயந்தி, கவிதா ஃபிக்ஸெட் டெபாசிட், ஐடிபிஐ டவர், டபிள்யூடிசி காம்ப்ளெக்ஸ், கஃப்பரேடு, மும்பை - 400 005. தொ.: (022) 2216 3252, 2216 1427, 2215 3628. இணையதளம் : www.idbi.com

# கண்களைப் பறிக்கும் ஊழல் வெளிச்சம்!

சூரிய ஒளி, காற்று, தாவர உயிர் சக்தி ஆகியவற்றைக் கொண்டு உற்பத்தி செய்யப் படும் மின் திட்டங்கள், எரிசக்திக் கருவிகள் ஆகியவற்றுக்கு மத்திய அரசு முன்னுரிமை கொடுத்து வருகிறது. இதற்காக அமைக்கப்பட் டது தான் மத்திய அரசின் மரபு சாரா எரிசக்தி அமைச்சகம். மரபு சாரா முறையில் மின் சக்தியை உற்பத்தி செய்து, பயன்படுத்துவதன் மூலம், நிலக்கரி, நீர் மின்சாரத்தின் தேவைகள் குறைக்கப்படுவதுடன் சுற்றுச் சூழல் பாதுகாப் பும் நிலை நிறுத்தப்படும் என்கிற எதிர்பார்ப் பில் தொடங்கப்பட்டது இவ்வமைச்சகம்.

ஒவ்வொரு ஆண்டும் கோடிக்கணக்கில் மூலதன மான்யங்களையும், வட்டி மான்யங் களையும் கொடுத்து, மரபு சாரா எரிசக்தி திட்டங்களை ஊக்குவித்து வருகிறது மத்திய அரசு. இந்தத் திட்டங்களில் ஒன்றான சூரிய ஒளி வீட்டு விளக்குகள் போட்டதில் தான், கோல்மால்களும் குளறுபடிகளும் அரங்கேறி யிருக்கின்றன. விசாரித்தால் ஷாக் அடிக்கும் தகவல்கள்!

சூரிய ஒளி மின் குழல் விளக்குகள் தயாரிப் பதற்குத் தமிழ்நாட்டில் ஒரு டஜன் நிறுவனங் கள் இருந்தாலும், இரண்டு, மூன்று நிறுவனங் களே இந்த விவகாரத்தில் "சுறுசுறுப்பாக" இருக்கின்றன. ஒவ்வொரு ஆண்டும் மத்திய அரசின் மரபு சாரா எரிசக்தித் துறை "இத் தனை சூரிய ஒளி வீட்டு விளக்குகளுக்கு மான்யம் தருவதாக இருக்கிறோம்" என்று மாநிலங்களுக்குக் குறியீடு நிர்ணயித்து, மான் யம் ஒதுக்குகிறது. தமிழ்நாட்டைப் பொறுத்த வரை, தமிழ்நாடு எரிசக்தி வளர்ச்சி நிறுவனம் மத்திய அரசின் மரபுசாரா எரிசக்தித் துறை யுடன் இணைந்து செயல்பட்டு வருகிறது. எரி சக்தி நிறுவனம் பயனாளிகளை அடையாளம் காணும் பொருட்டுத் திட்டத்தைச் சொல்லி விளம்பரமும் செய்திகளும் பத்திரிகைகளில் வெளியிடுகிறது. ஆனால் செய்தி சரியாகப் போய்ச் சேராத நிலையில் பயனாளிகள் வருவதில்லை. இந்த இடத்தில்தான் அந்தச் சாதனத்தை உற்பத்தி செய்யும் நிறுவனங்கள் களத்தில் குதிக்கின்றன.

அவை பயனாளிகளைக் 'கண்டு பிடித்து' வீட்டு விளக்குகள் போட்டதாக எரிசக்தி நிறுவனத்துக்குச் சொல்கின்றன. "பயனாளிகள்" இருபது ரூபாய் ஸ்டாம்பு பத்திரத்தில் தங்கள் வீட்டில் விளக்கு போடப்பட்டிருப்பதாக உறுதி மொழி கொடுக்க வேண்டும். எல்லா நடை முறைகளும் கனகச்சிதமாக செய்யப்பட்டு, மான்யத் தொகை கறக்கப்பட்டு விடுகிறது. குறிப்பிட்ட முகவரியில் விளக்கு போடப்பட் டிருக்கிறதா என்பதைச் சோதனை செய்யும் பொறுப்பு எரிசக்தி நிறுவன அதிகாரிகளுக்கு உண்டு. ஆனால் மாநிலம் முழுவதும் மூலை முடுக்கில் வீடு, வீடாகச் செல்ல முடியாத அளவுக்கு, அதிகாரிகள் பற்றாக்குறை, வேலைப்பளு.

ஆகவே செக்கிங் பணி, மாவட்டங்களில் உள்ள திட்ட அதிகாரிகளுக்குக் கொடுக்கப்படு கின்றது. அவர்கள் வருவாய்த் துறை அதிகாரி களைப் பயன்படுத்திக் கொள்கிறார்கள். அவர் களது ரிப்போர்ட் வரும் முன்பே, ஐம்பது சதவிகித மான்யம் கொடுக்கப்பட்டு விடுகிறது! "இன்ஸ்பெக்ஷன்" பார்ட்டிகளைக் கவனிக்க வேண்டிய விதத்தில் கவனித்து ரிப்போர்ட் டைப் பெற்று, மீதம் உள்ள ஐம்பது சதவிகிதம் மான்யத்தையும் கறந்து விடுகின்றன நிறு வனங்கள். ஒரு பதினெட்டு வாட் குழல் மின் விளக்கின் விலை ஒன்பதாயிரம் ரூபாய். அதில் மத்திய அரசு மான்யம் மூவாயிரம் ரூபாய். போலிப் பயனாளிகளைப் பட்டியல் போட்டு விளக்குகளுக்கான மான்யத் தொகை முழுவதையும் பெற்று விடுகிறார்கள். பயனாளி களை அடையாளம் கண்டு பிடிப்பது முதல், மான்யத்தைக் கொடுத்து முடிப்பது வரை எந்த அலுவலகம் மீதோ, அல்லது தனிப்பட்ட நபரின் மீதோ குற்றம் சுமத்த முடியாதபடி, படு நழுவலாக 'கடமைகள்' வரையறுக்கப்பட் டிருக்கின்றன.

இந்த விவகாரத்தில் ஊழல் நடைபெற் றிருக்கிறது என்பதற்கு ஒரே ஒரு உதாரணத்தை மட்டும் இங்கே எடுத்துக் காட்டுகிறோம். கரூர் மாவட்டம், செங்குந்தபுரம் ஆறாவது குறுக்குத் தெருவில் 69ம் எண் உள்ள வீட்டில், எஸ். நாரா யணன் என்பவர் சூரிய ஒளி வீட்டு விளக்கும் போட்டிருக்கிறார் என்று ஒரு நிறுவனம் சொல்லி மான்யம் பெற்றது. ஆனால் திட்ட அலுவல் அதிகாரிகள் அந்த முகவரிக்குச் சென்று விசாரித்தபோது, அப்படிப்பட்ட நபர்

ஒருவர் அங்கில்லை என்ப தும், அந்த முகவரியில் சூரிய ஒளி வீட்டு விளக்குகள் எதுவும் அமைக்கப்படவில்லை என்பதும் 'பளிச்சென்று' தெரிய வந்தது. இந்தத் தகவலை திட்ட அலுவலர் (கடித எண் அ.8/7189/2003 1.10.2003)





# கண்ணப்பன் இலாகாவில் ஒரு பகீர்!

சம்பந்தப்பட்டவர்களுக்குத் தெரியப்படுத்தி யுள்ளார்.

2001 - 02 மற்றும் 2002-03ம் ஆண்டுகளில் தமிழ்நாட்டில் சூரிய ஒளி வீட்டு விளக்கு களுக்கு மான்யம் தருவதாக மத்திய அரசு நிர்ணயித்த டார்கெட், ஆயிரத்து நானூறு விளக்குகள். இதில் நாம் எடுத்துக் காட்டியது ஒரு சோறுதான். எத்தனை இடங்களில் போடப்பட்டதாகக் கணக்குக் காட்டப்பட்டு மான்யம் பெறப்பட்டிருக்கிறது என்பது, பார பட்சமற்ற விசாரணையில் தான் தெரிய வரும்.

சூரிய ஒளி வீட்டு விளக்குக்கு மட்டுமல்ல, சூரிய ஒளி தெரு விளக்கு, சூரிய சக்தி அடுப்பு கள், காற்றாலைகள், பயோ கேஸ் மின் உற்பத்தி ஆகியவற்றுக்கும் மத்திய அரசின் மான்யம் கிடைக்கிறது. போலிப் பயனாளிகளை அடை யாளம் காட்டி, கொள்ளையடிக்கும் நிறுவனங் களைக் கறுப்புப் பட்டியலிடக் கூட மத்திய, மாநில அரசுகளால் முடிவதில்லை. பணம் கீழி லிருந்து மேல் வரை சரியான விகிதத்தில் பாய் வதால், விஷயம் கமுக்கமாக வைக்கப்பட் டிருக்கிறதாம்.

இது தமிழ்நாட்டைப் பொறுத்த விஷயம் மட்டுமல்ல. நாடு முழுவதும் இந்தத் திட்டங்கள் செயல்படுத்தப்படுகின்றன. ஓரளவு விழிப் புணர்வுள்ள தமிழ்நாட்டிலேயே கோல்மால்கள் நடக்கும்போது, பீகார், உ.பி. மாநிலங்களில் இந்தத் திட்டம் எப்படிச் செயல்படுமோ என்று நினைத்தால் பகீரென்கிறது.

"பொடா' விவகாரத்தில் மாட்டிக் கொண் டிருக்கும் மத்திய மரபு சாரா எரிசக்தித் துறை அமைச்சரான கண்ணப்பனுக்கு, இந்த 'மான்ய' ஊழலைத் தட்டிப் பார்க்க நேரமும், ஆர்வமும் இருக்குமா என்பது தெரியவில்லை. ஆனால் மத்திய அரசு சீரியஸாகக் கவனிக்க வேண்டிய விவகாரம் இது என்று சொல்லத் தேவையில்லை.

- சஞ்சயன்



ஷாம்

# கடவுள் அனுப்பிய கதாநாயகி!

**ப**டம் வெளிவரும் முன்பே, பசைபோல் ஒட்டிக் கொண்டு தமிழ் ரசிகர்களைப் பேச வைத்திருக்கிறார் 'இயற்கை' பட நாயகி குட்டி ராதிகா.

படத்தின் ஹீரோ ஷாமிடம் அவரைப் பற்றி புலன் விசாரணை செய்தால், புட்டுப்புட்டு வைத்து விடப் போகிறார் என்று பிடித்தோம். மனிதர் அப்ரூவராகி குட்டி ராதிகாவைப் புகழ்ந்து தள்ளிவிட்டார் போங்கள்.

"'கதாநாயகியைப் பற்றி முதல் நாள் படப்பிடிப்பு வரையில் சொல்லமாட்டேன். அதற்கு ஒரு காரணமிருக்கிறது. அதற்காக பரவை முனியம்மாவை உங்களுக்குக் கதாநாயகியாகப் போட்டுவிடமாட்டோம். கவலைப்படாமல் இருங்கள்' என்றார் இயக்குனர். பொறுமையாக இருந்தேன். படத்தின் முதற்கட்டப் படப்பிடிப்பு அந்தமானில் தொடங்கியது. இயக்குனர் என்னிடம் வந்தார். 'படத்தின் முதல் காட்சியை எடுக்கப் போகிறோம். சரக்குக் கப்பலில் வேலை செய்யும் மாலுமியான நீங்கள், தமிழகத்தின் கரையைத் தரிசிப்பதற்காக கப்பல் முனையில் பைனாகுலருடன் நின்று கொண்டிருக்கிறீர்கள். கப்பல் கரையை நெருங்கும்போது, லைட் ஹவுஸ் தெரியும். அதன்மேல் கதாநாயகி நின்று கொண்டிருப்பார். அவரின் முகத்தைக் கூர்ந்து நோக்குகிறீர்கள். அவளது மனம் உங்கள் மனக் கேமராவில் பதிகிறது. இந்தக் காட்சியை நாங்கள் படமாக்கப் போகிறோம். கப்பல் நெருங்க நெருங்க, கதாநாயகி எப்படி என்று நீங்களே பார்த்துத் தெரிந்து கொள்ளலாம்' என்றார்.

எனக்கு மனம் படபடவென்று துடிக்க ஆரம்பித்துவிட்டது. வாக்கி டாக்கியில் இயக்குனரின் உத்தரவு வர, எனது கப்பல் துறைமுகத்தை நோக்கி நகர ஆரம்பித்தது.

"லைட் ஹவுஸ் தெரிய ஆரம்பித்தது. இயக்குனரிடமிருந்து உத்தரவு பெறும் முன்னரே பைனாகுலரில் பார்த்தேன். மங்கலாய் ஓர் உருவம். கப்பல் மேலும் கொஞ்சம் நெருங்கியதும் இயக்குனரிடமிருந்து கட்டளை வந்தது. பைனாகுலரை ஸூம் செய்தேன். ஒரு கணம் உடல் சிலிர்த்துவிட்டது. நான் எதிர்பார்த்த முகம் போல் இல்லாமல், வசீகர அழகோடு சிறகில்லாத தேவதையாக, குட்டி ராதிகாவைப் பார்த்தபோது நான் நடிப்பதாக உணரவில்லை. வாழ்க்கையின் மாறுபட்ட சூழ்நிலையில், ஒரு பெண்ணைச் சந்திப்பது போன்று உணர்ந்தேன். அந்தக் காட்சியில் இயல்பாகப் பதிவான எனது மன உணர்ச்சிகளை உடன் டி.வி. திரையில் போட்டுப் பார்த்தோம். எல்லோரும் கை தட்டினார்கள். 'இதற்காகத்தான் கதாநாயகியை மறைத்தேன். இனி அறிமுகப்படுத்திக் கொள்ளுங்கள்' என்று தொழில் ரகசியம் உடைத்தார் இயக்குனர்.

"அதன் பிறகு ராதிகாவும் நானும் தோழர்கள் ஆனோம். எப்பொழுதாவது சரக்குக் கப்பல்கள் வந்து போகிற ஓர் இயற்கைத் துறைமுகத்திற்கு அருகிலுள்ள கிராமத்துப் பெண்ணின் பாத்திரம் ராதிகாவுக்கு. நீண்ட நாட்களாகக் கப்பலில் பயணம் செய்து விட்டு, கரையைத் தொடும்போது புளிப்புச் சுவை மிகுந்த பொருட்களைக் கண்டுவிட்டால், மாலுமிகள் அதை வாங்கி ருசிப்பது உண்டு. இந்த ரகசியத்தைத் தெரிந்து வைத்திருக்கும் துறைமுக கிராமத்துச் சிறுவர்களும், குட்டி ராதிகாவும், கையில் மாங்காய், நெல்லிக்காய் போன்றவற்றோடு சிறு படகுகளில் வந்து சரக்குக் கப்பலுக்கு ஏறி மாலுமிகளுக்கு அவற்றைக் கொடுக்கிறார்கள். அதற்கு ஈடாக அவர்களிடம் இருக்கும் கைக்கடிகாரம், லைட்டர்கள், சென்ட் பாட்டில்களைக் கொடுப்பார்கள். இப்படித்தான் திரைக் கதையில் எனக்கும் ராதிகாவுக்கும் முதல் சந்திப்பு. ராதிகாவுடனான காட்சிகளில் நடிக்கிற போதெல்லாம், கடவுளே எனக்கு அனுப்பிய கதாநாயகி என்பது போன்ற உணர்வு வந்து கொண்டேயிருக்கும்" என்கிறார் ஷாம்.

–குட்டி ராதிகா பற்றி ஷாம்!

**- ஸ்ரீ சக்கரம்**

அட்டை, படங்கள் :
**'இயற்கை' படத்திலிருந்து**




## மணி சண்டை அய்யர்!

நாகப்பட்டிணத்தில் நடந்த தமிழக அரசின் வளர்ச்சிப் பணிகள் துவக்க விழா ஒரு குழாயடிச் சண்டையாக மாறியது தமிழ்நாட்டின் துரதிர்ஷ்டம். இந்திய அரசியல் ஒரு விபரீத திருப்பு முனையில் இருப்பதையே இந்த துர்ச்சம்பவம் உணர்த்துகிறது.

"நடந்துள்ள எல்லாமே நான் ஒரு கண்ணியமான பெண்மணி என்பதையும், மணி சங்கர் அய்யர் ஒரு கனவான் அல்ல என்பதையும்தான் உணர்த்துகின்றன" என்று தமிழக முதல்வர் தமது நீண்ட விளக்கத்தில் 'தீர்ப்பு' கூறியிருக்கிறார்.

ஓர் அரசு விழா இவ்வாறு இரு தனி நபர்களின் நடத்தை குறித்த விவாத மேடையாக மாற அனுமதிக்கப்பட்டிருக்கிறது.

ஜெயலலிதாவைப் பற்றி டெலிகிராஃப் பத்திரிகையில் மணி சங்கர் அய்யர் அவதூறாக எழுதியது கண்டனத்துக்குரியது. எனினும் அதைச் சுட்டிக் காட்டி, அவரை நோக்கிச் சவால்விட, முதல்வர் விழா மேடையைத் தேர்ந்தெடுத்ததும் முறையல்ல.

"தமிழர்கள் யாருமே நான் எழுதியதைப் படித்திருக்க மாட்டார்கள் ; ஜெயலலிதா இப்போது அதை நினைவூட்டி தமிழ்நாடு முழுவதும் எல்லோருக்கும் தெரியும்படி பண்ணிவிட்டார்..." என்று மணி சங்கர் அய்யர் சொல்வதோ, தமது அவதூறு எழுத்துக்கு



கல்கி



2003 அக்டோபர் 26
சுபானு ஐப்பசி 9
மலர் : 62
இதழ் : 13

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.

ஒப்புதல் வாக்குமூலமாகவே இருக்கிறது!

"அய்யர் தமது சொந்தக் கட்சிக்காரர்களாலேயே தாக்கப்பட்டிருக்கக் கூடும்" என்று காங்கிரஸின் கோஷ்டிப் பூசல்களை அடிக்கோடிடும் வகையில் ஜெயலலிதா பேசியிருப்பது நம்புவதற்கு எளிதல்ல.

அரசின் வளர்ச்சிப் பணிகள் துவக்க விழாவில் மணி சங்கர் அய்யர் அனாவசியமாகக் காவிரிப் பிரச்னையை இழுத்து, மூக்குடைபட்டிருக்க வேண்டிய அவசியமும் இல்லை.

ஒலி பெருக்கியின் முன் நடத்தப்பட்ட தாக்குதல்கள் தவிர, மேடையில் நேருக்கு நேர் வேறு வாயடி தந்திருக்கிறார் மணி சங்கர் அய்யர். 'பேசப்பட்ட வார்த்தைகள் கேவலமானவை ; அவற்றைச் சொல்ல வாய் கூசுகிறது' என்கிறார் முதல்வர். காளிமுத்துவை சாட்சிக்கு அழைக்கிறார். அய்யரோ, 'என்ன பேசினேன் என்பதை நான் ஏன் சொல்ல வேண்டும்? வேண்டுமானால் ஜெயலலிதாவே சொல்லட்டும்' என்கிறார். ஆகக்கூடி, விழா மேடை தனிப்பட்ட விரோத மேடையாக மாறியதை, இருவருமே பகிரங்கமாக ஒப்புக் கொள்கிறார்கள்.

'அவர் பாண்டிச்சேரியில் தாக்கப்பட்டால் தமிழக அரசு எவ்வாறு பொறுப்பாக முடியும்? துளிக்கூட காயமின்றிக் காணப்படும் மணி சங்கர் அய்யர், தாம் தாக்கப்பட்டதாக எவ்வாறு சொல்கிறார்?' என்றெல்லாம் ஜெ. கேள்வி எழுப்ப, தமது உயிருக்கே ஆபத்து வந்துள்ள போதிலும் தாம் அரசிடம் பாதுகாப்புக் கோரப்போவதில்லை என மணி சங்கர் அய்யர் சவடாலாகப் பேச, உடனே காங்கிரஸின் சகல கோஷ்டியினரும் அடித்துக் கொள்வதையெல்லாம் மறந்து, ஒன்றுகூடி அவருக்கு ஆதரவு தர... எதிர்க்கட்சித் தலைவர் மு.கருணாநிதி, தாக்குதலுக்குக் கண்டனம் தெரிவிக்க, மணி சங்கர் அய்யர் அவரைச் சந்தித்து, தமது தரப்பு வாதத்தைக் கூறி அனுதாபம் பெற...

சுயநலம் மிக்க இந்த நாடகத்தில் அரசியல் நாகரிகம், பண்பாடு ஆகியவை காற்றில்



பறக்க விடப்பட்டுள்ளன. தார்மிக நெறிகளும் மனிதப் பண்புகளும் அவமதிக்கப்பட்டுள்ளன.

வாக்களித்த மக்களுக்கும் வரி செலுத்தும் மக்களுக்கும் இத்தகைய நிகழ்வுகளில் என்ன கிடைக்கிறது...? பத்தி பத்தியாகச் செய்திகள், அறிக்கைகள், மறுப்பறிக்கைகள் என்று பத்திரிகைகளிலும் தொலைக் காட்சியிலும் படிக்க, பார்க்க, விஷயம் கிடைக்கிறது.

தாங்கள் வியக்கும், போற்றும் தலைவர்களின் நடத்தை, பேச்சு, வாதம், விதண்டாவாதம் அனைத்திலிருந்தும் அனாவசிய வேண்டாத, தவறான முன்னுதாரணங்கள் பின்பற்றக் கிடைக்கின்றன.

சகிப்புத்தன்மை குறைந்து ரௌடித்தனம் மலிந்துள்ள அரசியல் சூழலில், திரும்பத் திரும்ப சகிப்புத் தன்மையைச் சீண்டிப் பார்த்துச் சவால்விடும் அபாயகரமான விளையாட்டு, அரசியல் அரங்கை மலினப்படுத்துகிறது. வன்முறையை மேலும் வளர்க்கிறது.

அரசியல்வாதிகளின் **Public conduct**இல் உள்ள தவறான முன்னுதாரணம் ஒரு பக்கம் ; வன்முறைக்குக் கிடைக்கும் மறைமுகமான அங்கீகாரம் இன்னொரு பக்கம்...

விளைவு...? படித்த, பண்பட்ட மூத்த வாக்காளர்கள், 'ஐயோ! காந்தியும் நேருவும் பட்டேலும் ராஜாஜியும் ஆஸாத்தும் அரும்பாடுபட்டுப் பெற்றுத்தந்த சுதந்திரம் - ஜனநாயகம்... இந்த நாலாந்தர அரசியல்வாதிகளிடம் சிக்கிச் சீரழிகிறதே' என்று வருந்துகிறார்கள்.

இதைக் காட்டிலும் அவமானம் இன்றைய தலைவர்களுக்கு வேறென்ன இருக்க முடியும்?

முதல் தலைமுறை எழுத்தறிவு பெற்ற புதிய வாக்காளர்களோ, அரசியல் என்றாலே இத்தகைய அநாகரிகமான தனி நபர் தாக்குதல்தான் என்ற நிலையை அப்படியே ஏற்கிறார்கள்.

இதைக்காட்டிலும் அபாயம் இந்த நாட்டுக்கும் நமது ஜனநாயகத்துக்கும் வேறு என்ன இருக்க முடியும்? ●

# ஸ்கேனிங்

கண்கள்?

கவிதை

கவிதை?

நிலைக் கண்ணாடி



வாகனம்?

அண்ணாமலை சைக்கிள்

பயணம்?

நாடோடிதான்!

தனிமை?

கொலையாளி

கோபம்?

இரண்டு நிமிட இம்சை

ரகசிய நாடு?

செஷல்ஸ் தீவு

அந்தக் கள்வன்?

இதயம் சேஃப்டி லாக்கரில் இருக்கிறது

ஆகாயம்?

தொட்டு விடலாம்

நிலவு?

நிறைய வர்ணித்து விட்டார்கள்

தாலாட்டு?

கேட்டிருக்கிறேன்

## காயத்ரி ரகுராம்

ஆண்கள்?

தோழர்கள்

பயம்?

தண்ணீர் லாரி

ஆசை?

மவுண்ட் ரோட்டில் நடனம்

ருசி?

புளியங்காய்

அழகு?

அக்கா (சுஜா)

அழகான எதிரி?

நானேதான்

மறக்க முடியாதது?

உடனேயே மறந்து விடுவேனே! நீங்க யார்?

—மொக்கரா

# வின்னர்

**பிட்ச் ரிப்போர்ட்:**
மூளையைப் போட்டு அதிகம் குடையாமல் பாதி காமெடியும் பாதி ஃபைட்டுமாக படம் பார்க்க நினைப்பவர்களுக்கு ஓ.கே

**மைதானம்:**
உறவினர் வீட்டுக்கு வருகிறார் ஹீரோ பிரசாந்த். பக்கத்திலிருக்கும் இன்னொரு உறவினர் வீட்டுக்கு வருகிறார் கிரண். காதல் பற்றிக் கொள்ள, கிரணின் பெற்றோருக்குத் தெரிய வருகிறது. பிரச்னை. கிளைமாக்ஸில் 'ஜெயம்' ஸ்டைல் காட்சி மாதிரி கைப்பிடிக்கிறார்கள் இருவரும்.

**பேட்டிங்:**
ஹீரோ பிரசாந்த்தான் என்றாலும், டிராவிட் மாதிரி டபுள் செஞ்சுரி அடிப்பவர் வடிவேலுதான். தாதா ரேஞ்சில் ரியாஸ்கானிடம் முறைத்துவிட்டு கடைசியில் நார் நாராய் சட்டை கிழிந்து வரும் ஆரம்பக் காட்சியிலிருந்து, படம் முடியும்வரை சிக்ஸராய்ப் பிளக்கிறார் வடிவேலு. நீண்ட நாட்களுக்குப் பிறகு பிரசாந்த் அடிதடியில் நன்றாக மிரட்டுகிறார்.

**பௌலிங்:**
இதில் கிரண் நடிக்கவும் செய்திருக்கிறார் என்பது ஆறுதல். கல்யாண வீட்டில் காதலைச் சொல்ல வரும் பிரசாந்திடம், 'கல்யாணப் பெண்ணே நான்தான்' என்று தடலாடியாக கிரண் டைவ் அடிக்க, எதிர்பாராத திருப்பம். ஆனால் அடுத்த சில காட்சிகளிலேயே 'சும்மா சொன்னேன்' என்கிறபோது சப்பென்றாகி விடுகிறது.

**கோச்:**
இயக்குனர் சுந்தர்.சி காமெடி மட்டும் போதுமென்று நினைத்து விட்டாரோ என்னவோ? நான்கைந்து டாடா சுமோக்கள், அதில் வௌவால் மாதிரி கையில் நாட்டுத் துப்பாக்கியுடன் தொங்கிக் கொண்டு கிரணின் அப்பா வருவது, படா காமெடியாக இருக்கிறது.



**அவார்டு:**
'மேன் ஆஃப் தி மேட்ச்' அவார்டை நடிகர் வடிவேலுக்கு அளிக்கிறான் மொக்கராசு.

- மொக்கராசு



எங்க வீட்டுப் பசங்க சரியான வாலுங்க. சீரியல் பார்க்கவே விடமாட்டானுங்க.


# மெதுவா சிரிங்க!





பத்த வெச்ச உடனேயே மெகா சைஸ் ராக்கெட்டா மாறிடும்னு சொன்னேனே!




தீபாவளி நாள்ல நகர்வலம் வேண்டாம்னு சொன்னேன், கேட்டீங்களா மன்னா?


— அப்பு

# மதுராபுரி அம்பிகையே!

ஆனந்தி

1

"மாடுகட்டிப் போரடிச்சா
மாளாது செந்நெலென்று
ஆனைகட்டிப்போரடிக்கும்
அழகான தென்மதுரை."

நான் மாடக் கூடல் என்று புகழ் பெற்ற அழகான மதுரைப் பகுதியில் நமது தல யாத்திரையைத் தொடங்குவோம்.

தமிழ் வளர்த்த மதுரை, பக்தியை வளர்த்த மதுரை, வீரம் வளர்த்த மதுரை, வளம் கொழிக்கும் மதுரை, அங்கயற்கண்ணி அரசாண்ட மதுரை, சங்கம் செழித்த மதுரை.

இன்றும் மதுரை மாநகரில் ஏதோ ஒரு அழகு, ஒரு கலகலப்பு, இரவும் பகலும் மக்களிடையே ஒரு சுறுசுறுப்பு இருப்பதைக் காணலாம். ஆண்டு முழுவதும் உற்சவ நாட்கள்தான். தேவி மீனாக்ஷி அரசாளும் நாடல்லவா?

கோபுர வாசலில் இறங்கியதுமே மல்லிகைப் பூவின் மணம் நம் உடல் முழுவதும் பரவுவது போல் தோன்றும். பிராகாரத்தில் உள்ள அங்காடிகளைப் பார்த்தால் நவராத்திரி கொலுவைப் போலத் தோன்றும். கம்பத்தடி மண்டபத்தில் நின்று, அங்கே உள்ள புகழ் பெற்ற சிற்பங்களை எல்லாம் பார்க்கும்போது புளகாங்கிதம் அடைவோம். நமது நாட்டுச் சிற்பிகளின் கை வண்ணத்தையும், திறமையையும் எண்ணித் தோள்கள் விம்மிப் பூரிக்கும்.



• சுந்தரேசுவரர்

அழகு வடிவமாக, தேவர்களால் அலங்கரிக்கப்பட்டு சுந்தரேச்வரராக, அம்பிகையின் அழகுக்குத் தான் குறைந்து விடக் கூடாதென்று, அழகிய மணவாளனாக மதுரை வந்த சிவபெருமான் சந்நிதி.

பாடல் மறையும் தெளியாப் பரமன்
கூடல் கோயில் கொண்டான் என்னே?

ஆகா! இந்தத் தலத்தின் பெருமைதான் என்ன? வேதங்கள் தேடித் தேடி அலைந்தும் புரிந்து கொள்ள முடியாத ஈசன், பனிச் சிகரங்களின் குளுமையில் தவம் செய்து கொண்டிருந்த பரமன், இந்தக் கூடலில் வந்து வசிக்கின்றானே! இது என்ன அதிசயம்? இந்தக் கூடல் எப்படிப்பட்ட புண்ணிய பூமியாக இருக்க வேண்டும்? மாதேவி மீனாக்ஷியின் ஆளுகைக்குட்பட்ட தலமல்லவா?

கூடல் போலக் கொடியேன் அகமும்
ஆடல் அரங்கா அமர்ந்தான் என்னே!

அந்த அதிசயத்தோடு முடியவில்லை. ஸப்த மேகங்களும் கூடிப் பன்னீர் தெளிக்கும் அந்தக் கூடலில் குடிகொண்டவன் கொடியனான என்னுடைய உள்ளத்தைத் தான் ஆடுவதற்கு ஏற்ற அரங்கமாகச் செய்து கொண்டுவிட்டானே! என்று வியக்கிறார் பக்தர். ஈசன்



* மீனாக்ஷி

தன் உள்ளத்தில் புகுந்து நடனமாடத் தொடங்கிய அற்புதத்தை வியக்கிறார். பக்தி மேலீட்டால் வியப்பு. அடியாருடைய சித்தம் ஈசனின் அருளை எண்ணி உருகுகிறது. தன்னுடைய மனத்தில் கூட சிவ பெருமான் குடி கொண்டு விட்டாரே. தன்னுடைய சித்தாகாசத்தில் அற்புதமாக ஆடத் தொடங்கிவிட்டாரே என்று வியக்கிறார். தன் உள்ளத்தில் பிறந்துவிட்ட பக்தியை ஈசனுடைய அருளாகவே பார்க்கின்ற நிலை.

கருத்தை நிறைத்து மனத்தைச் சொக்கவைக்கும் சொக்கேசருடைய சந்நிதியிலேயே இருந்து கவிதையை, அனுபவிக்க வேண்டும். நம்முடைய உள்ளத்திலும் சிவபெருமான் நடன ராஜனாகக் குடியேறி அமர்ந்து விடுவார்.

இரவு பூஜையெல்லாம் முடிந்து சொக்கருடைய திருவடிகளின் பாதுகைகள் சின்னஞ்சிறு பல்லக்கில் வைக்கப்படுகின்றன. முன்னும் பின்னும் அடியார்கள் குழாம் சூழ, சொக்கர் அம்பிகையின் கோயிலுக்குச் செல்கிறார். திரையிட்ட பல்லக்கு ஆடி அசைந்து செல்வது சொக்கரின் மகிழ்ச்சியை, ஆவலைத் தெரிவிப்பதாகத் தோன்றுகிறது.



அகிலாண்ட கோடி பிரும்மாண்ட நாயகியான பேரரசி அங்கயற்கண்ணியின் சந்நிதி. மூக்குத்தி ஸேவை நடக்கிறது. நாள் முழுவதும் அடியார்களுக்குத் தரிசனம் கொடுத்து, அன்பர்களின் குறைகளைக் களைந்து, அருள் புரிந்த களைப்பு. திவ்யாபரணங்களைச் சுமந்த இளைப்பாகவும் இருக்கலாம். அம்பிகையின் கையில் தாங்கிய கிளி கயற்கண்ணியின் கண்களைப் பார்த்து, "இன்று போதுமே! சற்று இளைப்பாறலாமே." என்று சொல்கிறது. அம்பிகையின் புன் சிரிப்பும், விளக்குகளின் ஒளியில் மின்னும் ஆபரணங்களும், அழகுக்கு அழகு செய்கின்றன. பொன் சரிகை வேய்ந்த வெண்பட்டாடை உடுத்தி சுவாமியின் வருகைக்காகக் காத்திருக்கிறாள். இளைப்பாறப் போகும் தேவியின் மூக்குத்தியைக் கழற்றி வைக்கிறார். வெண்ணிற மல்லிகை மாலை அணிந்து எளிய தோற்றத்தில் காட்சியளிக்கிறாள் ராஜமாதங்கி.

பல்லக்குடன் வந்த கட்டியக்காரர் கையில் தண்டத்துடன் கட்டியம் கூறிவிட்டு "சுவாமி வந்தாரம்மா!" என்று அறிவிக்கிறார். திரை போடப்படுகிறது. இந்த அழகிய தரிசனத்தைக் கண்டவர்கள், மனத்திலிருந்து இந்தக் காட்சி என்றும் மறையாது. சிவனும் சக்தியும் ஒன்றாகச் சேர்ந்து அகில சராசரங்களையும் புரக்கும் காட்சி. இந்த மூக்குத்தி சேவை கட்டளை, காரைக்குடி கோவிலூர் மடத்தாரால் செய்

யப்பட்டு வருகிறது. காணக்கண் கோடி வேண்டும்.

அதன் பிறகு பல்லக்கிலிருந்து சுவாமி இறங்கி அம்பிகை வீற்றிருக்கும் மண்டபத்திற்குச் செல்கிறார். இருவரையும் சேர்ந்து மனக் கண்களில் அம்மையப்பனாகத் தரிசிக்கிறோம். சயனக்ருஹத்தில் பூஜை நடக்கிறது. பால் நைவேத்யம் செய்கிறார்கள். கவரி வீசி, சாமரம் வீசி, பன்னீர் தெளித்து பூஜை முடிவடைகிறது. மறு நாள் தான் மீண்டும் தரிசனம். நைவேத்யம் செய்த பாலைப் பிரஸாதமாகத் தருகிறார்கள். அடாடா! தேவாம்ருதம் என்பது இப்படித்தான் இருக்குமோ? என்று எண்ணமிடுகிறோம். அம்பிகையின் அருட் கண் பார்வையின் விசேஷமா! அவர்கள் அருந்திச் சுவைத்த விசேஷமா! பாலின் சுவையும் மணமும் பிரஸாதம் என்ற நினைவும், நம் நாவையும் நெஞ்சையும் நிறைக்கிறது. அந்தச் சுவையில் மயங்கியிருக்கும்போது, மதுராபுரி அம்பிகை மாலையின் சில அடிகள் நினைவுக்கு வருகின்றன :

*திருவே! விளைந்த செந்தேனே!*
*வடியிட்ட தெள்ளமுதின்*
*உருவே! மடப்பிள்ளை ஓதிமமே!*
*ஒற்றை ஆடகப் பூந்*
*தருவே! நின் தாமரைத் தா*
*ளே சரணஞ்சரணங் கண்டாய்!*
*அருவே! அணங்கரசே!*
*மதுராபுரி அம்பிகையே!*

அம்பிகையின் வடிவமே தெள்ளமுதாகத் தான் இனிக்கிறது. அங்கயற்கண்ணியை தூய வெண்மை நிறமுடைய இளம் அன்னத்திற்கும், பொன்னாலாகிய கற்பக விருக்ஷத்திற்கும் ஒப்பிடுகிறார் குலசேகர பாண்டியன். (இவர் எந்தக் காலத்தவர் என்பது தெரியவில்லை).

மதுராபுரி அம்பிகையிடம் சரணடைகிறார். மூக்குத்தி சேவையின்போது, மதுராபுரி நாயகியை தூய வெண்பட்டுச் சேலையில் காணும்போது "மடப்பிள்ளை ஓதிமமே" என்ற சொற்றொடர் நினைவுக்கு வருகிறது. அத்வைத சித்தாந்தத்தின் உருவாகவும் 'ஹம்ஸம்' விளங்குகிறது ''ஸோஹம்'', அது - நான் என்ற பேதமற்ற நிலையே ஹம்ஸம் என்ற குறியீடாக ஆகிவிடுகிறது. அதனால்தான் ஜகன்மாதாவை உள்ளம் என்ற ஏரியில், ஹம்ஸ வடிவமாகத் தாங்குபவர்களை பரமஹம்ஸர் என்று சொல்கிறோம். பக்தி என்ற வெள்ள நீரில் நீந்தும் அன்னப் பறவை தேவி மீனாக்ஷி, தண்ணீரில் மிதந்தாலும் நீர் மேலே ஒட்டுவதில்லை. ஹம்ஸம் துறவறத்தையும் குறிக்கிறது போலும்.



மதுரை மீனாக்ஷியை காஞ்சி காமாக்ஷியாகவும் தரிசித்திருக்கிறார் குல சேகர பாண்டியன்

*கரும்பும் கணை ஐந்தும் பாசாங்குசமும்*
*கைக்கொண்டு - அடியேன்*
*திரும்பும் திசை தோறும் தோற்று கண்டாய்*
*இசை தேக்கு மணிச்*
*சுரும்புண்ட காவியும் சோதி நிலாவும்*
*துளிரும் சற்றே*
*அரும்பும் கனங் குழலாய்*
*மதுராபுரி அம்பிகையே!*

கரும்பு வில்லும், ஐந்து அம்புகளும், பாசம் அங்குசம் முதலான ஆயுதங்களும் கையில் வைத்துக் கொண்டிருக்கும் காமாக்ஷி. கேட்டவர் விரும்பிய விதமெல்லாம் அள்ளித் தரும் அன்னை. "நான் எந்தப் பக்கம் திரும்பினாலும் நீ இந்தக் கோலத்தில் காட்சி தர வேண்டும்." என்று வரம் கேட்கிறார்.

பொன்வண்டு இசையை நிரப்பியுள்ள மலரையும், நிலாவின் துளிரையும் சூடியிருக்கிறாள். அம்பிகையின் கருங்குழலில் இவை அரும்பி சற்று எட்டிப் பார்க்கின்றனவாம். அம்பிகையின் கூந்தலில் மிளிர்ந்தாலும் அவ்வளவு அடக்கம்!

**மீ**னாக்ஷியையும், காமாக்ஷியையும் ஒன்றாகக் கண்ட மற்றொரு மகான் சியாமா சாஸ்திரிகள்.

'நியாயமா மீனாக்ஷம்மா' என்றும் 'காமாக்ஷி நின்னுவினா' என்றும் ஒரே பாடலில் வருகிறது.

"உன்னைத் தவிர எனக்கு கதி எவர் இருக்கிறார்கள்? அம்மா! என் தாயே? என்று அழைத்தால் நீ பேச மாட்டாயா? இது நியாயமா? உன்னையே ஸ்திரம் என்று நம்பி இருக்கிறேனே!" என்று பொருள்பட இறைஞ்சி இறைஞ்சிப் பாடகர் பாடும்போது, நாமும் உள்ளமுருகித்தான் போவோம்.

*மங்களம் மாதேவருக்கு, மாமதுரை வாசருக்கு*
*மண் சுமந்து லீலை செய்த சொக்கேசர்க்கு*
*மலயத்வஜராஜன் மகளாய் அவதரித்த*
*மாதேவி மீனாக்ஷிக்கு சுபமங்களம்.*

நாட்டில் மாதம் மும்மாரி பெய்து எல்லா வளங்களும் ஓங்க மதுராபுரி நாயகி அருளப் பிரார்த்திப்போம். ஆனைகட்டிப் போரடிக்கும் காலம் வரும் என்று நம்புவோம்.

(தொடரும்)

பாடல் வரிகள் உதவி : டாக்டர் உ.வே. சுவாமிநாதய்யர் நூலகம்

# தேசத்தில் பற்றும் தீ...!

மரபின் மைந்தன் முத்தையா, கல்லூரியின் முதல்வர் முனைவர் பா. சம்பத்குமார் தலைமையில், கல்கி ஆசிரியர் முன்னிலையில் களை கட்டியது ஏட்டிக்குப் போட்டி கல்லூரிப் பட்டிமன்றம்.

உடனடித் தடுப்பு மருந்து கண்டு பிடிக்க வேண்டியது புற்று நோய்க்கா? எய்ட்ஸ் நோய்க்கா? என்பதுபோல, வல்லரசாக முன்னேற இந்தியாவின் முதல் தேவை வறுமை ஒழிப்பா? ஊழல் ஒழிப்பா என்று நாம் தந்த தலைப்பைத் துணிவுடன் தேர்ந்து கொண்டு வாதிட வந்தார்கள் கோவை, பூ. சா. கோ. கலை மற்றும் அறிவியல் கல்லூரி மாணவ, மாணவிகள். அவர்களுக்குச் சவாலாக வாதங்களை மதிப்பிட்டு, துணிவுடன் தீர்ப்பு சொல்ல வந்த நடுவர்,


• முனைவர் பா. சம்பத்குமார்


• கல்கி ஆசிரியர்


• மரபின் மைந்தன் முத்தையா

**வறுமை ஒழிப்பே! - பால விக்னேஷ்**

பட்டிமன்றத் தலைப்பிலேயே வறுமைக்கு முதலிடம் கொடுத்திருக்கிறார்கள். ஊழல்! ஊழல்! என்று பேச வந்திருக்கிற இவர்களைக் கடத்தி கொண்டு போய் இரண்டு நாள் பட்டினி போட்டால் பசியின் கொடுமை தெரியவரும்.

- வறுமையில் இருப்பவனைக் கெட்ட வழியில் திருப்ப முடியும். இன்று இளைஞர்கள் பலரைத் தீவிரவாதத்தின் பக்கம் திருப்புகிறார்களே, என்ன காரணம்? வறுமைதானே?
- பாரதியை மகாகவி என்கிறோம். தேசிய கவி என்கிறோம். அப்படிப் பட்டவன், பராசக்தியைப் பார்த்து, "என்னை உப்பு, புளி, மிளகாய் பிரச்னைக்காகப் புலம்ப வைத்து விட்டாயே!" என்று கதற வைத்த வறுமை, எத்தனை பாரதிகளை அற்ப ஆயுளில் பறித்துக் கொண்டது? நல்லதோர் வீணை செய்து, அதை நலங்கெட புழுதியில் எறிகிறது வறுமை.
- ஒரே ஒரு பிரியாணிப் பொட்டலத்திற்குத் தனது வாக்குரிமையை விற்க வைத்துவிடுகிற வறுமை இருக்கிற வரை, ஊழல் தானே ஆட்சிக் கட்டிலில் இருக்கும்? பிறகு வறுமையை ஒழிக்காமல் எப்படி ஊழலை ஒழிக்க முடியும்?

**ஊழல் ஒழிப்பே - அருள் காமராஜ்**

வறுமையை ஒழிப்பதற்காகப் பல ஆயிரம் கோடி திட்டம் போடுகிறார்கள்! இங்கே அதிலேயும் ஊழல்! அப்புறம் எப்படி வறுமையை ஒழிக்க?

# கல்கி நடத்திய 'ஏட்டிக்குப் போட்டி'

## கல்லூரிப் பட்டிமன்றம்

● அரசு ஊழியர் ஸ்டிரைக் பண்ணினால் எஸ்மாங்கிறாங்க. ஆபீசுக்கு லேட்டா வந்தால் டெஸ்மாங்கிறாங்க. புலிகளுக்காகப் பேசிப் புட்டா பொடாங்குறான். பலி கொடுக்க ஆட்டுக்கெல்லாம் தடாங்கிறான். இருப்பதெல்லாம் இடிக்கிறாங்க மெரினாகிட்டே. கறுப்பு பணம் வெளியே வருது செரினாகிட்டே. பெப்சி கோக் பானத்துலே நஞ்சு கிடக்குது. பாழாப் போன ஏழை வாழ்க்கை பிய்ஞ்சி கெடக்குது. வல்லரசாய் ஆகணும்ன்னு கலாம் கனவு காண்கிறார். ஊர்ப் பணத்தை தின்ன பல பேரு அவருக்கே சலாம் போடுறான்.

- இதுதான் இன்றைய நிலை. இந்த மாறா ஊழலை ஒழிப்பதுதான் நாம் தரும் விலை.



* அ. இராஜபிரபு



* ந.பெ. லோகேஸ்வரி



* ஜா.மா. அருள்காமராஜ்



* சங்கீதா



* அ. ஹரி பொன்மேனி



* பால விக்னேஷ்

### வறுமை ஒழிப்பே - லோகேஸ்வரி

வெளிநாட்டில் நின்று இந்தியா எப்படிப்பட்ட தேசம் என்று கேட்டால் இந்தியா ஒரு ஏழை நாடு என்கிறார்கள்! வறுமைதான் நமது விலாசம் என்கிறார்கள். அப்படியானால் நாம் ஒழிக்க வேண்டியது எதை?

● ஊழல் செய்யலாமா? கூடாதா? அது நம்மை பாதிக்குமா இல்லை, நாட்டையும் பாதிக்குமா? என்று சிந்திக்க முதலில் உடலில் தெம்பு வேண்டும்! வறுமையை ஒழித்து விட்டால் ஒரு மனிதனால் சிந்திக்க முடியும். அதனால் நான் வயிற்றுக்குச் சோறிட வேண்டும், இங்கு வாழும் மனிதருக்கெல்லாம், என்றான் பாரதி.

● அப்துல் கலாம் கனவு காணுங்கள் என்கிறார். வயிற்றில் பசியோடு எப்படிக் கனவு காண்பது? சட்டையில் ஓட்டை இருந்தால் மறைக்கலாம்! ஆனால் சட்டையே இல்லாதபோது எதைக் கொண்டு மறைப்பது!

● வறுமை பணம் சம்பந்தப்பட்டது. ஊழல் குணம் சம்பந்தப்பட்டது. ஊழலை எதிர்க்கப் புறப்பட்டால் எத்தனை பேரை எதிர்க்க வேண்டியிருக்கும். ஊழலை ஒழிக்கப் புறப்படுவது சாவதற்குச் சமம். வறு

மையை ஒழிக்கப் புறப்படுவது வாழ்வதற்குச் சமம். இரண்டில் எது உத்தமம்?

ஊழல் ஒழிப்பே - சங்கீதா

இன்று ஊழல் செய்வதில் உலகிலேயே முன்னணியில் இருக்கும் இந்தோனேசியாவுக்கு நம் நாட்டு அமைச்சர் போனார். அங்கே ஓர் அமைச்சரின் வீட்டுக்கு விஜயம் செய்தவர் "இத்தனை அழகான வீட்டை எப்படிக் கட்டினீர்கள்?" என்று வியப்பாகக் கேட்டார். அதற்கு இந்தோனேசிய அமைச்சரோ "அதோ தெரிகிறதே அந்தப் பாலத்தின் தயவு" என்றார். பிறகு இந்தோனேசியா அமைச்சர் இந்தியா வந்து நமது அமைச்சர் வீட்டுக்கு விசிட் அடித்தார். "ஒரு குட்டி தாஜ்மஹாலையே கட்டி வைத்திருக்கிறீர்களே எப்படி முடிந்தது?" என்று வாய் பிளந்து கேட்டார். நம்மவர் "அதோ தெரிகிறதே அந்தப் பாலத்தின் தயவு" என்றார். அவர் கை நீட்டிய இடத்தில் தெரிந்தது பெரிய பாலமல்ல; வெட்டவெளி! கட்டாத பாலம், வெட்டாத கிணறு, போடாத சாலை என மொத்தமாய்ச் சுருட்டி விடுகிற அரசியலில் மாற்றம் வர வேண்டும். அப்போதுதான் வறுமையில் வாடும் மக்களைக் காக்க முடியும்!



● பார்வையாளர்கள்...

வறுமை ஒழிப்பே!

- இராஜ பிரபு

தனியொரு மனிதனுக்கு உணவில்லையெனில் ஜகத்தினை அழித்திடுவோம் என்றான் பாரதி. ஆனால் இங்கே கூட்டம் கூட்டமாய், குடும்பம் குடும்பமாய்ப் பட்டினியில் வாடுகிறார்கள் மக்கள். ஏன்?

● நூறு கோடி பேர் இருந்தும் இங்கே வேலை இல்லை. மனித வளம் வீணடிக்கப்படுகிற நாட்டில் எப்படி வறுமையை ஒழிப்பது! வேலை இல்லாத திண்டாட்டத்தைப் போக்க வேண்டும். அதற்கு நம்மிடம் என்ன திட்டம் இருக்கிறது?

● தகுதி இருந்தாலும் இங்கே வேலை இல்லை! வேலை இருந்தாலும் பணமிருப்பவன் அதை விலை கொடுத்து வாங்கிக் கொண்டு போய் விடுகிறான். பசியால் துடிக்கிற எங்களுக்கு ருசியான சாப்பாடா கேட்டோம்! பட்டினி கிடக்க முடியவில்லை என்றுதானே கண்ணீர் வடிக்கிறோம்?

ஊழல் ஒழிப்பே - ஹரி. பொன்மேனி.

வறுமை ஒழிப்போம் என்று வாக்குரிமை தந்து, நம் வாக்குகளைத் திருடுவதில் தொடங்கி விடுகிறது அரசியல்வாதிகளின் ஊழல்.

● அரசியல்வாதி ஊழல் பண்ணினால் விசாரணை கமிஷன் வைக்கிறார்கள், ஆனால் அங்கேயும் அடித்து விடுகிறார்கள் 'கமிஷன்'.

● இன்று ஊழலுக்குத் தனி ஆத்திச்சூடியே வந்துவிட்டது. அ-அகப்பட்டதைச் சுருட்டு. ஆ - ஆதாயம் என்றால் சகாயம் செய். இ- இலஞ்சம் வாங்கு. ஈ - ஈவு, இரக்கம் துறந்துவிடு. உ-உண்மையை ஒளித்து வை. ஊ - ஊர்ப் பணத்தில் உலா வா. எ - எத்தனை கிடைக்கும் என கணக்குப் பார்! ஏ - ஏழையிடமும் கை நீட்டு, என நீண்டு கொண்டே போகிறது. இதற்கு முற்றுப் புள்ளி வைக்க வேண்டாமா?

● இங்கே தேர்தல் கூட்டணிகளைக் கூட

பெட்டிகளின் எண்ணிக்கையைக் கொண்டு முடிவு செய்கிறார்கள்.

● அன்று வியாபாரம் செய்ய வந்தவர்கள் ஆட்சி நடத்தினார்கள். இன்று ஆட்சி நடத்த வருகிறவர்கள் வியாபாரம் செய்கிறார்கள். வியாபாரிகளை ஆட்சியிலிருந்து விரட்டினால்தானே வறுமையை ஒழிக்க முடியும்?



ஆய்வும் தீர்ப்பும் - மரபின் மைந்தன் முத்தையா:

சட்டமன்றமும் பாராளுமன்றமும் விவாதிக்க வேண்டியதை, இன்று மாணவர் மன்றம் விவாதிப்பது மிகப் பெரிய மாற்றம். ஆதாம் ஏவாளுக்குச் சொந்த ஊர் எது என்ற சிக்கலான கேள்வி வந்தபோது, இந்தியா என்று கண்டு பிடித்தார்கள். காரணம் இரண்டு பேருக்கும் கூரை இல்லை. ஆடையும் இல்லை. ஒரே ஒரு ஆப்பிள் மட்டும் இருந்தது. இதையே சொர்க்கமாகக் கருதுகிறார்கள் என்றால், அவர்கள் நிச்சயமாக இந்தியர்களாகத்தான் இருக்க வேண்டும் என்ற முடிவுக்கு வந்தார்கள். இந்தியா என்றால் வறுமை என்று பதிவாகி இருக்கிறது.

ஆனால் உண்மை என்ன?

வறுமை என்பது தனி மனிதத் தவிப்பு! இயலாமை, தடுமாற்றம்! முயன்றால் அதை ஒவ்வொரு தனி மனிதனும் போக்கிக் கொள்ள முடியும். ஊழல் அப்படிப்பட்டதல்ல. ஒரு மனிதன் தன்னுடைய தகுதியை முழுக்க முழுக்க சமரசம் செய்து கொள்ளும் நிலை. அது. சுய நலத்தின் ஒட்டு மொத்த வெளிப்பாடு. வறுமையைப் போல் இது தனி மனிதன் சம்பந்தப்பட்ட பிரச்னை அல்ல. தேசத்தின் நாடி நரம்பு முழுக்க ஊடுருவி இருக்கும் பிரச்னை. ஊழலை ஒழிக்க வேண்டும் என்று புறப்படுகிறபோது, எங்கே பிரச்னை வருகிறது? நாம் சமூகமாக உட்கார்ந்து சிந்திக்கிறபோது, ஒட்டு மொத்தமாக ஊழலை எதிர்க்கிறோம். ஆனால் தனித்தனியாக ஆதரிக்கிறோம். அதுதான் பிரச்னையே. நமக்கு ஒரு பணி நடக்க வேண்டும் என்றால் தள்ள வேண்டியதைத் தள்ளி, இழுக்க வேண்டியதை இழுத்துக் கொள்கிறோம். அதனால்தான் அரசு அலுவலகக் கதவுகளில் தள்ளு, இழு என்று எழுதிப் போட்டிருக்கிறார்கள்! நமக்கு எதற்கு வம்பென்று நமது காரியம் முடிந்தகையோடு தள்ளிப் போய் விடுகிறோம். வறுமையாகட்டும், ஊழலாகட்டும் அது நம்மை பாதிக்கிறவரை, நாம் கவலைப் படுவதே இல்லை. இதைத்தான் வைரமுத்து...

"இந்த தேசத்தில் பற்றுகிற தீ
தன் சட்டையைப் பற்றுகிற வரை
எவனும் சத்தமிடுவதில்லை" என்று சத்தம் போட்டுச் சொல்கிறார்.

இங்கே வறுமையின் அடிப்படையே தாழ்வு மனப்பான்மைதான். இந்த வேலையை நான் செய்யணுமா என்று யோசிக்கிறோம். நமது தகுதி என்ன? நமது திறமை என்ன? எதை வைத்து ஜெயிக்கலாம் என்ற சுய ஆய்வு செய்தால், வறுமையை ஒழித்துவிட முடியும். ஆனால் ஊழலை ஒழிக்க சமூகத்தில் போடப்படும் சட்டங்கள் மூலமும், அந்தச் சட்டங்களைத் தீவிரமாக செயல்படுத்துவதன் மூலம் தான் முடியும். ஊழல்தான் தேசத்தின் வளர்ச்சியில் முதல் முட்டுக்கட்டை. அதைத்தான் முதலில் அகற்ற வேண்டும் என்று தீர்ப்பளிக்கிறேன்.

தொகுப்பு : ஜெய்

இங்கேயும் வந்து விட்டானா? நிவேதனா தன் ரத்தத்தில் சூடேறுவதை உணர்ந்தாள். எழுந்து போய் அவனைக் காலரில் பிடித்து கன்னத்தில் பொளேர் என்று அறைந்தால் அவளுக்கு ஆதரவாக அந்தக் கட்டடமே திரண்டு விடும். ஆனால் அந்த மாதிரியான முக்கியத்துவம் தான் அவனது குறிக்கோளாய் இருந்தால்?

அவனுக்கு நன்றாக உறைக்கும்படியாக நாற்காலியை மொத்தமாகத் திருப்பிப் போட்டு உட்கார்ந்தாள். அந்தப் பதற்றத்தில், மணவாளனுடைய சில நரைத்த வார்த்தைகளைத் தவற விட்டிருந்தாள். அவரை ஆழ்ந்து கவனித்தாள்.

''சிவன் பார்வதி போல வாழ்ந்த வாழ்க்கை! திடீர்னு தனியா விட்டுட்டுப் போயிட்டா... பொம்பிளை இல்லாத வீடு வேரில்லாத மரம் மாதிரிம்மா''

நிமிர்ந்து உட்கார்ந்தாள். கிழம் அப்ளிகேஷன் போடப் போகிறதா?

"எங்களுக்கு மூணும் ஆம்பிளைப் பசங்க... மூத்தவன் பரோடாவுல கம்பெனி வச்சிருக்

சுபா

கான். வருஷத்துக்கு ஆறு லட்சம் டாக்ஸ் ரிட்டர்ன்லயே காட்டறான். இருபத்தாறு வயசு. ஃபோட்டோ கொண்டு வந்திருக்கேன். பார்க்கறியா?''

காத்திருக்காமல் புகைப்படத்தை எடுத்து மேஜை மீது வைத்தார்.

மீசை இல்லாத அவருடைய இளம் ஜெராக்ஸ் பிரதி. கண்களில் பிரகாசம். துடிப்பானவனாய்த் தெரிந்தான்.

புன்னகைத்த போது அவன் கன்னங்களில் உருவெடுத்த குழிகளை ரசித்தார்.

"யூ லைக் ஹிம்? கல்யாண செலவெல்லாம் எங்களோடது."

''உங்களுக்குத்தான் கேக்கப் போறீங்கன்னு ஆசையா இருந்தேன் சார்.''

''ஐ லைக் தட். பிருத்வியோட சாட் பண்றியா? மெயில் ஐ.டி. தரட்டுமா? அடுத்த வாரம் எப்படியும் வரான். நேர்லயும் மீட் பண்ணலாம்''

கண்களில் ஆர்வம் பொங்கும் தகப்பனாகப் பேசினார். நிவேதனா தன்னைச் சேகரித்துக் கொண்டாள்.

''எனக்கும் உங்களை ரொம்பப் பிடிக்கும், சார். அதனால வெளிப்படையா சொல்றேன். நான் கொஞ்சம் கெட்டவ. பார்ட்டில ஜின் சாப்பிடுவேன். டிஸ்கோ போவேன். ரவின்னு ஒரு பையனோட மூணு வருஷம்

# நான் வேண்டுமோ?



சுத்தியிருக்கேன். உங்க நல்ல குடும்பத்துக்கு நான் லாயக்கில்ல"

நம்பாமல் சிரித்து, "கண்ணுக்குள்ள வச்சிப் பார்த்துப்போம்மா" என்று கையை அழுத்திக் கொடுத்தார்.

"எனக்கு ஒரு குழந்தை இருக்கு, சார்."

திடுக்கிட்டுக் கையை எடுத்து விட்டார்.

"நீ... நீ..." இனிமேல் அவளைக் கண்களில் பார்த்து சிரிப்பாரா என்பதே சந்தேகம். அவருடைய செல்போன் சிணுங்க, அதையே காரணமாக்கி அவசரமாக எழுந்து போனார்.

## 2

நிவேதனா கேன்டீனிலிருந்து வெளியேறும் முன் திரும்பிப் பார்க்கத் தவறவில்லை. அவன் அங்கேயே உட்கார்ந்து அவளைக் கவனித்துக் கொண்டிருந்தான். நேரடியாக அவனெதிரில் போய் நின்றாள். முகத்தில் தீப்பொறிகள் பறந்தன.

"என்ன வேணும் உனக்கு?"

"சூடா என்ன இருக்கு?" அது கேன்ட்டீனாம். அவன் நகைச்சுவையை அவனே ரசித்துச் சிரித்தான்.

"சூடாத் தான் வேணுமா?" என்று பற்களைக் கடித்தாள் - 'சூடா'வில் அதிக அழுத்தம் கொடுத்து.

அவன் முகத்தில் விளையாட்டுத்தனம் விலகியது. "நல்ல குடும்பத்துல கேக்கும் போது ஒத்துக்க வேண்டியதுதானே? உனக்குக் குழந்தை இருக்குன்னு ஏன் அவர்கிட்ட போய் சொன்னே?"

இது அவளுடைய கோட்டை. இங்கே அவளுக்குத் தைரியம் அதிகம். இன்றைக்குத் தெளவு படுத்திவிட்டே நகர்வது என்று தீர்மானித்தாள். அவன் எதிரில் அமர்ந்தாள்.

"எனக்கு அட்வைஸ் பண்ண நீ யாரு?"

"என்னை உனக்குத் தெரியாது. ஆனா உன்னை எனக்குத் தெரியும்."

"என்னடா தெரியும்?"

"நீ பொறந்தது ஜூன் பதினொண்ணு. இருபத்திரண்டு வருஷமாகுது. அப்பா தினகரன் - அம்மா சாரதா. பதினேழு வருஷத்துக்கு முன்னால, ஊட்டில கார் சறுக்கி பள்ளத்துல விழுந்து விபத்தாச்சு. அதுல பெத்தவங்க ரெண்டு பேரும் செத்தாங்க. அப்புறம் சித்தப்பா பணம் அனுப்பிப் படிக்க வச்சாரு."

"யாய் யார் கிட்டல்லாம் விசாரிச்சே?"

"ரவின்னு கம்ப்யூட்டர் கிளாஸ்ல ஒரு பையனைப் பார்த்தே. ஆசைப்பட்டே. சேர்ந்து சுத்தினீங்க. அவனுக்கு வெளிநாட்டுல வேலை கிடைச்சது. உன்னைப் பிரிஞ்சு இருக்கறது கஷ்டம்னு அழுதான். உன் ஞாபகமா ஓர் அனுபவத்தை எடுத்திட்டுப் போகணும்னான். மூணு நைட் சேர்ந்து இருக்கணும்னு வெளியூருக்குக் கூப்பிட்டான். நீ ஒத்துக்கல. அப்ப விலகிப் போனவன்தான்."

"நீ ரவியோட ஆளா?"

"இல்ல. அவன் தப்பானவன். அவனுக்கு நீ இணங்கியிருந்தாலும், இப்படித்தான் உதறிட்டுப் போயிருப்பான்."

முதல் தடவையாக அவன் மீது கொஞ்சம் ஆர்வம் வந்தது.

"அப்புறம்?"

"உனக்கு நடு முதுகுல கொட்டைப் பாக்கு அளவுல ஒரு கறுப்பு மச்சம் இருக்கு. கழுத்துக்கு மேலே, பின் மண்டையில கூந்தலுக்குள்ள ஒய் மாதிரி தையல் போட்ட தழும்பு இருக்கு..."

"உளறாதே."



'வீட்ல போய் சரி பார்த்துக்க... நான் சொன்னபடி இருந்தா எனக்கு நேரம் ஒதுக்கித் தருவியா?"

அவ்வளவுதானா?

மேஜையோரம் வந்து உட்கார்ந்த ஈயைக் காட்டினாள்.

"இந்தப் பூச்சி அளவுக்குக் கூட உன்னை நான் மதிக்கல. இனிமே வேற எங்கேயாவது நேரத்தை வீணடி" என்று குரலில் கடுமை சேர்த்துச் சொன்னாள். எழுந்தாள்.

திடீரென்று அவளுடைய தினம் மேலே மேலே சுவாரஸ்யமாகிக் கொண்டிருக்கிறதே. இரவு பார்ட்டியிலும் ஏதோ விசித்திரம் காத்திருக்கிறது என்று உள் மனம் சொன்னது.

ஏழரை மணிக்கெல்லாம் அவள் தயாராகிவிட்டாள். கறுப்பு ஜீன்ஸ், வெள்ளைப் பூப் போட்ட மஞ்சள் மேல்சட்டை. காதுகளில் மஞ்சள் வளையங்கள்.

ஸ்கூட்டி சாவியை எடுத்தவள் சற்று யோசித்து, அதை ஆணியிலேயே மாட்டி விட்டாள். இரவு திரும்பும்போது போலீஸ் நிறுத்தினால்! எதற்கு வம்பு? தீபக்கிடம் சொன்னால் காரில் கொண்டு விடப் போகிறான்.

வாசல் கதவைத் தாளிட்டுப் பூட்டிய போது, விருப்பமில்லாத ஓர் ஆர்வத்துடன் திரும்பிப் பார்த்தாள். தவறாமல் அவன் நின்றிருந்தான். அதே மோட்டார் சைக்கிள். குழலூதும் கண்ணபிரான் பசுமாட்டில் சாய்ந்திருப்பது போல், அதன்மீது சாய்மானம். அவனைத் தவிர்த்து அவள் ஆட்டோ நிறுத்தத்திற்கு நடக்க, பெட்ரோல் புகையை ஊதிக் கொண்டு பைக் அவள் பின்னால் உருண்டது.

## புதிய சாதனை!

இருபத்தேழு வருடங்களுக்குப் பிறகு 'இந்திய மண்ணில் மூன்று இலக்க ரன்களைக் குவித்த நியூசிலாந்துக்காரர்' என்ற சாதனையைச் செய்திருக்கிறார் நாதன் அஸ்லே. அகமதாபாதில் சமீபத்தில் இவர் புரிந்த இந்தச் சாதனையில் வேறொரு வியப்பும் உண்டு. இடது முழங்காலில் அறுவை சிகிச்சை செய்து கொண்ட பிறகு அவர் கலந்து கொண்ட முதல் போட்டி இது.

நின்றாள். நின்றான்.

'கிட்டே வா' என்று சைகை செய்தாள். தயங்கி வந்தான்.

"உன் பேர் என்ன சொன்னே?"

"ராஜ்குமார்."

"லாக்கப்புக்குப் போகறதுன்னு முடிவு பண்ணிட்டியா?"

"எப்பப் பேசலாம்?" என்றான், விடாமல்.

"அடுத்த தடவை வார்னிங் இருக்காது" என்று செருப்பை உயர்த்திக் காட்டிவிட்டு ஆட்டோவில் ஏறினாள்.

மித்ரு கிளப்பின் புல் தரையில் சரப் பளபளப்பு. தலைகுனிந்த மின் விளக்குகள். கூழாங்கற்கள் பதித்த நடைபாதைகள். ரிசப்ஷனில் கீழ்த் தளத்திற்கு வழி சொன்னார்கள்.

நிவேதனா போய்ச் சேர்ந்த போதே, பார்ட்டி சூடு பிடித்திருந்தது. கதவைத் திறந்ததும், ஆங்கில இசையை மீறி, குறுக்கும் நெடுக்குமாய் அத்தனை பேரின் குரல்களும் ஓங்கியிருந்தன. ஆண்களுடைய அர்த்தமற்ற சிரிப்பொலிகளைக் கூடியிருந்த குறைவான

பெண்கள் சகித்துக் கொண்டிருந்தார்கள். எந்த ராஸ்கலும் சொந்த மனைவியை அழைத்து வரவில்லை.

நீள்சதுர அறையின் உள் சுற்று வட்டாரத்தில் மேஜைகளில் உணவு வகைகள். அவற்றின் அடிவாரத்தில் மஞ்சளாய் சூடேற்றும் ஸ்பிரிட் அடுப்புகள். உச்சியில் துணியில் அரைக் கூடாரங்கள். கோப்பைகளை நிரப்பிக் கொள்ள தனி மூலை.

அவளைக் கண்டதும், தீபக் இயல்பாக அணைத்து உள்ளே அழைத்துச் செல்ல முனைய, நாசூக்காக நழுவி விடுபட்டாள். வளைய வரும் நண்பர்களிடம் தவறாமல் புன்னகை உதிர்த்தாள்.

அங்கங்கே ஆண்களும், அவர்களுக்குக் கிடைத்த பெண்களும் அமெச்சூர்த்தனமாக இடுப்பை ஒடித்து ஒடித்து ஆடி, சீக்கிரம் களைப்பாகி நாற்காலிகளைத் தேடிக் கொண்

"மன்னர் இப்பல்லாம் 'யார் அங்கே!' என்று கேட்காமல், 'ஹூ இஸ் தேர்'னு கேட்கிறாரே?"

"மன்னர் தபால் மூலம் ஸ்போக்கன் இங்கிலீஷ் படிக்கறாரே உங்களுக்குத் தெரியாதா?"

– எஸ். முகம்மது யூசுப்



டிந்தார்கள். யாருடனும் சேராமல் நிவேதனா சற்று நேரம் தனியே காற்றில் கைகளைக் கால்களை விருப்பப்படி உதறும் சுதந்திரத்தை அனுபவித்தாள்.

வழக்கம் போல் மனத்தில் தேவனும் சாத்தானும் எதிர்தரப்புகளில் ஆஜரானார்கள்.

"இன்றைக்கு ஜின் வேண்டாம். தவிர்த்து விடு!"

"எனக்கு வாழ்க்கையை ரசிக்க வேறென்ன இருக்கிறது?"

"ஜின்னும், டிஸ்கோவும் தான் ரசனையா?"

"தீபக் வற்புறுத்துவானே. எப்போதாவது தானே? ப்ளீஸ்."

"தொலை. ஆனால் லிமிட் தாண்டக் கூடாது."

தேவன் தோற்றான். சாத்தான் புன்னகைத்தான்.

அவள் கையில் ஒரு கோப்பை திணிக்கப்பட்டது. எதிர்பார்ப்புடன் இருந்ததால், பலவீனமாக மறுத்தாள். உடனேயே சமாதானம் செய்து உறிஞ்சினாள். பெண்களில் அவளைத் தவிர மேனகா மட்டும் தான் கிலுங் என்று கண்ணாடிக் கோப்பையைத் தட்டிச் சிரித்தாள். மற்றவர்கள் ஆண்களைச் சுற்றி நின்று, உணவுத் தட்டுகளில் நாசூக்காக ஸ்பூன்களால் துழாவிக் கொண்டிருந்தார்கள்.

இரண்டாவது சுற்றிலேயே நிவேதனா தன் உடல் அத்து மீறுவதை உணர்ந்தாள். தப்பான அடி எடுத்து வைத்து, யாருடைய சிகரெட்டோ முழங்கையில் சூடான சாம்பலால் பொட்டிட்டது. அசட்டுத்தனமாய் இளிக்காதே என்று தன்னை அதட்டிக் கொண்டே இளித்தாள். பொதுவாக அந்தச் சூழ்நிலையில் யார் வேண்டுமானாலும், யார்மீது வேண்டுமானாலும் உரிமை கொண்டாடும் தைரியம் கூடிக் கொண்டிருந்தது.

தீபக் எங்கே யாருடன் இருந்தாலும், பார்வை அவளையே வட்டமிட்டுக் கொண்டிருந்தது. அவள் மேஜையைப் பிடித்துக் கொள்வதைப் பார்த்ததும், கிட்டே வந்தான். அவளை உட்கார்த்தி முழங்கால்களை இடித்துக் கொண்டு அவனும் நெருக்கமாய் உட்கார்ந்தான்.

"லவ் பத்தி என்ன நினைக்கிறே, நிவேத்?"

"வஞ்சகர்களின் விளையாட்டு."

அந்தத் தமிழ் விளங்காமல் மீண்டும் கேட்டான்.

"ஏன் தீபக், என்னை லவ் பண்ணப் போறியா?" என்று குழறலாய்க் கேட்டாள்.

"உன் ரவி என்ன ஆனான்?"

"செத்துட்டான்..!" என்று சிரித்தாள். "அப்பப்ப, ஈ மெயில்ல கார்டு மட்டும் அனுப்பிட்டிருக்கான்..!"

தீபக் மெதுவாக அவள் மீது கை வைத்து




"அவனை மாதிரி நான் ஏமாத்த மாட்டேன்" என்றான். "நாம ஒருத்தரை ஒருத்தர் புரிஞ்சுக் கணும், நிவேத்."

"வாழ்க்கையா, உன் பெட் ரூம்லயா?"

திடுக்கிட்டாலும், "நீ ரொம்ப அதிரடி" என்றான்.

அவள் பார்வை வழுக்கி, மேஜை விரிப் பில் சதுரக் கட்டங்கள் வட்டமாவதும், நீண்டு குறுகுவதுமாகப் போக்குக் காட்டின.

"எனக்கு வீட்டுக்குப் போகணும், தீபக்... என் வீட்டுக்கு... உடனே..." சின்ன இடை வெளி விட்டு "தனியா" என்று அழுத் தினாள்.

"நீ இன்னும் சாப்பிடல..."

"வேணாம்... கண்ணெல்லாம் சுத்திட்டு வருது... வேற என்னவோ கலந்து கொடுத் திட்டே..."

"ச்சீ... அப்படி செய்வேனா? வா..."

அவளை அணைத்து எழுப்பினான். பல பார்வைகள் அவர்களை நோட்டமிட, தீபக் பொதுவாக நண்பர்களைப் பார்த்துக் கண் ணடித்தான். அவளைப் படிகளில் அளவிற் கதிகமாகவே தாங்கினான்.

'தீபக், அங்கல்லாம் தொடாதே'... அவன் கையை விலக்க வேண்டும் என்று நிவேதனா விற்குள் எதுவோ எச்சரித்துக் கொண்டிருந் தாலும், தோற்றுக் கொண்டிருந்தாள்.

'இங்கேயே படுத்துக்கறேனே' என்று பார்க்கிங் பகுதியின் கான்க்ரீட் தரையைக் காட்டிக் கெஞ்சினாள். தீபக் கார்க் கதவு களைத் திறந்து பிடித்தான்.

காரின் சௌகர்யமான பின் இருக்கை யில் நிவேதனா மடங்கிப் படுத்துக் கொண்டாள்.

"அபிராமபுரம் போ" என்றாள், அரைத் தூக்கத்தில்.

"கார்லயே படுத்திரு... பில் செட்டில் பண்ணிட்டு வரேன்" தீபக் கீழ்த் தளத்திற்குத் திரும்பியபோது, நடையில் சின்னப் பரபரப்பு.

தீபக் அந்தப் படிகளில் இறங்கி மறைந்த சில விநாடிகளில் அதே இருட்டிலிருந்து ராஜ்குமார் வெளிப்பட்டான். பார்க்கிங் பகுதிக்கு விரைந்தான். காரின் பின் கதவைத் திறந்தான்.

"எறங்கு, நிவேதனா" என்றான். சுலபமாக அவளை இழுத்து இறக்கினான்.

"கார் கௌம்பவேயில்லியே... வீடு வந்திருச்சா?"

"வேற கார்ல போறோம்."

அவன் சைகை செய்ய வெள்ளையும், மஞ்சளுமாக வாடகைக் கார் வந்து நின்றது.

"ஏய், நீ... நீ?"

அவனை அடையாளம் புரிந்து, அவ ளிடம் மெல்லிய எதிர்ப்பு இருந்தது. ஆனால் உடல் ஒத்துழைக்காமல் அவன் தோளிலேயே சாய்ந்து கொண்டாள்.

தயாராய்க் காத்திருந்த கால் டாக்ஸியில் அவளை அவன் சற்று சிரமத்துடன் ஏற்றி னான். கதவை இழுத்துச் சாத்தினான்.

"போலாம்" என்றான்.

கிளப் வாட்ச்மேன் பெரிய இடத்து சமாசாரங்களைக் கேள்விகள் கேட்க தைரிய மற்றவன். விசில் ஊதி வழியனுப்பினான்.

நிவேதனா ராஜ்குமாரின் மடியில் தலை வைத்துக் கொண்டு கண்களை மூடிக் கொள்ள, டாக்ஸி இருட்டில் விரைந்தது.

(தொடரும்)




✉ தலையங்கத்தில் மூன்று அபாயங்களைச் சொல்லி இருந்தீர்கள், நான்காவது அபாயத்தையும் தயவு செய்து வெளியிடுங்கள். எந்த இன்ஷூரன்ஸ் கம்பெனியும் அணு மற்றும் அணுக்கதிர் வீச்சினால் ஏற்படும் சேதங்களுக்கோ, உயிரிழப்புகளுக்கோ நிவாரணம் தராது. இது அவர்கள் தரக்கூடிய பாலிசிகளில் உள்ள நிரந்தர விதிவிலக்கு. அட்லீஸ்ட் ஆபத்து சமயத்தில் உதவ, இன்ஷூரன்ஸ் இருந்தாலும் பரவாயில்லை.
திருநெல்வேலி - 11, நெல்லை எஸ்லார்.

✉ மேடைப் பேச்சில் 'ஆபாச அர்ச்சனை' செய்வதில் தி.மு.க.வும், அ.தி.மு.க.வும் சளைத்த இயக்கங்கள் அல்ல. ஆனால் காவல் துறையைக் கையில் வைத்துக் கொண்டு, தி.மு.க பேச்சாளர்களை மட்டும் ஆளுங்கட்சி ஒடுக்க நினைப்பது, மோசமான நடவடிக்கை!
நெல்லையப்பபுரம், டி. செல்வன்.

## "காதுல எண்ணெயைக் காய்ச்சி ஊத்து!"

✉ கல்பாக்கம் அணுமின் நிலையம் பெருமைப்பட வேண்டிய சங்கதி என்றாலும், அதன் பின்னணி பாதிப்புகள், மனித இனத்துக்கே உலை வைக்கக் கூடியவை என்பதை, எச்சரித்து ஆழமாகவே பதிய வைத்து விட்டீர்கள்.
கும்பகோணம், புலவர் எஸ்.கே. மூர்த்தி.

✉ 'சூப்பர் ஸ்டார்' பற்றிய அட்டைப்படக் கட்டுரை சரியான நேரத்தில் வெளி வந்த சரியான கட்டுரை. "எந்தக் கால கட்டத்திலும் சூப்பர் ஸ்டாரிடம் மக்கள் எதிர்பார்ப்பது 'தனி மனித ஒழுக்கம்' என்ற வரிகள், அப்படி வலம் வர நினைக்கும் நடிகர்கள் மனத்தில் நிலை நிறுத்திக் கொள்ள வேண்டிய வைர வரிகள்.
சென்னை - 82, ஜே. சுபத்ரா.

✉ ஏலே மொக்கராசு! 'அலை' படத்துல விவேக்கு இரண்டாயிரத்து ஐந்நூறு ரூபாய்க்கு லூட்டி அடிக்கிறாரு... நீ என்னமோ ஆயிரத்து ஐந்நூறுக்குன்னு சொல்ற! முதல்ல உன் காதுல எண்ணெயைக் காச்சி ஊத்து. அப்பவாவது 'டயலாக்' காதுல சரியா விழட்டும்.
குமாரபாளையம், 'காசி'. சக்திவேலன்.



✉ சாதனைக்கு வயது தடையில்லை என்ற தன்னம்பிக்கை. Moral values, பொறுப்புணர்வுகளை தனக்கே நினைவுபடுத்திக் கொண்டது, பக்குவமான 'பாய்ஸ்' விமர்சனம், அரசியல் கேள்விகளுக்கு மெச்சூரிட்டியான பதில்கள். சரத் இடம் நண்பர்கள் போட்டி போடுவார்கள். எதிரிகள் பொறாமைப் படத்தான் முடியும்.
தேனேரிப்பட்டி, புரபசர் தோட்டம் ஜெயச்சந்திரன்.

✉ தமிழ்ப் பட உலகில் 'சூப்பர் ஸ்டார்' பட்டங்கள் எல்லாம் இனி எடுபடாது. ஜெயிக்கும் குதிரைக்கு தயாரிப்பாளர்கள் பணம் கட்டுவார்கள். இந்த நட்சத்திரப் பந்தயத்தில் விக்ரமின் நடிப்பு தனிப்பட்ட முத்திரையாக பல படங்களில் பரிமளிக்கிறது. இதை அவர் தக்க வைத்துக் கொள்வது, அவரை வைத்துப் படம் இயக்குபவர்கள் கையில்தான் உள்ளது.
ஈரோடு - 1, ரேவதி ப்ரியன்

✉ கல்கி இதழில் வெளியாகியிருந்த என்னுடைய பேட்டியில் தா. கிருட்டிணன் கொலை தொடர்பான தங்கள் நிருபரின் கேள்விக்குப் பதில் சொல்லாமல் நழுவி விட்டதாகக் குறிப்பிட்டிருந்தது. 'இந்தக் கேள்விக்குப் பலமுறை விளக்கம் தந்தாகிவிட்டது. இதை விடுத்து வேறு ஏதாவது கேளுங்கள்!' என்றுதான் நான் கூறியிருந்தேன். 'நழுவ' வேண்டிய அவசியமோ சூழ்நிலையோ தி.மு.க வினருக்குக் கிடையாது.
திருச்சி சிவா,
தி.மு.க மாணவரணி.

# நடக்குமென்பார் நடக்கும்!

அக்டோபர் 22 முதல் 28 வரை

அக்னிசர்மா பக்கம்



சப்தஸ்வரங்கள் ஏ.வி. ரமணனுக்கு (மிதுனம்) நல்ல செய்தி வந்து சேரப் போகுதாமே!

**மேஷம்** : குடும்பத்துல மகிழ்ச்சி 'தையதக்கா'னு தாண்டவமாடப் போகுது. நினைச்ச பொருளை வாங்கிக் குவிப்பீங்க. உடல் ஆரோக்கியம் 'ஜம்'முன்னு இருக்கும். படிக்கிற பசங்களுக்கு எதிர்காலம் பளிச்!

**ரிஷபம்** : சுய தொழில் செய்யறவங்களுக்கு ரொம்ப சிறப்பான எதிர்காலம் காத்திருக்கு. பழைய கடன் தொல்லை ஜகா வாங்கிக்கும். தெய்வ பலம் நல்லபடியா இருக்கறதாலே, எதுக்கும் யோசனை பண்ணாதீங்க. சந்தோஷமான பலன்களே நடக்கும்.

**மிதுனம்** : பூர்வீகச் சொத்து விவகாரம் அனுகூலமான முறையில பைசலாகும். காத்துக் காத்து கண்கள் பூத்திருந்த செய்தி, நல்லவிதமாக வந்து சேரும். பயணங்களில் அனுகூலமுண்டு. பெண்களுக்கு மனமகிழ்ச்சி தரும் வாரம். ஏற்றுமதி இறக்குமதி லாபம் தரும்.

**கடகம்** : குருபலம் பரிபூரணமா நிறைஞ்சு இருக்கிறதனாலே, தாமதமாகி வந்த சுபமங்கள காரியங்கள் நிறைவேறும். மக்கள் நலன் சீராக இருக்கும். பெண்களுக்கு உற்சாகமான மனநிலை, ஆரோக்கியமான சூழ்நிலை ஏற்படும். கடன் தொல்லை எல்லாம் ஜப்ஜாடா பைசலாயிடும்.

**சிம்மம்** : துணிச்சல், தன்னம்பிக்கை அதிகமாகும். நீங்க யார்னு அறிவிக்கிற காலம் வந்தாச்சு. கல்வி, விஞ்ஞானம், ஆராய்ச்சி வகையில் நல்ல முன்னேற்றமான அறிகுறிகள் காத்திருக்கு. மாணவர்களுக்கு வெளிநாட்டுப் பயணம் அமையும்.

**கன்னி** : சனி பகவான் பத்தாமிடத்தில் இருக்காரு. இரும்பு, இயந்திரம், இண்டஸ்ட்ரீஸ் ஆகிய இனங்கள் ஏகப்பட்ட தனலாபம் கொண்டு குவிக்கும். குடும்பத்தில் கணவன் - மனைவி உறவு ஃபெவிகால் போட்டு ஒட்டியது போல, படு ஸ்ட்ராங்காக இருக்கும். மஹான்கள் தரிசனம் கிடைக்கும்.

**துலாம்** : கொஞ்சம் டைம் கிடைச்சா, ஒரு நடை திருப்பதிக்குப் போயிட்டு வாங்க. நல்ல திருப்பம் ஏற்பட்டு, வாழ்க்கையே புது தினுசில் மாறிடும். கூட்டுத் தொழில் செய்யறவங்களுக்கு, குஷியான காலம். ஸ்பெகுலேஷன் துறையில் மிதமானப் பலன்களே. உத்தியோக விஷயத்தில் புது முயற்சி வேண்டாம்.

**விருச்சிகம்** : குருபகவான் குடும்ப ஸ்தானத்தைப் பார்ப்பதால், சுப காரியங்கள் இனிதே நிறைவேறும். சொத்து விவகாரங்களில் அனுகூலம் உண்டு. கலைத் துறையினர் வளர்ச்சி அடைவார்கள். உத்தியோகஸ்தர்களுக்கு இடமாற்றம் நேர்ந்தால், நன்மையே அளிக்கும்.

**தனுசு** : தெய்வீக ஈடுபாடு அதிகரிக்கும். உடல் ஆரோக்கியத்தில் முன்னேற்றம் பளிச்சென்று தெரியும். குடும்பத்துடன் வெளியூர்ப் பயணம் அமையும். சிலருக்கு நிலம், வீடு, வாகனம் வாங்கும் யோகம் அமையலாம்.

**மகரம்** : உணவுப் பொருள், லாட்ஜ், ஹோட்டல், மருத்துவம், கெமிக்கல்ஸ் மற்றும் எண்ணெய் வகை எதிர்பாராத லாபம் தந்து உங்கள் பொருளாதார நிலையை 'ஓகோ' என்று ஆக்கி விடும். சுபச் செலவுகள் கட்டுக்கடங்காமல் போகலாம். கவனம் தேவை. கோர்ட்டு, வழக்கு விவகாரங்கள் வெற்றி அடைந்து நிம்மதிப் பெருமூச்சு விடுவீங்க.

**கும்பம்** : புதியவங்க தாமாகவே வந்து அறிமுகமாவாங்க. அவங்க முக்கியஸ்தரா இருந்தாங்கன்னா, கண்டுக்குங்க. அவங்க தான் உங்களுக்கு உதவப் போறாங்க. உத்தியோக விஷயத்தில் புதிய முயற்சிகள் கை கூடும். பெண்களுக்கு உல்லாசமான வாரம்.

**மீனம்** : கொடுக்கல் வாங்கல்னு நீங்க தவிட்டைத் தந்தாலும் தங்கமாகத் திரும்பி வரும். கடன் தொல்லை இனிமேல் இல்லை. சக ஊழியர்கள் அனுகூலமாக இருப்பார்கள். உத்தியோகத்தில் புதிய பொறுப்புகள் வந்து சேரும். தெய்வ தரிசனம், தான தருமம் மூலம் நலம் பெறுவீங்க.

---



# ரகசியக் கிரீடம்

மங்கையர்க்கரசி அந்தக் கூட்டத்திலேயே தனித்துத் தெரிந்தாள். பிஞ்சுக் கத்திரிக் காயை நறுக்கிப் போட்டு ஓர் அவசரச் சமையல் தயாராகிக் கொண்டிருந்தது. கூடத்தில் புகைந்து கொண்டிருந்த ஊதுவத்தியுடன் சாம்பார் மணமும் கலந்து நாசியை நிறைத்துக் கொண்டிருந்தது.

எப்போது கிளம்ப வேண்டும் என்று மனோகரனைக் கேட்பதற்காக அவள் கண்கள் அவ்வப்போது ஆண்கள் பக்கம் துழாவிக் கொண்டிருந்தன. வீட்டுக்குப் போனவுடன் உரம் வாங்கச் செல்ல வேண்டும் என்று சொல்லிக் கொண்டிருந்தான். இந்தக் கவனிப்பிலேயே ஒரு விஷயத்தை அவள் கவனிக்கத் தவற விட்டிருந்தாள். ஒப்பாரிச் சத்தம் சற்றே நின்றிருந்தது.

அழுது முடித்து வேறு கதை பேசத் தொடங்கியிருந்த பெண்கள் பக்கமிருந்து சில கண்கள், சற்றே ஏளனமாய் அவளைச் சீண்டுவதை ரொம்பத் தாமதமாய்த்தான் உணர முடிந்தது.

"ஏன் பெரியம்மா! கட்டி அழுவாதவளெல்லாம் என்னா குடியான வச்சியோ...?"

"படிப்பு ஆத்தா... அத்தனையும் படிப்பு..." என்று ராகமிட்ட கிழவியின் முழங்கை முழுவதும் பச்சை குத்தியிருந்தது. குதிரை மாதிரி சிற்சில உருவங்கள் அதன் மீது கருக்கங்களாகப் பரவியிருந்தன.

"எழவு வீட்டுக்கு வந்துட்டு வீட்டு மாப்பிள்ளை கணக்கா, கையைக் கட்டிக்கிட்டு என்னாடி பொம்பளே அவ..."

மங்கையர்க்கரசி கட்டியிருந்த கைகளை உதறவிட்டாள். அந்தப் பெண்களின் பேச்சு முழுவதும் தன்னைப் பற்றித்தான் என்பது தெரிந்ததும் அவளை அவமானம் பற்றியது. அந்த இடத்தை விட்டு உடனே அகன்றாக வேண்டும் என்று தோன்றிவிட்டது அவளுக்கு.

பேருந்தில் பயணிக்கும்போது மனோகரன் கேட்டான்.

"ஏன் உம்முனு வர்றே. அந்தக் கெழவி செத்த கவலையோ...?"

"ப்ச்...! இது வேற கவலை..." என்றாள்.

நகர வாழ்க்கையின் வறண்ட, இயந்திரமயமான சூழலால் தாலாட்டு, ஒப்பாரி போன்ற விஷயங்களுக்கு, தான் அந்நியப்பட்டுப் போனதை முதன் முறையாய் உணர்ந்தாள் மங்கையர்க்கரசி.

கிளிப்பிள்ளை மாதிரி சினிமாப் பாடல்களை மறுபடி பாடத்தான், பழக்கப் பட்டிருக்கிறாளே தவிர, நாட்டுப்புறப் பாடல்கள் பக்கம், அதுவும் ஒப்பாரியின் பக்கம், ரசனை திரும்பியதே இல்லை.

தொடக்கக் காலங்களில் மங்கையர்க்கரசியின் மாமியாரே கல்யாணம், துக்கம் போன்ற விஷயங்களுக்குச் சென்று வருவது வழக்கம். ஆனால் இப்போதெல்லாம் தள்ளாமை வந்து விட்டதால், மங்கையர்க்கரசியே செல்ல வேண்டியதாகிவிட்டது. திருமண வைபவங்களுக்குத் தனிப்பட்ட பங்களிப்பு என்பது மிக எளிதானது. ஆனால் துக்க வீடுகளுக்குச் செல்லும்போது, பெண்களோடு சேர்ந்து



அமர்ந்து கை கோத்து அழுது 'இழவு கொடுத்து' ஆக வேண்டிய கட்டாயம். இதெல்லாம் பழக்கமில்லாததால் எப்போதும் மங்கையர்க்கரசி ஓர் ஓரமாக கை கட்டி நின்று விடுவது வழக்கம். இந்த 'கை கட்டலே' கிராமத்துப் பெண்களின் ஏளன விமர்சனத்துக்கு ஆட்பட்டு விட்டது.

யாருமற்ற ஒரு தனிமையான மாலையில் தேர்வழிக்குப்பம் அத்தையை அணுகி, பிரச்னையைச் சொன்னாள் மங்கை.

"எந்தச் சிறுக்கிப் பய மவடி அவ.. சொல்லு.. நாளைக்கே போயி அவ சிண்டைப் புடிச்சி இழுத்தாந்து நாக்கைப் புடுங்கிக்கிற மாதிரி கேக்கறேன். ஒப்பாரி பாடிப்புட்டா பெரிய கலெக்டர் மவன்னு நினைப்பு அவளுக்கு..."

அந்தக் கிழவியை இப்போதே மனதால் முன்னிறுத்தி ஆத்திரத்துடன் கேள்விகளை அள்ளி வீசினாள் அத்தை.

"ஆமாம்... எப்பிடி இருந்தா அவ..."

குதிரைப் பச்சை குத்திய அடையாளம் சொன்னதுமே அத்தைக்குப் புரிந்து போனது.

"அட... சின்னக் காவணத்தாளா.. உம் மாமியாளோட சின்ன ஓர்ப்பிடியா அவ... திமிரு புடிச்சவ... கோமணத்துண்டு மாதிரி நாலு சொல்லை வச்சுக்கிட்டு எட்டு ஊருக்குப் பாடுவா... அவளுக்குத் தெரிஞ்சது ஒரே ஒப்பாரிதான்.. செத்தது மாமன் முறையோ, சித்தப்பன் முறையோ எல்லாத்துக்கும் ஒரே இழுப்புதான் அவளுக்கு.

'மானம் குடிகுடிக்க.. மண்ணியாறு தண்ணி

திருவையாறு பாலகுமார்

வர... நான் - மயிலா நடந்து வந்தா... என்ன - மயிரை உணத் தும்ப... - மவளே களை யாறும்பே...'ன்னு நாலு தடவை மூக்கைச் சிந்திப்புட்டு, ரெண்டு தடவை 'ஆங்' போட்டுப்புட்டு, இழவு வீட்டில குழம்பு வாசனை எங்க வருதுன்னு போற தின்னிச் செறுக்கி..."

ஒரு பாக்குக் கொட்டை அளவுக்குப் புகை யிலையைச் சுருட்டி வாய்க்குள் போட்டவுடன் கோபம் தணிந்தது.

"முன்னபின்ன பழக்கமில்லாதவங்களுக்கு எப்பிடி அத்தை அவ்வளவு பெரிய அழுகை வரும்..?"

"ஒண்ணும் பெரிய கம்பசித்திரமில்ல. எழவு வந்தவுடன் செத்துப் போனது நமக்கு என்ன முறைன்னு பார்க்கணும்... பெத்தவங்க முறையா... மாமன் மச்சான் முறையா... பங்காளி முறையான்னு எல்லாத்துக்கும் தனித் தனி ஒப்பாரி இருக்கு. முதல்ல மனசில ஒரு பாரத்தை உண்டாக்கிக்கணும்... இல்ல... ஏதாச்சும் நடந்து போன கஷ்ட காலத்தை நினைச்சுக்கணும்... நானெல்லாம் என் வீட்டுக்காரர் செத்துப் போனதை நினைச் சுப்பேன். கண்ணுல காவேரி கொட்டும்... ஒரு ஒப்பாரி சொல்றேன்... இது தாத்தா, பாட்டி முறைக்கு...

'வர்ணமடிச்ச முட்டாயி
வாங்கி வர பேத்தியிருக்க, உனக்கு
வாயடச்ச நேர்த்தி என்ன...

இப்படி ஆரம்பிச்சுட்டா போதும்... தானா வரும் அடுத்த வரி.

'கோரங்கி மிட்டாயி
கொண்டு வர பேத்தியிருக்க... உனக்கு
குரல் அடைச்ச நேர்த்தி என்ன...'

அப்படியே மாத்தி மாத்தி போட்டுக் கணும்... அவ்வளவுதான்... நடுவில் மூக்கை சிந்தற சாக்கில அடுத்த பாட்டை யோசிச்சி வச்சுக்கணும்..."

மங்கையர்க்கரசிக்குச் சிரிப்பும், சற்றே நம்பிக்கையும் வந்துவிட்டது. நீண்ட இரவில் நெடுநேரம் ஒப்பாரிக் கதைகளை வேடிக் கையாகச் சொல்லி முடித்து தூங்கப் போனாள் அத்தை. விடியற்காலையில் எழுந்து தேர்வழிக் குப்பம் கிளம்பிப் போய்விட்டாள்.

ஒரு கிராமத்துக்குப் படித்த மருமகளாக வந் ததில் தன் தலையில் ஏறியிருந்த அந்த மானசிக, ரகசிய கிரீடம் உருத் தெரியாமல் ஒருபுறம் சிதைவுற்றவாறு இருக்க, அந்த ஒப்பாரிப் பயிற் சியை மனத்துக்குள் நிகழ்த்திக் கொண் டிருந்தாள் மங்கையர்க்கரசி. நினைத்தபடிக்கு அது ஒன்றும் எளிதான விஷயமாக இல்லை. அவ்வப்போது அந்தப் பச்சைக் குதிரைப் பாட்டி நினைவில் வந்து மறைந்து போவாள்.

ஆறு மாதங்கள் கழித்து ஒருநாள் மனோ கரன் அவசரமாய் வந்து,

"கிளம்பு... கிளம்பு..." என்றான். "தேர் வழிக்குப்பம் சின்னம்மா இறந்துடுச்சாம்..."

மங்கையர்க்கரசிக்கு 'குபுக்'கென்று கண் களில் நீர் கட்டிக் கொண்டது. மனோகரனுடன் அவசரமாய்க் கிளம்பி ஓடினாள்.

பெருங்குரலெடுத்து அழுது பாடத் தொடங்கினாள்.

காவேரி தீர்த்தம் கொண்டு
கை மடக்கி தண்ணி ஊத்த...நான்
கனத்த தவம் செய்யலையே..
வெள்ளாத்து தண்ணி கொண்டு
வெரல் மடக்கி தண்ணி ஊத்த... நான்
வேண்ட தவம் செய்யலயே...

'படிச்ச பொம்பளையா இருந்தாலும் என்னமா எழவு கொடுக்கிறா பாரேன்...' என யாரேனும் கிழவிகள் அங்கே முணுமுணுக்கக் கூடும். ○

"தினமும் ஒரு ஒருநாள் கிரிக்கெட் பந்தயம் நடந்து கொண்டிருக்கிறது. சொல்லப் போனால் ஒரே நாளில் இரண்டு மூன்று பந்தயங்கள்கூட நடை பெறுகின்றன. இந்தப் போக்கை முதலில் தடுக்க வேண் டும். இல்லையென்றால் கிரிக்கெட்டின் கவர்ச்சி சீக்கிரமே மங்கிவிடும். பொன்முட்டையிடும் வாத்தைக் கொல்வது போன்ற போக்கு இது." இப்படி சமீபத்தில் எச்சரித்திருப்பவர் இங்கிலாந்தின் முன்னாள் கேப்டனான பாய் காட்.

தொகுப்பு: குல்லு

# சிவகாமியின் சபதம்

## முன்கதைச் சுருக்கம்:



பி. ஏழாம் நூற்றாண்டில், தென்னாட்டுத் தொண்டை மண்டலத்தில், காஞ்சி மாநகரைத் தலைநகராகக் கொண்டு அரசாண்டவர் பல்லவ மன்னர்கள். அவர்களுள் மிகப் பிரசித்தமானவர் மகேந்திர பல்லவர். கலை ஆர்வலர், மாவீரர், ராஜதந்திரி - இதே இயல்புகள் இவர் மகன் மாமல்ல நரசிம்மவர்மரிடமும் இருந்தன.

ஆயனச் சிற்பியின் மகளான நடனக் கலை ராணி சிவகாமியை நரசிம்மவர்மர் காதலித்தார். அவளும் அவர்பால் காதல் கொண்டிருந்தாள். நாட்டின் நலன் கருதி காதலுக்குத் தடை விதிக்க முயன்றார் மகேந்திர பல்லவர். அம் முயற்சியில் தோற்றார்.

வடக்கே வாதாபியைத் தலைநகராகக் கொண்டு ஆண்டு வந்த சளுக்க மன்னன் புலிகேசி, பல்லவ நாட்டின் மீது படையெடுத்து வந்தான். காஞ்சியை முற்றுகையிட்டும் பயனில்லை. அந் நகரைக் கைப்பற்ற முடியாமல் சமாதான உடன்படிக்கை செய்து கொண்டான்.

ஆனால் வாதாபிக்குத் திரும்புகையில் பல்லவ ராஜ்யத்தில் அனேகம் சேதங்களை விளைவித்து, பல்லாயிரம் பிரஜைகளைக் கைப்பற்றிச் சென்றான். சிவகாமியும் அவனால் அபகரிக்கப்பட்டாள்.

புலிகேசியின் அண்ணா நீலகேசி. இவர் நாகநந்தி என்னும் பெயர் ஏற்று புத்த பிக்ஷுவாக மாறி பல்லவ நாட்டில் ஒற்றாடியபோது சிவகாமியின் பேரில் காதல் கொண்டார்.

எனவே புலிகேசியால் கைப்பற்றிச் செல்லப்பட்ட சிவகாமியைச் சளுக்க நாட்டில் பாதுகாப்பாக வைத்திருக்க ஏற்பாடு செய்தார். ஆனால் அவர் ஊரில் இல்லாத சமயம் சிவகாமியை நாற்சந்திகளில் நடனமாட வைத்து அவமானப்படுத்தினான் புலிகேசி.

சிவகாமி, தன் காதலர் மாமல்லர் படை திரட்டி வந்து வாதாபியைத் தீக்கிரையாக்கித் தன்னை மீட்டுச் செல்லும் வரை அங்கிருந்து புறப்படுவதில்லை எனச் சபதம் செய்தாள்.

**சி**வகாமியின் சபதம் பற்றி பல்லவ ஒற்றர்கள் மூலம் அறிந்தார் மாமல்ல நரசிம்மர்.

தந்தையின் அந்திமக்காலக் கட்டளைக்குப் பணிந்து பாண்டிய இளவரசியை மணந்திருந்தார். ஒன்பது வருஷங்கள் ஆயத்தம் செய்து சளுக்க சாம்ராஜ்யத்தின் மீது படையெடுத்தார். அச் சமயம் வாதாபிக்கு வடக்கே அஜந்தாவுக்குச் சென்றிருந்தான் புலிகேசி. படையெடுப்பு பற்றி அறிந்து விரைந்து திரும்பினான். வாதாபிக்கு அவன் வந்து சேருமுன்னரே சேனாதிபதி பரஞ்சோதியின் தலைமையில் பல்லவ சேனை அவனுடன் மோதி பெரும் வெற்றி அடைந்தது. தாக்குதலைச் சற்றும் எதிர்பாராத புலிகேசி இறந்து போனான். எனினும் இது யாருக்கும் தெரியாதபடி ரகசியமாக அவன் சடலத்துக்கு எரியூட்டினார் நாகநந்தி.

இனி வாதாபிக் கோட்டையைத் தாக்கி அழிக்க வேண்டியதுதான் பாக்கி என்ற நிலையில் மாமல்லர் மந்திராலோசனை சபை கூட்டினார். அப்போது இலங்கை மன்னனும் மாமல்லரின் நண்பனுமான மானவன்மனைத் தவிர மற்றவர்கள் கோட்டையைத் தாக்கி அழிக்கக் கூடாது என்றனர். காரணம்: கோட்டைக் காவல் தலைவனிடமிருந்து சமாதான ஓலை வந்திருந்ததுதான். ஆனால் சிவகாமியின் சபதத்தை நிறைவேற்றுவதில் குறியாயிருந்த மாமல்லருக்கு இந்த அபிப்பிராயம் பிடிக்கவில்லை.

அப்போது சேனாதிபதி பரஞ்சோதி சிவகாமி அம்மையார் தமக்கு எழுதிய ஓலையைச் சக்கரவர்த்தியிடம் கொடுக்க, அதைப் படித்து மாமல்லரின் கோபம் எல்லை மீறியது.

## முப்பத்து நான்காம் அத்தியாயம்

# சிவகாமியின் ஓலை



சேனாதிபதி பரஞ்சோதிக்குச் சிவகாமி அனுப்பியிருந்த ஓலையில் பின்வருமாறு எழுதியிருந்தது:

'வீர பல்லவ சைனியத்தின் சேனாதிபதியும் என் அன்புக்குரிய சகோதரருமான பரஞ்சோதியாருக்கு ஆயனர் மகள் சிவகாமி எழுதிக் கொண்டது:

"இந்த அபலையை, அநாதையை ஒன்பது வருஷ காலம் தாங்களும் பல்லவ குமாரரும் மறந்து விடாமல் நினைவு வைத்துக் கொண்டிருந்து என் சபதத்தை நிறைவேற்றி வைப்பதற்காகப் படையெடுத்து வந்திருப்பதை அறிந்து கொண்டேன். கோட்டைக்கு வடதிசையில் நடந்த பெரு யுத்தத்தைப் பற்றியும் இங்கே செய்தி வந்திருக்கிறது. அந்த யுத்தத்தில் வாதாபிச் சக்கரவர்த்தி மாண்டிருக்க வேண்டும் என்று இங்குள்ளவர்கள் சொல்லிக் கொள்கிறார்கள்.

"இந்த வாதாபிக் கோட்டையின் காவலரான தளபதி பீமசேனர் என்னை வந்து பார்த்து ஓலை எழுதும்படி கேட்டுக் கொண்டார். அதன்படி என் மனப்பூர்வமான சம்மதத்துடன் இதை எழுதுகிறேன்.

"தாங்களும் பல்லவ குமாரரும் எந்த நோக்கத்துடன் படையெடுத்து வந்தீர்களோ அந்த நோக்கம் நிறைவேறி விட்டது. சளுக்க சைனியமும் வாதாபிச் சக்கரவர்த்தியும் நாசமடைந்தார்கள். இத்துடன் யுத்தத்தை நிறுத்தி வாதாபிக் கோட்டையின் சரணாகதியை ஒப்புக் கொள்ளும்படி ரொம்பவும் வேண்டிக் கொள்ளுகிறேன்.

"நான் அன்று செய்த சபதத்தைப் பல்லவகுமாரர் அதன்படியே நிறைவேற்ற வேண்டும் என்னும் விருப்பம் இப்போது எனக்கு இல்லை. அதை அப்படியே நிறைவேற்றுவதென்றால், இந்தப் பெரிய நகரத்தின் குற்றமற்ற ஜனங்கள் வீடு வாசல்களை இழந்து சொல்ல முடியாத கஷ்டங்களுக்கு உள்ளாகும்படி நேரிடும். அவர்களை அத்தகைய கொடுமைகளுக்கு உள்ளாக்க நான் பிரியப்படவில்லை. அவ்விதம் செய்தால் யாருக்கு என்ன பிரயோசனம்?

"ஏற்கெனவே நடந்த யுத்தத்தில் இரு தரப்பிலும் ரொம்பவும் உயிர்ச்சேதம்

அமரர் கல்கி



நேர்ந்திருப்பதாகத் தெரிகிறது. என் காரணமாக ஏற்பட்ட இந்த விபரீதப் படுகொலையை நினைத்து ரொம்பவும் வருத்தப்படுகிறேன்.

"அருமைச் சகோதரரே! கடந்த ஒன்பது வருஷ காலம் இந்த நகரத்தில் தன்னந்தனியாக நான் வசித்த போது ஓயாமல் என் மனம் சிந்தனை செய்து கொண்டிருந்தது. பல்லவ குமாரரும் தாங்களும் முன்னொரு தடவை வந்து என்னை அழைத்த சமயம் நான் உங்களுடன் கிளம்பி வரா ாது எவ்வளவு பெரும் பிசகு என்பதை உணர்ந்து கொண்டேன். என் சபதத்தை நிறைவேற்றிய பிறகுதான் இந்த நகரை விட்டுப் புறப்படுவேன் என்று பிடிவாதம் பிடித்தது எவ்வளவு அறிவீனம் என்பதை உணர்ந்து வருந்தினேன். ஆறு அறிவு படைத்த மனிதர்கள் யுத்தம் என்ற பெயரால் ஒருவரையொருவர் கொன்று கொள்வது எவ்வளவு பைத்தியக்காரச் செயல்?

"கடவுளால் சிருஷ்டிக்கப்பட்ட ஜீவன்களை மனிதர்கள் கொல்வது தெய்வ சம்மதமாகுமா? ஒரு சிறு அற்பமான உயிரைக்கூட நம்மால் சிருஷ்டிக்க முடியாமலிருக்கும்போது ஆயிரக்கணக்கான உயிர்களைக் கொல்வது எவ்வளவு பாபமான காரியம்? இதையெல்லாம் நினைத்துப் பார்க்கப் பார்க்க என்னால் இந்தப் பயங்கரமான பெரிய யுத்தம் வந்து விட்டதே என்று ரொம்பவும் துக்கப்படுகிறேன்.

"உலகத்தில் மனிதர்கள் குற்றம் செய்தால் அதற்குத் தண்டனையளிக்கவோ அல்லது மன்னித்து அருளவோ எல்லாம் அறிந்த இறைவன் இருக்கிறான். 'அவன் அன்றி இவ்வுலகில் ஓர் அணுவும் அசையாது' என்று பெரியோர்கள் சொல்லுகின்றனர். அப்படியிருக்க மனிதர்கள் தங்களையொத்த மற்ற மனிதர்களின் குற்றங்களுக்குத் தண்டனை விதிக்க ஏன் முற்பட வேண்டும்?

"சகோதரரே! போனது போகட்டும். இனி மேலாவது இரத்த வெள்ளம் பெருகுவது நிற்கட்டும்.

"என்னுடைய மூடப் பிடிவாதத்தினால் உங்களுக்கெல்லாம் நான் கொடுத்த கஷ்டங்களுக்காக என்னை மன்னித்து விடுங்கள். பல்லவ குமாரரிடம் நான் ரொம்பவும் கேட்டுக் கொண்டதாகச் சொல்லி யுத்தத்தை நிறுத்தச் செய்யுங்கள்.

"கோட்டை முற்றுகை ஆரம்பமானதிலிருந்து என்னிடம் இந் நகரவாசிகள் ரொம்பவும் மரியாதை காட்டி வருகிறார்கள்.

பல்லவ குமாரர் கோட்டைச் சரணா கதியை ஒப்புக் கொண்டால், என்னைப் பல்லக்கிலே ஏற்றிச் சகல மரியாதைகளு டனும் வெளியே அனுப்பி வைக்கச் சித்தமாய் இருக்கிறார்கள். இதையெல்லாம் பல்லவ குமாரரிடம் தெரியப்படுத்துங்கள்.

"உங்கள் எல்லோரையும் பார்க்க வேண்டும் என்று என் உள்ளம் துடி துடித்துக் கொண்டிருக்கிறது.

"இன்று சூரியன் மலைவாயில் இறங்கு வதற்கு முன்னால் தங்களையும் பல்லவ குமாரரையும் தரிசிக்கும் பாக்கியம் எனக்குக் கிடைக்கும் என்று நம்புகிறேன்.

"என் அருமைத் தந்தையின் பாத கமலங்களில் என்னுடைய நமஸ்காரங் களைச் சமர்ப்பிக்கிறேன்."

மாமல்லருடைய குணப்பண்பையும் மனப்போக்கையும் நன்கு அறிந்துள்ள நாம், சிவகாமி தேவியின் மேற்படி ஓலை அவருக்கு ஏன் அத்தனை கோபத்தையும் ஆத்திரத்தையும் உண்டாக்கியது என் பதை ஒருவாறு ஊகிக்கலாம்.

ஓலையைக் கிழிக்கப் போனவரிடம் சேனாதிபதி, "அது என் ஓலை" என்று சொன்னதும், மாமல்லரின் ஆத்திரம் இன்னும் அதிகமாயிற்று. "அப்படியா? இதோ உமது ஓலையை எடுத்துக் கொள்ளும். சேனாதிபதி! திவ்யமாக எடுத்துக் கொள்ளும். இந்தத் தர்மோபதேச மகா மந்திர ஓலையை நீரே வைத்துக் கொண்டு பூஜை செய்யும்!" என்று சொல்லிக் கொண்டே மாமல்லர் ஓலையை வீசி விட்டெறிந்தார்.

சேனாதிபதி அதைப் பயபக்தியுடனே பொறுக்கி எடுத்துக் கொண்டு கூறினார்: "ஆம். பல்லவேந்திரா! இது எனக்கு மகா மந்திரோபதேச ஓலைதான். திருநாவுக்கரசர் பெருமானிடம் சிவதீட்சை பெறு வதற்காகக் காஞ்சி நகரத்துக்கு வந்தேன். அந்தப் பாக்கியம் அன்று கிடைக்க வில்லை. ஆனால், சிவகாமி தேவியிடம் உபதேசம் பெறும் பாக்கியம் இப்போது கிடைத்தது. நான் ஆசாரியராக வரித்த ஆயனச் சிற்பியாருடைய குமாரியல்லவா சிவகாமி தேவி!"

மாமல்லருடைய கோபம் இப்போது வரம்புகளையெல்லாம் கடந்து விட்டது. சிவகாமி விஷயமாக நாலு பேருக்கு முன்னால் இதுவரை பேசி அறியாதவர், இப்போது, அத்தனை பேருக்கு முன்னால் வெட்ட வெளிச்சமாகப் பின்வரும் ஆங்கார வார்த்தைகளைக் கொட்டினார்:

"சேனாதிபதி! என் வாழ்நாளில் இரண்டு தவறுகளை நான் செய்திருக்கிறேன். சிற்பியின் மகளைச் சிம்மாசனத்தில் ஏற்றி வைக்க முயன்றேன். அந்த முயற்சியில் தோல்வியுற்றேன். தமிழ் ஒதவும் சிற்ப வேலை கற்கவும் வந்த உம்மைப் பல்லவ சாம்ராஜ்யத்தின் சேனாதிபதியாக்கினேன்! அதுவும் நான் செய்த பெருந் தவறு ஆயிற்று. சிற்பியின் மகள் சிம்மாசனத்துக்குத் தகுதியற்றவள் என்பதை நிரூபித்து விட்டாள். நாடி பார்க்கும் வைத்தியரின் மகன் நாடு பிடிக்கும் சேனைத் தலைவனாக யோக்கியதை அடைய முடியாது என்பதை நீர் நிரூபித்து விட்டீர்..!"

சேனாதிபதி பரஞ்சோதிக்குக் கண்ணில் நீர் ததும்பிற்று. அவமானமும் ஆத்திரமும் தொண்டையை அடைக்க, தழு தழுத்த குரலில், "பல்லவேந்திரா...!" என்று ஏதோ சொல்வதற்கு ஆரம்பித்தார்.

"சேனாதிபதி! நிறுத்தும்!" என்று மாமல்லர் கர்ஜனை செய்ததும், சேனாதிபதி வாயடைத்துப் போய் நின்றார். இதுவரை மாமல்லர் அவரிடம் இம் மாதிரி பேசியதே இல்லை. மரியாதைக் குறைவாகவோ மனம் புண்படும்படியோ அவரைப் பார்த்து ஒரு வார்த்தையும் கூறியதே இல்லை. மாமல்லரின் இந்தப் புதிய ருத்ராவதாரம் பரஞ்சோதிக்குப் பிடிபடவே இல்லை.

மாமல்லர் மேலும் சொல்லம்புகளைப் பொழிந்தார்: "என்னை யார் என்று எண்ணிக் கொண்டீர்? இந்தச் சிற்பி மகள் தான் என்னை யார் என்பதாக எண்ணிக் கொண்டாள்? என்ன தைரியத்தினால் இந்த மாதிரி ஓலை எழுத அவள் துணிந்தாள்? நீங்கள் இரண்டு பேரும் பல்லவ குலத்தின் பெருமையைக் குலைத்துப்

பாழாக்க இப்படி எத்தனை காலமாகச் சதி செய்தீர்கள்? இந்த மூடப் பெண் புத்தியில்லாமல் பிடிவாதம் பிடிக்கும் போது இவளுடைய பிடிவாதத்துக்காக நாம் யுத்தத்துக்கு ஆயத்தம் செய்ய வேண்டும். இவள் பார்த்து யுத்தம் வேண்டாம் என்றால் உடனே இவளுடைய கட்டளையைச் சிரமேற்கொண்டு யுத்தத்தை நிறுத்தி விட வேண்டுமா? பல்லவ சாம்ராஜ்யமே இவளுக்காகத்தான் இருக்கிறது என்று எண்ணிக் கொண்டாளா? பல்லவ நாட்டுப் பிரஜைகளும் பல்லவ சக்கரவர்த்தியும் இவளுக்குத் தொண்டு செய்யும் அடிமைகள் என்று எண்ணிக் கொண்டாளா? இந்த யுத்தம் இவளுக்காகவே ஏற்பட்டது என்று நினைத்துக் கொண்டல்லவா இப்படி ஓலை எழுதத் துணிந்தாள்? ஒன்பது வருஷம் பிரயத்தனம் செய்து இந்த மகத்தான சைனியத்துடன் நான் படையெடுத்து வந்தது இந்தச் சலன புத்தியுள்ள சிற்பி மகளின் மூட சபதத்தை நிறைவேற்றுவதற்காக அல்ல; இதை நீர் நன்றாய்த் தெரிந்து கொள்ளும். பல்லவ குலத்தின் பங்கமுற்ற கௌரவத்தை நிலை நாட்டுவதற்காகவே நான் வந்தேன். மகேந்திர சக்கரவர்த்தி மரணத் தறுவாயில் எனக்கு இட்ட கட்டளையை நிறைவேற்றும் பொருட்டுப் படையெடுத்து வந்தேன். பதினெட்டு வயதில் மகாமல்லன் என்று பட்டம் பெற்ற நரசிம்ம பல்லவனைப் பார்த்து நானிலம் சிரிக்காதிருக்கும் பொருட்டு வந்தேன். அற்ப புத்தியுள்ள சிற்பி மகளின் சபதத்தை நிறைவேற்றுவதற்காக வரவில்லை. இவளிடம் தர்மோபதேசம் பெற்று மோட்சம் அடைவதற்காகவும் நான் வரவில்லை. மேலே யுத்தத்தை நடத்துவதற்கு உமக்கு இஷ்டமில்லையென்று தெரிகிறபடியால் உமக்கு இந்த க்ஷணமே சேனாதிபதி உத்தியோகத்திலிருந்து விடுதலை தருகிறேன்!''

இவ்வளவு நேரமும் சேனாதிபதியையே பார்த்துப் பேசிய மாமல்லர் சட்டென்று இலங்கை இளவரசரைத் திரும்பிப் பார்த்து, ''மானவன்மரே! நம்முடைய சேனாதிபதி இப்படி நல்ல சமயத்தில் என்னைக் கைவிட்டு விடுவார் என்று அறிந்துதான் உம்மையும் உடன் அழைத்து வந்தேன். நல்லவேளையாக என் விருப்பத்தின்படி நடக்க நீர் ஒருவராவது இருக்கிறீரே! கோட்டையைத் தாக்குவதற்கு உடனே ஏற்பாடு செய்யும். இன்றிரவே தாக்குதல் ஆரம்பமாகி விட வேண்டும்!'' என்றார்.

கோட்டை இடி குமுறி இடித்தாற் போன்ற குரலில் மாமல்லர் இவ்விதம் கர்ஜனை செய்து ஓய்ந்ததும் சிறிது நேரம் அங்கு நிசப்தம் குடிகொண்டிருந்தது. அனைவரும் திகைத்துப் போய் நின்றார்கள். மாமல்லரையும் பரஞ்சோதியையும் இரண்டு உடலும் ஒருயிருமான நண்பர்கள் என்று அவர்கள் அதுகாறும் எண்ணியிருந்தார்கள். பரஞ்சோதியைப் பார்த்து மாமல்லர் இவ்வளவு கடுமையான மொழிகளைக் கூறியது அவர்களைப் பெருங்கலக்கத்துக்கு உள்ளாக்கியது.

மானவன்மரோ, 'இது என்ன? பிள்ளையார் பிடிக்கப் போய்க் குரங்காக முடிந்ததே! சேனாதிபதியை என்றென்றைக்கும் நமது விரோதியாக்கிக் கொண்டோமே?' என்று எண்ணி வேதனையடைந்து சும்மா நின்றார்.

''மானவன்மரே! ஏன் நிற்கிறீர்?'' என்று மாமல்லர் அதட்டவும், மானவர்மர் பரஞ்சோதியைப் பார்த்தார். மற்றவர்களைப் போலவே அத்தனை நேரமும் திகைத்து நின்ற பரஞ்சோதி அப்போது ஓர் அடி முன்னால் வந்து தழுதழுத்த குரலில், ''பல்லவேந்திரா! பன்னிரண்டு வருஷம் பல்லவ சாம்ராஜ்யத்துக்காக நான் செய்திருக்கும் சேவையை முன்னிட்டு ஒரு வரம் அருள வேண்டும்!'' என்றார்.

மாமல்லர் மறுமொழி ஒன்றும் சொல்லாமலிருக்கவே பரஞ்சோதி மேலும் கூறினார்: ''பிரபு! தாங்களும் நானும் இதோ தெரியும் இந்த வாதாபி நகரத்துக்குள்ளே நாற்சந்தியில் நிற்கும் புலிகேசியின் ஜயஸ்தம்பத்துக்கருகில் நின்று ஒரு சபதம் எடுத்துக் கொண்டோம். கூடிய சீக்கிரம் படையெடுத்து வந்து அந்தப் பொய் ஜயஸ்தம்பத்தைப் பெயர்த்துத் தள்ளிவிட்டு அதற்குப் பதிலாகப் பல்லவ விஜ

யத்தின் ஞாபக ஸ்தம்பத்தை அதே இடத்தில் நிலை நாட்டவும், சிவகாமி தேவியை விடுதலை செய்து கொண்டு போகவும் பிரதிக்ஞை செய்தோம். அதை நிறைவேற்றும் பொருட்டுச் சென்ற ஒன்பது வருஷ காலமாக இரவும் பகலும் நாம் உழைத்து வந்தோம். அந்தப் பிரதிக்ஞை நிறைவேறும் வரையில் இந்தச் சேனாதிபதி பதவியை அடியேன் வகிப்பதற்கு அனுமதி கொடுங்கள்!'' என்றார்.

மாமல்லரின் முகத்தில் கோபாவேசம் தணிந்து ஓரளவு மகிழ்ச்சியும் மலர்ச்சியும் காணப்பட்டன. "இதற்கு இவ்வளவு சுற்றி வளைத்து வரம் கேட்பானேன்? சேனாதிபதி! நான் விரும்புவதும் அதுவேதான். உடனே தாக்குதலை ஆரம்பியுங்கள்!'' என்றார்.

"தயவு செய்து மன்னிக்க வேண்டும். இன்னும் ஒரு சிறு கோரிக்கை, பிரபு! கோட்டையைத் தாக்க ஆரம்பித்து விட்டால் ஒரு பகல் ஓர் இரவுக்குள் துரிதமாக முடித்து வெற்றி பெற வேண்டும். அதற்குத் தக்க ஆயத்தம் செய்வதற்கு மூன்று நாள் அவகாசம் கொடுங்கள்!'' என்று சேனாதிபதி விநயத்துடன் கேட்டார்.

மாமல்லரின் மௌனம் அவர் வேண்டா வெறுப்பாகச் சேனாதிபதியின் கோரிக்கைக்கு இணங்கியதற்கு அறிகுறியாய் இருந்தது.

## முப்பத்து ஐந்தாம் அத்தியாயம்

# வாதாபி கணபதி

மனிதர்களுக்குள்ளே இரு வகை சுபாவம் உள்ளவர்கள் உண்டு. ஒருவகையார் கொடூரமான காரியங்களையும் காட்சிகளையும் பார்க்கப் பார்க்க அவற்றைக் குறித்து அலட்சியமாக எண்ணத் தொடங்குகிறார்கள். அப்புறம் அத்தகைய கொடூரமான காரியங்களைச் செய்வது அவர்களுக்குச் சகஜமாகி விடுகிறது. ஆரம்பத்தில் பரிதாபம் அளிக்கும் சம்பவங்கள் நாளடைவில் அவர்களுடைய மனத்தில் எத்தகைய உணர்ச்சியையும் உண்டாக்குவதில்லை.

இன்னொரு வகை சுபாவமுள்ளவர்களும் இந்த உலகில் இருக்கிறார்கள். கொடூரமான காட்சிகளைப் பார்க்கப் பார்க்க அவர்களுடைய உள்ளம் உணர்ச்சியின்றித் தடித்துப் போவதற்குப் பதிலாக ஆத்திரம் அதிகமாகிறது. பரிதாப சம்பவங்களைப் பார்க்கப் பார்க்க அவர்களுடைய மனவேதனை மிகுதியாகிறது. அநீதிகளையும், அக்கிரமங்களையும் காணக் காண அவற்றை உலகிலிருந்து ஒழிக்க வேண்டுமென்ற பிடிவாதம் அதிகமாக வளர்கிறது. பிந்திய சுபாவமுள்ள மாந்தர் கூட்டத்தைச் சேர்ந்தவர் சேனாதிபதி பரஞ்சோதி. இரத்தத்தைப் பார்க்கப் பார்க்க இரத்த வெறி அதிகமாகும் ராட்சஸ வர்க்கத்தை அவர் சேர்ந்தவரல்ல. வாதாபிப் பெரும் போரில் போர்க்களத்திலிருந்து ஓடிய இரத்த வெள்ளத்தையும் மலை மலையாகக் குவிந்து கிடந்த மனித உடல்களையும் பார்த்து, படுகாயமடைந்து உயிர் போகும் தறுவாயில் அலறிக் கொண்டிருந்தவர்களின் ஓலத்தையும் கேட்ட பிறகு, பரஞ்சோதியின் உள்ளத்தில், "இந்தப் பயங்கரமெல்லாம் என்னத்திற்கு? மனிதருக்கு மனிதர் கொடுமை இழைப்பதும் கொன்று கொண்டு சாவதும் எதற்காக?' என்ற கேள்விகள் எழுந்திருந்தன.

அத்தகைய மன நிலைமையில் சிவகாமி தேவியின் ஓலை வரவே, அதில் எழுதியிருந்த ஒவ்வொரு வார்த்தையும் உண்மையென்று அவருக்குப் பட்டது. மேலும் அவ்விதக் கொடுஞ் செயல்களில் தம்மைப் புகவொட்டாமல் தடுத்தாட்கொள்வதற்காக இறைவனே சிவகாமி தேவியின் மூலம் அத்தகைய உபதேசத்தைச் செய்தருளியதாக அவர் எண்ணினார். இல்லாவிடில், மாமல்லருக்கு நேராக எழுதாமல் ஆயனர் மகள் தமக்கு அந்த ஓலையை எழுத வேண்டிய கார

ணம் என்ன?

சிவகாமி தேவியே தமது சபதத்தை நிறைவேற்ற வேண்டிய அவசியமில்லை என்று சொல்லி விட்டபடியால், மாமல்லரும் அதற்கு உடனே இணங்கி விடுவார் என்று பரஞ்சோதி கருதினார். புலிகேசி பத்து வருஷத்துக்கு முன்னால் பல்லவ நாட்டில் செய்த கொடுமைகளுக்காக இப்போது வாதாபி நகரின் ஜனங்கள் மீது பழி தீர்த்துக் கொள்வதில் யாருக்கு லாபம்? மேலும், இது இத்துடன் போகும் என்பது என்ன நிச்சயம்! பத்து வருஷங்களுக்கு முன்னால் புலிகேசி பல்லவ நாட்டில் செய்த அக்கிரமங்களுக்கு இப்போது வாதாபி மக்கள் மீது நாம் பழி வாங்குகிறோம். அதே மாதிரி இன்னும் சில வருஷம் கழித்துச் சளுக்க வம்சத்தார் மறுபடி பல்லவ நாட்டின் மீது பழி வாங்கப் பிரயத்தனப்படலாம் அல்லவா? நாட்டை ஆளும் மன்னர்கள் தங்களுடைய சொந்தக் கௌரவத்தையும் குல கௌரவத்தையும் நிலை நாட்டிக் கொள்வதற்காக ஒருவரையொருவர் பழி வாங்க முற்படுவதனால், இரு தரப்பிலும் குற்றமற்ற ஜனங்கள் அல்லவா சொல்ல முடியாத எத்தனையோ அவதிகளுக்கு உள்ளாகிறார்கள்!





ப்படியெல்லாம் சேனாதிபதி பரஞ்சோதியின் உள்ளம் சிந்தனை செய்து கொண்டிருந்தது. இடையிடையே மாமல்லர் விடுத்த கூரிய சொல்லம்புகளின் நினைவு அவருக்கு வேதனையளித்துக் கொண்டிருந்தது. மாமல்லருக்கும் தனக்கும் உள்ளமும் உயிரும் ஒன்றே என்பதாக எண்ணி மனப்பால் குடித்துக் கொண்டிருந்ததெல்லாம் பொய்யாக அல்லவா போய்விட்டது? தம்முடைய யோசனையை அவ்வளவு அலட்சியமாகப் புறக்கணித்ததோடு, மற்றவர்களுக்கு முன்னால் தம்மை அவ்வளவு அகௌரவப் படுத்திப் பேசி விட்டாரே! அரச குலத்தினரின் சுபாவமே இப்படித்தான் போலும்! அதிலும் அந்த இலங்கை நாட்டான் வந்ததிலிருந்து மாமல்லருடைய சுபாவமே மாறிப் போய்விட்டது! எல்லாம் அவனால் வந்த வினைதான்.

மாமல்லரிடம் மூன்று நாள் அவகாசம் கொடுக்கும்படி சேனாதிபதி பரஞ்சோதி கோரியபோது, கோட்டைத் தாக்குதலுக்குத் தக்க ஆயத்தம் செய்வதற்காகவே அவ்விதம் கோருவதாகக் கூறினார். இந்தக் காரணம் என்னவோ உண்மைதான். ஆயத்தமில்லாமல் ஆரம்பித்துப் பத்து நாளில் செய்யக் கூடிய காரியத்தைத் தகுந்த ஆயத்தங்களுடன் ஆரம்பித்து ஒரே நாளில் செய்து விடலாம் என்னும் உண்மையைச் சேனாதிபதி பரஞ்சோதி தமது அனுபவத்தில் கண்டறிந்திருந்தார். எனவே, அந்த முறையைத் தம் யுத்த தந்திரங்களின் முதன்மையான தந்திரமாக அனுஷ்டித்து வந்தார்.

ஆனால், சேனாதிபதி மூன்று நாள் அவகாசம் வேண்டும் என்று கேட்டதற்கு மேற்கூறிய காரணத்தைத் தவிர இன்னும் ஒரு முக்கிய காரணம் இருந்தது.

அது, இன்னமும் வாதாபிக் கோட்டைக்குள்ளே இருந்த சிவகாமி தேவியைக் கோட்டைத் தாக்குதல் ஆரம்பிப்பதற்குள்ளே பத்திரமாக வெளியில் கொண்டு வந்து சேர்க்க வேண்டும் என்பதுதான். பல்லவ சைனியம் கோட்டையை வெளியிலிருந்து தாக்க ஆரம்பிக்கும்போது கோட்டைக்குள்ளே ஆயனரின் குமாரிக்கு ஏதேனும் ஆபத்து விளையாது என்பது என்ன நிச்சயம்?

இதைப் பற்றி ஏற்கெனவே மாமல்லரும் பரஞ்சோதியும் கலந்து யோசனை செய்து கோட்டைக்குள்ளே ஒரு சிலரை முன்னதாக அனுப்புவதற்குச் சுரங்க வழி ஏதாவது இருக்கிறதா என்று கண்டுபிடிக்கச் சத்ருக்னனையும் குண்டோதரனையும் ஏவியிருந்தார்கள். இவர்களுடைய முயற்சி என்ன ஆகிறது என்று பார்ப்பதற்காகவும் சேனாதிபதி மூன்று நாள் அவகாசம் கேட்டார்.

அந்த மூன்று நாளும் முடியும் சமயம் இப்போது வந்துவிட்டது. மூன்றாம் நாள் சூரியன் அஸ்தமிக்கும் நேரம். அன்றிரவு மாமல்லர் தமது முடிவைச் சொல்லி விட்டால், உடனே தாக்குதலை ஆரம்பிக்க வேண்டியதாயிருக்கும். ஆனால், சத்ருக்னனும் குண்டோதரனும் இன்னும் வந்தபாடில்லை. இந்தத் தர்ம சங்கடத்துக்கு என்ன செய்வது? மாமல்லர் ஒருவேளை தம் கருத்தை மாற்றிக் கொண்டு சண்டையில்லாமலே கோட்டையின் சரணாகதியை ஒப்புக் கொள்ளுவதாயிருந்தால் நல்லதாய்ப் போயிற்று. இல்லாவிடில், சிவகாமி தேவிக்கு அபாயம் ஒன்றும் நேராமல் பாதுகாப்பது எப்படி?



வ்விதமெல்லாம் பலவாறாகச் சிந்தனை செய்து கொண்டே பல்லவ சேனாதிபதி வாதாபிக் கோட்டையின் மதில் ஓரமாகக் குதிரை மீது வந்து கொண்டிருந்தார். கோட்டைக்கு உட்புறத்தில் ஏதோ சலசலப்பு ஏற்பட்டிருந்ததாகத் தோன்றியது. இத்தனை நாளும் கோட்டைக்குள்ளே எல்லையற்ற மௌனம் சதா குடி கொண்டிருந்திருக்க அதற்கு மாறாக இப்போது ஏதோ நானாவிதச் சப்தங்கள் எழுந்து கொண்டிருந்தன. இதனால் பரஞ்சோதியின் உள்ளக் கொந்தளிப்பு அதிகமாயிற்று. கோட்டையின் பிரதான முன்வாசலை அடைந்ததும் பரஞ்சோதி குதிரையை நிறுத்தினார். கோட்டையைத் தாக்குவதாயிருந்தால் அந்த பிரதான வாசலின் பிரம்மாண்டமான கதவுகளை முதல் முதலில் உடைத்

## அருள்வாக்கு

மனோ, வாக், காயம் என்கிறபடி மனஸால் பகவத் ஸ்மரணம், வாக்கினால் மந்திரம், காயத்தால் காரியம் மூன்றையும் சேர்த்துத்தான் ஆசாரங்கள் ஏற்பட்டிருக்கின்றன. மந்திரம் அல்லது பகவத் நாமம் இல்லாமல் காரியத்தைப் பண்ணுவதில் பிரயோஜனம் இல்லை. மனுஷ்யன் செய்கிற காரியத்தில் அநேகம் எல்லா ஜீவஜந்துக்களுந்தான் செய்கின்றன. ஒரு கிருமியிலிருந்து ஆரம்பித்து எந்த ஜீவ ராசியும் சாப்பிடத்தான் செய்கிறது. அப்படியே மனுஷ்யனும் செய்தால் மனுஷ்ய ஜன்மா எடுத்து என்ன பிரயோஜனம்? அதனால்தான் இவன் பிராணாஹுதி செய்து, கோவிந்த நாமாவைச் சொன்னபடி சாப்பிட வேண்டுமென்று சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிறது. மீன் கூடத்தான் ஸதாவும் ஜலத்திலேயே முழுகியிருக்கிறது. அதனால் அது ஸ்நானம் பண்ணி மடியாயிருக்கிறதாகி விடுமா? மந்திரவத்தாகக் குளித்தால்தான் அது ஸ்நானமாகும். அல்லது கோவிந்தா, கோவிந்தா என்றோ, இஷ்ட தெய்வத்தின் நாமத்தைச் சொல்லிக் கொண்டோ ஸ்நானம் செய்ய வேண்டும். இப்படி எல்லாமே காரியமாக மட்டுமில்லாமல், மனஸும் வாக்கும் ஈச்வரனிடம் செலுத்தப்பட்டுச் செய்யப்படுவதுதான் ஆசாரம்.



**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்**

தெறிந்தாக வேண்டும். அப்போதுதான் ஏககாலத்தில் அநேக வீரர்கள் உள்ளே புகுவது சாத்தியமாகும். சொற்ப நேரத்தில் நகரைக் கைப்பற்ற முடியும். இதற்கு வேண்டிய ஏற்பாடுகள் முன்னமே செய்யப்பட்டிருந்தனவெனினும் கடைசி முறையாக யானைப்படை வீரர்களுக்குக் கட்டளையிடுவதற்கு முன்னால் ஒரு தடவை அந்த வாசலை நன்றாய்க் கவனிக்கச் சேனாதிபதி விரும்பினார். எனவே, குதிரை மேலிருந்து இறங்கி வாசலை நெருங்கி வந்தார். அப்போது அந்த வாதாபிக்கோட்டை முன் வாசலில் அமைக்கப்பட்டிருந்த அருமையான வேலைப்பாடமைந்த சிற்பங்கள் அவர் கவனத்தைக் கவர்ந்தன. அந்தச் சிற்பங்களிலே கணபதியின் விக்ரகம் ஒன்றும் இருந்தது. பரஞ்சோதி அதன் அருகில் சென்று கைகூப்பி நின்றார். மனத்திற்குள் பின்வருமாறு பிரார்த்தனை செய்து கொண்டார்: "விக்னங்களையெல்லாம் நிவர்த்தி செய்யும் விநாயகப் பெருமானே! நாங்கள் வந்த காரியம் நன்கு நிறைவேற அருள் புரிய வேண்டும்! என் குருதேவரின் குமாரி சிவகாமி தேவிக்கு எவ்வித தீங்கும் நேரிடாமல் அவரைப் பத்திரமாய் அவருடைய தந்தை ஆயனரிடம் ஒப்புவிப்பதற்குத் துணை செய்ய வேண்டும். என்னுடைய இந்தப் பிரார்த்தனையை நீ நிறைவேற்றி வைத்தால் பதிலுக்கு நானும் உனக்கு இந்தக் கோட்டைத் தாக்குதலில் எவ்விதத் தீங்கும் ஏற்படாமல் பார்த்துக் கொள்கிறேன். உன்னை என் பிறந்த ஊருக்குக் கொண்டு போய் ஆலயங் கட்டி பிரதிஷ்டை செய்வித்துத் தினந்தோறும் பூஜையும் நடத்துவிக்கிறேன்."

இவ்வாறு பரஞ்சோதி பிரார்த்தனை நடத்தி முடித்த அதே கணத்தில் அந்தக் கோட்டை வாசலுக்குச் சற்றுத் தூரத்தில் நின்ற பல்லவ வீரர்களிடையே மிக்கப் பரபரப்பு காணப்பட்டது. கோட்டை வாசலின் உச்சியைப் பார்த்தவண்ணம் அவர்கள் ஹாஹாகாரம் செய்தார்கள். அது சேனாதிபதியின் கவனத்தையும் கவரவே, அவர் அந்த வீரர்களை நோக்கினார். அவர்களில் ஒருவன், "சேனாதிபதி! வெள்ளைக் கொடி இறங்கி விட்டது!" என்று கூவினான்.

சேனாதிபதி தாமும் அவர்களிருந்த இடத்துக்கு விரைந்து சென்று கோட்டை வாசலின் உச்சியைப் பார்த்தார். மூன்று நாளாக அங்கே பறந்து கொண்டிருந்த சமாதான வெள்ளைக் கொடி காணப்படவில்லை!

(தொடரும்)





# அகோரப் பசியில் கோரைப் பயிர்கள்!

**வா**னம் பார்த்த பூமிக் காடுகளில் அவற்றை விளைவிக்க முடியாது. எந்நேரமும் தண்ணீர் சலசலத்து ஓடும் வாய்க்கால் பிரதேசங்களில் மட்டுமே அவை ஜீவித்து வளரும். கோரைப் பயிர் என்பது தன்னகத்தே பல விநோதங்களைக் கொண்டுள்ளது.

வயல்வெளிப் பயிர்களான நெல், வாழை, கரும்பு போன்றவற்றைக் காட்டிலும், அதிக மடங்கு தண்ணீர் உட்கொண்டு வளரும் பயிர் கோரை. இதற்குத் தண்ணீர்தான் உயிர் மூச்சு, முழு உணவு, எல்லாமே. உரமிடுதல் என்பது அவ்வப்போது அதனதன் வளர்ச்சியைப் பொறுத்து. எந்த அளவுக்குத் தண்ணீர் விடுகிறோமோ, அந்தளவுக்கு மகசூலையும் அடைந்து விடலாம்.

கோரைக் கிழங்குதான் கோரைப் பயிருக்கு விதை. அதனை வயலில் ஒரு முறை ஊன்றி விட்டால் போதும். சுமார் முப்பதிலிருந்து நாற்பது ஆண்டுகள் வரை, முதன்முதலாக ஊன்றிய கோரைக் கிழங்கிலிருந்து விளைந்து கொண்டே இருக்கும். கோரைக் கிழங்கின் மகத்துவம் இது. ஒவ்வொரு பகுதியிலும் கோரை அறுவடை என்பது, அதனதன் ஆறு மாத காலத்துக்குத் தகுந்தபடி ஆகிக் கொண்டிருக்கும்.

* ரமேஷ்பாபு

**கொ**டுமுடியிலிருந்து பரவலாக கரூர், வாங்கல், பாண்டமங்கலம், பெட்டவாய்த்தலை, முசிறி, அய்யம்பாளையம், ஆமூர், குணசீலம், வாத்தலை போன்ற பகுதிகளில் கோரைப் பயிர் சாகுபடி ஆகின்றது. இங்கிருந்துதான் கோரைப் பயிர்களும், கோரைப் பாய்களும் தமிழகத்தின் எல்லா இடங்களுக்கும், இந்தியாவின் முக்கிய நகரங்களுக்கும் கொண்டு செல்லப்படுகின்றன.

தற்போது தண்ணீரின்றிக் காய்ந்து போனதில், கோரைப் பயிர் வளர்ந்த விளைநிலங்கள் தரிசுகளாய் மாறிப் போகும் அபாயத்தை எதிர் கொண்டுள்ளன.

**வெ**ள்ளூர் கிராமத்தைச் சுற்றிலும் கோரைப் பயிர் சாகுபடி வயல்கள். ஆண்களும் பெண்களுமாய்ப் பெரும்பாலோர்க்கு கோரை சார்ந்த கைத் தொழிலே ஜீவிதம்.

கோரைப் பயிர் சாகுபடியை இந்த விவசாயிகள் அதிகம் நேசிக்கக் காரணம்? களை பறிக்கும் வேலை இல்லை, மருந்து தெளிக்க வேண்டிய அவசியம் இல்லை, வளர்ச்சிக்குத் தேவைப்படும் சமயங்களில் உரமிட்டு வர வேண்டும். எப்போதும் வயலின் மேற்பரப்பு காய்ந்து போகாதவாறு தண்ணீர் மட்டும் விட்டு வைத்தால் போதும். அறுவடைக்குப் பயிர்கள் ஜம்மென்று ஆளுயரத்துக்கு வந்து



நிற்கும். அறுவடையின்போது, கைப்பிடி அளவு கோரைப் பயிரை விட்டுவிட்டு அறுப்பார்கள். அதன்பின்னர் எஞ்சிய கூளங்களை அங்கேயே எரித்து விடுவார்கள். அதனால் எதுவும் பாதிப்பில்லை. அடுத்து தண்ணீர் பாய்ச்சும்போது மண்ணுக்குள்ளிருக்கும் கோரைக் கிழங்குகள் கோரைப் பயிரை மண்ணுக்கு மேலே உயிர்ப்பித்துக் கொண்டு வரும். சுமார் முப்பது நாற்பது ஆண்டுகளுக்கு இயற்கையின் இந்த மாயாஜாலம் நிகழ்ந்து கொண்டேயிருக்கும்.

காவிரியில் இந்த ஆண்டு ஏற்பட்டிருக்கும் தண்ணீர்ப் பஞ்சத்தினால், அந்த மாயாஜாலமும் மண்ணுக்குள் புதையுண்டு போவதாகக் கூறுகிறார்கள் வெள்ளூர் கிராமத்து விவசாயிகள்.

"தினசரி அம்பது அறுபது ரூபாய்க்கு எப்படியும் எனக்கு வேலை கெடைச்சுடும். இப்ப ஒரு வருசமா வேலையே இல்லீங்க. கோரைப் பயிர் அறுக்கறதுதான் எனக்குத் தெரிஞ்ச வேலை. இப்ப ஒரு நாளைக்கு பத்து இருபது கூலி கெடைக்கறதே அருசா போய்டிச்சு. என்னோட ஒரு பையன் பாய் தறி ஓட்டுறான். இப்ப அவனுக்கும் சரியா வேலை இல்லை. வீட்டுல மொத்தம் அஞ்சு பேரு. எப்பிடி காலத்தை ஓட்டுறதுன்னே தெரியலை!" என்கிறார் கோரைப் பயிர் விவசாயத் தொழிலாளியான ஆறுமுகம்.

"வயலுக்குப் பாய்ச்ச தண்ணி இல்லாம, என்னோட ஒன்னரை ஏக்கரும் நாணல், சம்பு மொளைச்சி வீணாய்க் கெடக்குது. ரெண்டு வருசம் ஆச்சு, என்னோட வயல்லே கோரைப் பயிர் அறுத்து. இனிமேயும் எப்போ ஆத்துல தண்ணி வரும். மழை எப்போ நல்லாப் பெய்யும்ன்னு தெரியலை!" என்று நிகழ்காலப் பிரச்னைகளோடு, எதிர்காலக் கவலைகளையும் சேர்த்து வைத்துக் கொண்டு பேசுகிறார் வெள்ளூர் கிராமத்து விவசாயி வேம்பு.

முப்பத்தியேழு வயதான மாசி என்பவருக்கு மூன்று ஏக்கர் வயல். அதில் சாப்பாட்டுக்கென அரை ஏக்கரில் நெல் சாகுபடி. மீதம் இரண்டரை ஏக்கர் கோரை. கடந்த மூன்று ஆண்டுகளில் அதுவும் படிப்படியாகக் குறைந்து வந்து, இப்போது அரை ஏக்கரில் மட்டுமே ஏதோ சுமாராக மூச்சு விட்டுக் கொண்டிருக்கிறது கோரைப் பயிர்.

**கோ**ரைப் பயிர் விளைச்சலையொட்டி கோரைப் பாய் உற்பத்தித் தொழிலும் படு வீழ்ச்சி அடைந்துள்ளது. மூன்று வருடங்களுக்கு முன்பாக, ஒரு கட்டுக் கோரைக்கு இருநூற்றைம்பது ரூபாய் முதல் முன்னூறு வரைக்கும் கிடைத்தது. இப்போது ஒரு கட்டுக் கோரை அறுநூறு ரூபாய்க்கு வந்துவிட்டது. இந்த அதிகப்படியான விலைக்கும் கோரைக் கட்டுகள் தாராளமாய்க் கிடைப்பதில்லை.



* ஆறுமுகம்



* மாசி



* வேம்பு



* கோரைக் கிழங்கு

விளைச்சலற்றுப் போனதால், இந்த விபரீத நிலைக்குத் தள்ளப்பட்டுள்ளனர் கோரைப் பாய் உற்பத்தியாளர்கள்.

"இது எங்கள் பகுதியில் மட்டுமே காலங்காலமாக விளைந்து வருகிற பணப் பயிர். இதன் மிக அதிகப்படியான தண்ணீர்த் தேவையை மூன்று ஆண்டுகள் முன்பு வரைக்குமாக, பொங்கிப் பெருகி வந்த காவிரியின் தண்ணீர் ஆண்டுதோறும் பூர்த்தி செய்து வந்தது. சமீபத்திய மூன்று ஆண்டுகளில், படிப்படியாகக் குறைந்து வந்துள்ள காவிரியின் நீர் வரத்து, கோரைப் பயிர் சாகுபடியை மிக அதிகமாகப் பாதித்துவிட்டது. அதுவும் இந்த ஆண்டு வறண்ட பாலைவனமாகக் காவிரி மாறிப் போனதால், எங்கள் பகுதியின் கோரைப் பயிர் விளைச்சல் என்பது, மலையளவில் இருந்து கடுகளவாய்ச் சிறுத்துப் போய்விட்டது. இதனால் கோரைப் பாய் உற்பத்தித் தொழிலும் நசித்துப் போனது. கோரை விவசாயிகள், கோரைப் பாய்த் தொழிலாளிகள் அனைவரும் கடும் அவதிக்கு ஆளாகி உள்ளனர். தவறாது பெய்ய வேண்டிய பருவ மழைகளும், தகராறு செய்யாது ஓடி வர வேண்டிய காவிரித் தண்ணீரும் மட்டுமே, கோரைப் பயிர் சாகுபடிக்கு மீண்டும் புத்துயிர் தர முடியும்!" எனக் கூறுகிறார் முசிறி, ரமேஷ் பாய் தொழிலகத்தின் உரிமையாளர் பி. ரமேஷ் பாபு.

கட்டுரை, படங்கள் :

**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

மும்பையில் வசிக்கும் லட்சுமிக்கு பன்னிரண்டு வயதான போது பெற்றோர் குல்பர்காவுக்குத் திரும்ப வேண்டியதாயிற்று. தகப்பனாரின் வி.ஆர்.எஸ். பணம், தவறாக முதலீடு செய்யப்பட்டதால் திரும்பக் கிடைக்கவில்லை; குடும்பத்தின் நிதி ஆதாரமே குலைந்து போயிற்று. ஏதோ வயிற்றுப் பாட்டுக்கு வருகிற அளவுக்கு, கிராமத்தில் ஒரு துண்டு நிலம் இருந்ததால், பெற்றோர் அதைக் கவனிக்கப் புறப்பட்டுப் போனார்கள். மூத்த சகோதரர்கள் இரண்டு பேர், லட்சுமியுடன் மும்பையிலேயே தங்கினார்கள்.

பொறுப்பு தன் தலை மீது விழுந்ததும், லட்சுமி சமையலில் ஆரம்பித்து, வீட்டு வேலைகள் அத்தனையும் செய்தாள். பள்ளிப் படிப்பையும் விட்டுவிடவில்லை. படிப்பில் எழுபது, எண்பது என்று மதிப்பெண்கள் வாங்கி வந்தாள். அண்ணன் ராஜ், பள்ளி இறுதித் தேர்வில் முதலாவதாக வந்தான். டோம்ப்விலியில் சிவாஜி ராவ் ஜொந்தாலே கல்லூரியில், 'கெமிகல் இஞ்சினீயரிங் சேர்ந்து, இப்போது மூன்றா வது வருடம் படித்துக்கொண்டிருக்கிறான்.

லட்சுமிக்கு சார்ட்டர்ட் அக்கவுண்டன்ட் ஆக ஆசை. எனவே பி.காம் படித்துக் கொண்டிருக்கும் போதே, ஆர்ட்டிகிள்ஷிப் பயிற்சிக்கு ஜி.எம். காமத் அண்ட் கம்பெனியில் சேர்ந்து விட்டாள். சி.ஏ. இன்டர் தேர்வுக்கும் தயாராகி விட்டாள்.

இந்த லட்சுமி மாதிரி நூற்றி அறுபத்தாறு இளைஞர்களுக்கும், இளம் பெண்களுக்கும் உதவி வருகிறது 'சன்' என்கிற தொண்டு நிறுவனம்.

Support Unemployed & Needy என்பதன் சுருக்கம்தான் சன் (Sun). மிகப் பெரிய பன்னாட்டு நிறுவனம் ஒன்றிலிருந்து அறுபது வயதானதும் ஓய்வு பெற்ற உயரதிகாரிகளும், இயக்குனர்களும், தொழிலாளர் சங்கத் தலைவரும், பிற ஊழியர்களும் சேர்ந்து உருவாக்கியிருக்கும் அமைப்பு.

"வேலை கிடைக்காத இளைஞர்களுக்கும் யுவதிகளுக்கும் கார் டிரைவிங்கும், செக்ரடேரியல் பயிற்சியும் கொடுத்து விட்டால், மும்பையில் எளிதாக வேலை கிடைக்கிறது. இந்த நோக்கத்தோடுதான் இந்த அமைப்பைத் துவக்கினோம். ஆனால் பிறகுதான், இந்த இளைஞர்களுக்குள் மருத்துவக் கல்லூரி என்றும், இஞ்சினீயரிங் படிப்பு என்றும், சார்ட்டர்ட் அக்கவுண்டென்ட் என்றும் ஆசைகள் இருப்பதை அறிந்தோம். அந்த ஆசைகளையும் நிறைவேற்றினால், அவர்கள் இன்னும் வசதியாக இருப்பார்களே?" என்கிறார் எம்.எல். தத்தா.

இன்று 'சன்' கிராமப்புறங்களில் வேலைக்கான பயிற்சி மையங்கள் நிறுவி, எண்பத்தைந்து பெண்களுக்கும், பதினாறு ஆண்களுக்கும் தையலில் பயிற்சி கொடுத்திருக்கிறது.



* தத்தாவுடன், பயிற்சி பெறும் மாணவிகள்...

"ஒரு சமயத்தில், ஒரு கிராமத்திலிருந்து இரண்டே இரண்டு பேரைத்தான் தேர்ந்தெடுத்து பயிற்சி கொடுக்கிறோம். அதனால் கிராமத்தில் அவர்களுக்கு முழுநேர வேலை இருக்கிறது. ஒவ்வொருவரும் மாதம் நானூறு முதல் நான்காயிரம் வரை சம்பாதிக்கிறார்கள்!" என்கிறார் தத்தா.

இந்த டெய்லரிங் பயிற்சி இப்போது மும்பையை அடுத்த தானே கிராமங்களான கானேர், எம்போரிலிருந்து தொடங்கி, தமிழ்நாட்டில் ஹோசூரிலும், மேற்கு வங்கத்தில் பர்த்தமான் வரையிலும் பரவி வருகிறது. 'சன்' மூலம் பயன் அடைந்தவர்கள், நல்ல வேலையில் சேர்ந்த பிறகு, தங்களுக்காகச் செலவிடப்பட்ட தொகையை மாதா மாதம் திருப்பிக் கொடுத்தால், இன்னும் அதிக இளைஞர்களுக்கும், பெண்களுக்கும் உதவ முடியும் என்கிறார்.

"எங்கள் ஒரே நோக்கம், ஒவ்வொரு தனி மனிதனும் கௌரவத்துடன் சம்பாதித்து, தன் பொருளாதாரத்தை உயர்த்

திக் கொண்டு, தன் வாழ்க்கைத் தரத்தையும் உயர்த்திக் கொள்ள வேண்டும் என்பதுதான்'' என்கிறார் தத்தா. "நானும் ஒரு காலத்தில் வேலை இல்லாமல் இருந்தவன் தான். எனவே, இப்போது நல்ல வேலையிலிருந்து ஓய்வு பெற்ற பிறகு, ஒரு பிரச்னையை எப்படி வாய்ப்பாகப் பயன் படுத்திக் கொண்டு சமுதாயத்துக்கு உதவ முடியும் என்று பார்த்தேன்!" என்கிறார்.

உங்கள் ஒரு முனைப்பட்ட நோக்கம், ஓர் இளைஞரையோ பெண்ணையோ உருப்படியாக, வேலைக்குத் தகுதியானவராக உருவாக்குவது என்று இருந்தால், நீங்கள் 'சன்' நடத்தும் இயக்கத்தில் இணைந்து கொள்ளலாம். யாருக்கு உதவி தேவை என்று கண்டறிவது முதல், அவர்கள் குடும்பத்துக்குப் போய், பார்த்து, பேசி, அந்த இளைஞன் அல்லது யுவதியின் கல்வி அல்லது பயிற்சித் தேவையை உணர்ந்து, செயலாற்ற முடியும் என்றால் போதும். "மீனைக் கையில் கொடுப்பதைவிட, எப்படி மீன் பிடிப்பது என்று சொல்லிக் கொடுக்கத் தெரிய வேண்டும்!"

இப்படி ஓர் அமைப்பு உருவாக வித்திட்டவர் ஒரு தமிழர்: எஸ்.வி. பிள்ளை. பன்னாட்டு நிறுவனத்தின் மானேஜிங் டைரக்டராக இருந்தவர். எம்.எஸ். தத்தா, ஒருநாள் தம்மிடம் வந்து, "சமுதாயத்துக்காக உழைக்கும்போதுதான் தலைமையின் தகுதி ஏற்றம் பெறுகிறது" என்றபோது, பிள்ளை அதை வரவேற்றார். தொண்ணூறுகளில் தமது நிறுவனத்தில் பணி புரிந்து கொண்டிருந்த இரண்டு திறமையான இஞ்சினீயர்களை அழைத்து, 'நீங்கள் அலுவலக வேலைகள் எதுவும் செய்ய வேண்டாம். மேற்கு வங்கத்தில் உள்ள கல்யாணி கிராமத்தில் இளைஞர்களுக்கு, வேலை வாய்ப்புப் பயிற்சி அளிக்க வேண்டும். அதற்கு ஆகிற செலவை கம்பெனி ஏற்கும்!'' என்றார்.

இந்த இரண்டு இஞ்சினீயர்களும் பதினைந்து இளைஞர்களை மும்பைக்கு அழைத்து வந்தார்கள். மலபார் ஹில் என்ற மிகப் பணக்காரப் பகுதியில், வேறு நிறுவனத்தின் அதிகாரி ஒருவரும், கான்டீன் கான்ட்ராக்டர் ஒருவரும் தங்கியிருந்த பங்களாவில், பதினைந்து பேரும் இலவசமாகத் தங்கிக் கொள்ள அனுமதி பெறப்பட்டது. பயிற்சி பெற்றவர்கள் தங்கள் கிராமத்துக்குப் போனார்கள். டெய்லராகப் பயிற்சி பெற்ற ஒருவரிடம் இன்று நான்கு பேர் பணி புரிகிறார்கள். டிரைவராகப் பயிற்சி பெற்றவரது சொத்து, இன்றைக்குப் பதினைந்து லட்சம்!

# ஒளிவீசும் 'சன்'!

பெர்சனாலிடி டெவலப்மென்ட் என்ற பயிற்சி அளிக்க நிதியுதவி செய்திருக்கிறது இந்தப் பன்னாட்டு நிறுவனம். எஸ்.என்.டி.டி பல்கலைக் கழகத்தோடு இணைந்து தொடங்கிய இந்தத் திட்டத்தில், ஆங்கிலத்தில் நாற்பத்தைந்து மணி நேரப் பயிற்சி பெற, சில இளைஞர்கள் முன் வந்திருக்கின்றனர். தாய்மொழியில் கல்வி பயின்று விட்டு, ஆங்கிலத்தில் பேச நம்பிக்கையின்றித் தடுமாறுவோருக்கு நம்பிக்கையூட்டும் விதத்தில் இந்தப் பயிற்சி அமைந்திருக்கிறது.

வகுப்பு நேரம் முடிந்ததும், ஆங்கிலத்திலும், கணிதத்திலும் சிறுவர்கள் பயிற்சி பெற, குடிசைப் பகுதியிலுள்ள பள்ளிகளில் இந்த முயற்சி மேற்கொள்ளப்பட்டு வருகிறது.

- சித்தார்த்

* அக்கவுன்ட்ஸ் பயிற்சி பெறும் மாணவிகள்



# தீபாவளி ரேஸ்!

கமல், ரஜினி, விஜய்காந்த், சரத்குமார் போன்ற ஹீரோக்களின் படங்கள் இல்லாமலேயே தீபாவளி கலகலக்கும் என்ற காலம் வந்துவிட்டது. அஜீத், விஜய் படங்கள் கூட இரண்டாம் பட்சம் என்று ஆகிப்போச்சு! அதனால்தானோ என்னவோ இந்த முறை அஜீத்தும், விஜய்யும் ஆளுக்கொரு படத்தோடு அடித்துப் பிடித்துப் போட்டியில் குதிக்கிறார்கள். ஆக்ஷன் பிளாக்குகளில் பின்னி ஆரம்பித்திருக்கும் விக்ரம், சூர்யா இருவரும் இணைந்து ஒரு படம். தமிழ் ரசிகர்கள் கிட்டத்தட்ட மறந்து போய்விட்ட அர்ஜுன், 'ஒற்றனாக' ஊடுருவுகிறார். இந்த மசாலாக்களுக்கு மத்தியில் மாறுபட்ட படமாக போட்டியில் வீடு கட்டித் தாக்க வருகிறது இயற்கை. இனி படங்கள் பற்றிய ஹைக்கூ பார்வை.

### ஆஞ்சநேயா

வில்லன் படத்திற்குப் பிறகு அஜீத் நடிப்பில் வெளிவரும் படம். சாமி படத்தில் விக்ரம் செய்தது போலவே கொஞ்சம் 'ரௌடியிஸம்', கொஞ்சம் நேர்மையோடு போலீஸ்காரனாக வருகிறார் அஜீத். வல்லரசு மகராசன் இயக்கி இருக்கிறார். ஜனா படத்தில் அஜீத்தோடு நடிக்க மாட்டேன் என்று அடம் பிடித்த மீரா ஜாஸ்மின், எப்படியோ ஒப்புக் கொண்டு கதாநாயகியாக நடித்திருக்கிறார். வேகமாக சண்டை போட்டிருக்கிறாராம் அஜீத்!

### திருமலை

விஜய்க்கு வரிசையாகத் தோல்விகள். இந்த இடைவெளியில் தனுஷ் மாதிரி பொடிப் பையன்கள் வந்து, அவரது ரசிகர்களைக் கணிசமான அளவு தம் பக்கம் இழுத்துக் கொண்டிருக்க, திருமலையைத் தான் திரும்பவும் ரசிகர்களைத் தன் பக்கம் இழுக்கும் ஆயுதமாக நம்பியிருக்கிறாராம். சென்னை புதுப்பேட்டை பழைய சாமான்கள் மார்க்கெட்டில் திரியும் ஒரு சாதாரண மெக்கானிக் இளைஞரான விஜய், ஃபாஷன் டிசைன் படிக்கும் பணக்கார வீட்டுப் பெண் ஜோதிகாவைக் காதலிக்கிறார். எதிர்ப்பு, சமாளிப்பு, கைப்பிடிப்பு என்று கதை நகர்கிறது. படத்தில் மொத்தம் எண்பது காட்சிகள்; அதில் அறுபத்திரண்டு புதுசு என்கிறார் அறிமுக இயக்குனர் ரமணா.

### பிதா மகன்

விக்ரம், சூர்யா இருவருக்குமே பிரேக் கிடைத்தது பாலாவின் இயக்கத்தில்தான். அந்த நன்றிக் கடனுக்காக, இருவரும் இணைந்து நடித்துக் கொடுத்திருக்கும் (பணம் வாங்கிக் கொண்டுதான்) படம். இது இயக்குனரின் படம் என்கிறார்கள். சிறு வயது முதலே இணை பிரியாத



• ஒற்றன்



• இயற்கை

• பிதா மகன்

• ஆஞ்சநேயா

உயிர் நண்பர்கள் சூர்யாவும், விக்ரமும். சூர்யா, லைலாவைக் காதலிக்க, அது விக்ர முக்குப் பிடிக்கவில்லை, என்பதாக நட்பும், காதலும் பின்னிப் பிணைந்திருக்கும் கதை. இசை மூலம் கதை சொல்வதில் பாலா கெட் டிக்காரர் என்பதால், இளையராஜாவுடன் கைகோர்த்திருக்கிறார்.

## இயற்கை

பிரிஸம் பிலிம்ஸ் என்ற புதிய பட நிறுவனத்தைத் தொடங்கி 'இயற்கை' படத்தை தயாரித்திருக்கும் வி.ஆர்.குமார் ஓர் இலக்கிய ரசிகர். உலகத் திரைப்பட விழாக்களில் தவறாமல் தென்படுபவர். இத னால் தரமான கதை, பிரம்மாண்ட கலை இயக்கம், கலாபூர்வ ஒளிப்பதிவு, திறமையான இயக்குனர் என்று முதல் முயற்சியை வெற்றிகரமாக முடித்திருக்கிறார். ஓர் இயற் கைத் துறைமுகம் அங்கே வந்த சரக்குக் கப்பல் ஒன்றின் மாலுமியைச் சந்திக்கிறார் குட்டி ராதிகா. இவர் அங்குள்ள கடற்கரை கிராமத்தில் ஓர் எளிய பெண். இயற்கையாய் இவர்களுக்குத் தோன்றும் காதலுக்கு இயற் கைதான் வில்லன் என்பதாக திரைக்கதை. அந்தமானில் முழுப் படத்தையும் எடுத்துத் திரும்பியிருக்கிறார்கள். வித்யாசாகரின் இசையில் வைரமுத்து பாடல்களை எழுதி யிருக்கிறார்.

## ஒற்றன்

பொதுவாக அர்ஜுன் படமென்றால் தலைப்பிலேயே தேச பக்தி கொடி கட்டிப் பறக்கும். அந்த வாசனையே இல்லாமல்... அதென்ன ஒற்றன்? இதில் அர்ஜுன் 'ரா' பிரிவு உளவு அதிகாரி. பாகிஸ்தான் ஐ.எஸ். ஐ.க்காரர்கள் இந்தியாவில் ஊடுருவி குண்டு வைப்பதைக் கண்டு பிடித்து முளையிலேயே கிள்ளி எறிய, பிச்சைக்காரன், ஸ்வீப்பர், சமையல்காரன், மாதிரி ஏழு கெட்-அப்களில் வருகிறாராம். அர்ஜுனோடு டூயட் ஆடியிருப் பது சிம்ரன். ஷங்கரின் உதவியாளர் இளங் கண்ணன் படத்தை இயக்கி இருக்கிறார்.

**- ரவுண்ட்ஸ் பாய்**

• திருமலை





அர்னால்ட்

அப்துல் கலாமின் பிரார்த்தனையைப் படித்து விட்டு, என்னை அனேகம் பேர் நினைத்துக் கொண்டதால், அன்றைய தினம் ஒரேயடியாகப் 'புரையேறி'விட்டது. மியூசிக் அகாடமி பற்றி நான் சொன்னதும் (கல்கி 12.10.2003) தேசத்தைப் பற்றி அவர் சொன்னதும் ஒத்துப் போகிறது. 'தனி மனிதரைவிட தேசமே மிகவும் முக்கியம்' என்று அவர் பேசியதைச் சொல்கிறேன்...

கலாம் சென்னை வந்த சமயத்தில் பாலிவுட் நடிகர் விவேக் ஓபராயும் வந்திருந்தார்... கலாம் ஸ்ரீ பெரும்புதூர், சங்கர நேத்ராலயா போனார் என்றால், விவேக் திபானியன் அமைப்பிற்குப் போய், ஆதர



தர்மேந்திரா

# தனுஷ் தேனீர்க் கடை; தர்மேந்திரா கோயில்!



தனுஷ்

வற்ற பெண்களுடன் உரையாடி நேரம் செலவிட்டுச் செய்தியாகி, உதாரணம் காட்டப்படுகிறார்.

'மணிஜி'யின் விசிறியாம் விவேக். 'அலை பாயுதே' ரொம்பவும் பிடித்த படமாம். தமிழில் படம் பண்ண ஆசையாம். ஆனால் தாமே ஒலிப்பதிவு செய்யும் அளவுக்குத் தமிழ் பேசப் பயின்ற பிறகே தமிழுக்கு வருவாராம்! வாழ்க அவருடைய தமிழ் ஆர்வம்; வளர்க அவர் ரசிகர்கள்.

தனுஷ் ரசிகர்களுக்கு ஒரு சூடான செய்தி : திருச்சியில் கேப்பைக் கூழ், கம்மங் 'கூல்' உருளங்காடிகளிடையே இடம் பெயராது நிலைபெற்று நிற்கிறது 'தனுஷ் டீ பார்'. வழக்கமான செப்பு பாய்லர், அழுக்குத் துணி வடிகட்டி, கழுவியதாகப் பெயர் பண்ணிய கண்ணாடி லோட்டாக்கள் சகிதம் கௌரவிக்கப்பட்டுள்ளார் தனுஷ். தேனீரைச் சுவைத்துப் பார்க்க அவகாசமில்லை. உள்ளூர்க்காரர்கள் மகாத்மா காந்தி நூற்றாண்டு நினைவுப் பள்ளி வட்டாரத்தில் உள்ள இந்தத் தேனீர் அங்காடியில் சுவைத்துப் பார்த்துவிட்டு எழுதலாம்.

தீபாவளிக்கு 'தனுஷ்' ரக ஆடைகள் அறிமுகமாகியிருப்பதாகச் செய்தி இருப்பின், அதையும் படத்துடன் அங்காடிக்கு அனுப்பி வையுங்கள்!

குஷ்புவுக்குக் கோயில்

கட்டிய திருச்சியில், தனுஷுக்கு டீக்கடை எழுந்தது அதிசயமில்லை. ஹரியானா கர்ணால் மாவட்டத்தில் பழைய ஹிந்தி நட்சத்திரம் தர்மேந்திராவுக்குப் புதிதாக ஆலயம் எழவிருக்கிறது. தர்மேந்திராவின் படத்துடன் சிலைகளும் வழிபாட்டுக்கு வைக்கப்படுமாம். தருமமிகு கர்ணால்! கலிஃபோர்னியா கவர்னராக ஸ்வாட்ஸ்னேகர் வரும்போது, தர்மேந்திராவுக்குக் கோயில் கட்டுவது என்ன ஆச்சர்யம் என்று என்னைக் காய்ச்சாதீர்கள்! ஹரியானாவில் நடக்கும் கர சேவை ஆபத்தற்றது என்பதை ஒப்புக் கொள்கிறேன்.




* ஹிந்து விளம்பரம்

அரசாங்கம்கூட அழகாக ஒரு காரியம் செய்திருக்கிறது, பார்த்தீர்களா...?

அக்டோபர் 15 ஹிண்டுவில், பதினாறாம் பக்கத்திலும் இதர நாளிதழ்களிலும் வெளியான விளம்பரத்தைச் சொல்கிறேன்.

நாட்டில் அமைதி நிலவுகிறது. ஆகவே மக்கள் தயக்கமின்றி யாத்திரை போகலாம், முதலீடும் செய்யலாம் என்று கவித்துவத்தோடு உணர்த்தும் வாசகங்கள். அதைவிட, கவித்துவமான வண்ணப்படம். கைநிறைய தாமரை மொட்டுக்களை அள்ளி ஏந்திக் கொண்டு நிற்கும், காஷ்மீர் குல்லாய் அணிந்த ஒரு கிழவர். தாத்தாவின் முகத்துச் சுருக்கங்களும் மொட்டுக்களுக்குள் ததும்பிக் கொண்டிருக்கும் ரகசியங்களும், அமைதியை உணர்த்தி அழைப்பு விடுக்கின்றன. அரசியல் நோக்கம் இல்லை என்று சொல்லிவிட முடியாது; ஆனால் அழகியல் நோக்கில் உயர்வாய் இருக்கிறது.

கல்கி - புதுமைப்பித்தன் காலத்து யுத்தம் இன்னமும் தொடர்கிறது, சற்றே மாறிய வடிவில்... திராவிட எழுத்துகள் இலக்கியமாகாது என்று நவீன இலக்கியவாதிகள் தம்பட்டம் அடிக்க, தி.மு.க. தலைவர் அதற்குத் தமது பதிலை வசன கவிதையாக 'முரசொலிக்க..' அந்த வசன கவிதையிலும் மறக்காமல் ஒரு குட்டிக் கதை சொல்லி மாட்டிக் கொண்டிருக்கிறார். இப்படிப் புரியும்படி கதை சொன்னால், இலக்கியம் என்று எதிரணி ஒப்புக் கொள்ளாது என்பது ஏன் தி.மு.க. தலைவருக்குப் புரியவில்லை? கவிதையோடு சேர்த்து கதையையும் நிராகரித்து விடுவார்கள்!

இந்த நிகழ்வின் மூலம் நாம் அறியும் வாழ்க்கைச் செய்தி யாதெனில், பிரசாரத் தொனியின்றி அழகியல் நோக்கில் எழுதுவோரும் சரி, பிரசார தொனியைப் பகிரங்கப்படுத்தி எழுதுவோரும் சரி... தங்கள் வழியே உயர்ந்தது என்று அடிப்படை வாதம் செய்பவர்கள்.

ஞானபீட விருது பெற்றபோது வங்க எழுத்தாளர் மஹாஸ்வேதா தேவி பேசியது தான் நினைவுக்கு வருகிறது :

"இத்தனை மக்களின் அன்பும் பாசமும் பெறுகிற தகுதி எனக்கு இருக்கிறதா என அடிக்கடி சிந்திக்கிறேன். ஓர் எழுத்தாளராக நான் ஆற்ற வேண்டிய பணிகள் இன்னும் எத்தனையோ இருக்கின்றன... எனது சமுதாயத்தில் மாற்றப்பட வேண்டிய விஷயங்கள் எவ்வளவோ காத்துக் கிடக்கின்றன... இதற்கெல்லாம் இன்னும் எவ்வளவோ நான் செய்திருக்கவேண்டும் என்பதை உணர்கிறேன். இந்நிலையில், இத்தனை பாராட்டை நான் எவ்வாறு ஏற்பேன்...?"

பல்பொருள் அங்காடியின் பகவத் கீதையாக இந்த வார்த்தைகளை அறிவிக்கிறேன்.

- சுமி

# நாணமோ....?



**வே**ப்ப மரத்துத் தழைகள் பசேலென்று திரைபிடிக்க, இரண்டு காக்கைகள் அந்தக் குளிர் நிழலில் சல்லாபித்துக் கொண்டிருந்தன. கிளையின் வளைவு சௌகரியம் செய்து கொடுத்திருந்தது. சற்றே மேல் நிலையில் ஒரு காக்கை, வளைந்த கீழ்ப் பகுதியில் மற்றொன்று. அழுத்தமான அந்த அலகினால் குத்திக் கோதினால் வலிக்காதோ...? 'ம்ஹூம்... இல்லவே இல்லை' என்பது போல் தலையைச் சாய்த்துச் சாய்த்துக் காட்டிச் சுகித்துக் கொண்டிருந்த பறவை, பெட்டையாக இருக்க வேண்டும். உயரத்தில் இருந்தது ஆண் பறவை. கோதக் கோத, பெட்டை தலையைக் குனிந்து பின்கழுத்தைக் காட்டியது. மத்தியானத்தின் நிசப்தத்தில் இந்தச் சல்லாப நாடகம் அரங்கேறிக் கொண்டிருந்தது.

"அச்சோ! காதல் காக்கைகள் அக்கா..." என்று நிசப்தத்தைக் கலைத்தாள் சித்ரா. "அந்த பெண் காக்கா எப்படி வெட்கப் படறது பாரேன்." பால்கனிக்கு வந்து எட்டிப் பார்த்தாள் மாதுரி.

சிரித்துவிட்டு சித்ராவின் கன்னத்தைத் தட்டிச் சொன்னாள்,

"அசடு, காக்கா - குருவிக்கெல்லாம் மனுஷன் மாதிரி உணர்ச்சி கிடையாது. உந்துதல், உள்ளுணர்வு - இங்கிலீஷ்லே இன்ஸ்டிங்ட்ஸ்னு சொல்வோமே, அவ்வளவுதான் இருக்கும். வெட்கம், கோபம், தாபம் இதெல்லாம் மனுஷங்களுக்கு மட்டும்தான்..."

சித்ராவின் முகத்தில் படர்ந்த ஏமாற்றம் ஒரு கணம்தான் நிலைத்தது. "பரவால்லைக்கா... அந்தக் காக்கா வெட்கப்படறதா நான் கற்பனை பண்ணிக்கறேனே..." பதினேழு வயதின் பஞ்சுப் பொதி, உலகத்தில் அறிவியலின் இடையூறுகளற்ற களிப்பு. கண்களின் ஈரம் படர்ந்த பளபளப்பும் கன்னங்களின் செம்மைப் பூச்சும், மாதுரிக்குள் கனிவைச் சுரக்கச் செய்தன. இன்னும் மூன்று - நான்கு வருடங்களில் இந்தக் குழந்தைக்குக் கல்யாணம் பண்ணிவிட வேண்டும். அதற்கான சேமிப்புக் கணக்குகளைப் போடும் யதார்த்தத்தில், காகங்களும் தங்கையும் காட்சியிலிருந்தே நீங்கிப் போனார்கள்.

சமாளித்துவிட முடியும் என்கிற நம்பிக்கை பிறந்த கணத்தில் மீண்டும் சித்ராவின் முகத்தில் பார்வை குவிய... இரண்டு காகங்களுக்குக் கல்யாணம் முடிந்து முதலிரவு ஏற்பாடுகள் நடப்பதாகத் தோன்றியது.

**மா**துரி சிரித்துக் கொண்டாள். திரைப் படங்கள் நிர்ணயிக்கும் வகையில்தான் இன்று கற்பனைகள் விரிந்தாகவேண்டும். மலர் மஞ்சம், ஊதுபத்தி, பட்டு வேஷ்டி, புல்லுக்கட்டு அளவுக்குத் தலையில் பூச்சுமை... ஹிம்சையூட்டும் இசைக்கு நடுவே கதாநாயகிகள் நாணம் கொள்கிறார்கள். சற்று முன்தான் அதே ஜோடி ஆஸ்திரேலியாவோ ஆப்பிரிக்காவோ போய், ஆடாத ஆட்டம் ஆடித் திரும்பியிருக்கும்... பிறவி எடுத்ததே இப்படி ஆடுவதற்குத்தான், என்பது போன்ற பகிரங்க அங்க அசைவுகள்... அப்போது இந்த நாணமெல்லாம் எங்கே போயிற்றாம்?..

"போலி பிசாசுத்தனம்" என்று ஒரு முறை இவள் விமர்சித்தபோது, வந்தனாவோடு பெரிய வாக்குவாதம் எழுந்தது.

"எது போலித்தனம்ன்றே...?"

"இப்படி ஆட்டம் போட்டப்புறம் வெட்கப்படற நாடகத்தைத்தான் சொல்றேன்."

"அப்படின்னா, ஆட்டம் போடாட்டி வெட்கப்படலாம்ங்கறியா...?"

அதிர்ந்து போனாள் மாதுரி. நாணம் என்கிற உணர்வுக்கு நேரமோ இடமோ தராத வாழ்க்கை அலைகள், ஓர் இருண்டார்ந்த

தீவில் தன்னைக் கரைசேர்த்திருக்கின்றன. எந்த அளவுகோல்களைக் கொண்டு அவள் வந்தனாவுக்குப் பதில் சொல்ல முடியும்?

கடைசியாக நாணப்பட்டது எப்போது...? என்று உள்நோக்கிச் சென்றபோது, அதுவேறு யுகத்தின் நிகழ்வாக நிழலாடி மறைந்தது. "இனிமே நீ குழந்தை இல்லை... அம்மாவாகறதுக்குத் தயார்." வயதுக்கு வந்த தினத்தில் அம்மா சொன்னபோது, நிறைய பயமும் கொஞ்சமாக நாணமும் ஏற்பட்டது.

அவள் சொன்ன தினத்திலிருந்து கால் நூற்றாண்டு கடந்துவிட்டது. காதோரம் பூக்கும் வெள்ளிக் கம்பிகளை மறைக்கத் தோன்றவில்லை. கண்களின் ஓரத்துச் சுருக்கங்கள், இசகு பிசகாகக் கூடும் எடை, குதிகால் வலி காரணமாக மாட்டிக் கொள்ளும் சேலைக்குப் பொருந்தாத ஷூ ... எதற்காகத்தான் நாணம் கொண்டிருக்கிறாள்? யாவுமே வாழ்வின் யதார்த்தங்கள். இதோ, இப்போது முகம் பார்க்க நிற்கும் மிகப் பெரிய யதார்த்தம் சித்ரா. அவளது பதினேழு வயது; இன்னும் மூன்று நான்கு ஆண்டுகளில் அவளுக்கு ஆக வேண்டிய திருமணம்.

இயல்பிலேயே மாதுரி வெட்கப்படுபவள் அல்ல. ஒரு முறை குடும்பமாக க்ஷேத்திராடனம் போனபோது, ரயிலடியில் நீண்ட நேரம் காத்திருக்க நேர்ந்தது.

''மாதுரி! ஒரு பாட்டுப் பாடேன்...'' - அப்பாதான் கேட்டார். சுற்றிலும் யார் இருக்கிறார்கள் என்கிற கேள்விகள் எழவில்லை. தன் பாட்டை எடை போட்டுத் தயக்கம் கொள்ளாமல் தொண்டையைவிட்டுக் கத்தி, பாடினாள்.

*"ஏலேலோ... ராமையா!...*
*ஏலேலோ... ஏலிலேலோ...*
*பூலோக... வைகுண்டமாம்...!*
*அயோத்திதனில் அரசு செய்யும்...*
*சாலோக... சக்ரவர்த்தி...*
*தயரதனார்... திருமகனாம்..."*

அவள் குழந்தையாக இருந்தபோது பாட்டி கற்றுத்தந்த ஓடப் பாட்டு...

ஒரு பெரிய கூட்டம் அவள் அமர்ந்திருந்த சிமெண்டு பெஞ்சை சூழ்ந்து கொண்டுவிட்டது... பயணிகள், வியாபாரிகள், சுமை தூக்கும் கூலி ஆட்கள், ரயில்வே ஊழியர்கள்...

''தட்டாமலே வந்த பட்டாபிஷேகம்...'' என்று அவள் ஆரம்பிக்க, 'தத்தகிட தத்தகிட தத்தகிட தாதா' என்று தத்தகாரத்துக்கு ஏற்ப

# சீதா ரவி

கைக் கொட்டு எழுந்தது.

பாடி முடித்த கணத்தில் அந்த கைக் கொட்டு அப்படியே கைத் தட்டலாக உரு மாறியது. வேறொரு பெண்ணாயிருந்தால் கொஞ்சமாவது வெட்கப்பட்டிருப்பாள்...

ம்ஹூம், எதுவும் நடவாததுபோல் எழுந்துபோய், பிளாட்ஃபார விளிம்பில் ரயில் வருகிறதா என்று பார்த்தாள் மாதுரி.

சட்டென்று இளகிவிடாத இந்த வலிமைதான் அப்பா புறப்பட்டுப் போன பிறகு கை கொடுத்திருக்கிறது. முந்தி நிற்க வேண்டிய இடங்களில் முந்தவும், போட்டிகளை அஞ்சாமல் சமாளிக்கவும், படிப்பிலும் பணியிலும் ஆணுக்குப் பெண் இளைப்பில்லை என்று நிரூபிக்கவும் உதவியிருக்கிறது. கை நிறையச் சம்பாத்தியம் தந்து, உடன் பிறந்த நால்வரைக் கரையேற்றும் பொறுப்பைச் சீராக நிறை



வேற்றவும் உறுதி தந்திருக்கிறது.

அம்மா துணை நின்றிருக்கிறாள். வீட்டை நிர்வகிக்கும் நேர்த்தியில் மட்டுமல்ல... 'தானொரு கல்யாணம் பண்ணிக் கொள்ளாமல் இந்தப் பெண் ஓடாய்த் தேய்கிறதே' என்று மூக்கைச் சிந்தி சராசரி அனுதாபத்தில் இவளை முழுக்காட்டிவிடாமல் கௌரவம் காத்திருக்கிறாள். அதற்காகவே அவளுக்குத் தினமும் நமஸ்காரம் செய்யலாம்...

ஆனால் வந்தனா அதற்கும் வாதாட

வந்துவிடுவாள். சுயமரியாதைக்காரி அல்லவா? "என்ன ஆகிப் போச்சுன்னு இப்போ நித்தியம் காலைத் தொட்டுக் கும்பிடணுமாம்? உன் முயற்சி, உன் உழைப்பு... கால்ல விழறதும் கட்டிப் பிடிச்சுக்கறதும்கூட போலித்தனம்தான், முதலிரவுல வெட்கப் படற மாதிரி..!"

"ஏண்டீ வந்தனா, இப்படி எதெதுக்கோ முடிச்சுப் போடறே...? உலகத்துல நாலு பேருக்கு வெட்கமாயிருந்தா பட்டுட்டுப் போறாங்க.. நான் எங்கம்மா காலைத் தொட்டுக் கும்பிட்டுட்டுப் போறேன்..!"

"அம்மா - பொண்ணுக்கு நடுவுல நான் வரலை. ஆனா நிச்சயமா வெட்கம் போலித்தனம்தான். உள்ளுக்குள்ள ஆசையை வைச்சுக்கிட்டு, அதை மறைக்க முயற்சி பண்ணுற நாணயமின்மை... அதுலேயும் பெண்களுக்குத் தான் உரியதுன்ற மாதிரி அதையே நகையா செஞ்சு மாட்டிடறாங்க. பாரு, அது சுமை...! ஏற்கெனவே பல சுமைகளைத் தாங்கிட்டிருக்கிற பெண்கள் மேல ஏத்தற இன்னொரு பளுதானே இது?"

வந்தனா பெண்ணியம் பேச ஆரம்பித்தால் குரலில் தனித் தோரணையும் தொனியும் வந்துவிடும். மாதுரிக்கு அதை வேடிக்கை பார்க்கப் பிடித்திருந்தது.

உக்கிரம், தீவிரம், கொண்ட கொள்கைக்காக மல்லுக்கு நிற்கும் போர்க்குணம்... வாதங்களோடு ஒத்துப் போகாவிட்டாலும், போர்க்குணத்தை வியக்கத்தான் வேண்டும். இருவருக்கும் பொதுவான இந்த உறுதிதான் நட்பின் அஸ்திவாரம். மற்றபடி மாதுரிக்குப் பெண்ணியப் பிரகடனங்களில் நம்பிக்கை இல்லை. ஒவ்வொரு பெண்ணின் வாழ்வும் அவளுடைய வலிமையின் நிரூபணம்தான். தொண்டை வறளக்கத்தி எதைக் கேட்டுப் பெற வேண்டும்...? வாழ்க்கை 'என்னை அள்ளி எடுத்துக் கொள்' என்று கடைவிரித்துக் காத்திருக்கிறது. அவரவர் ஆற்றலின் எல்லைக்குள் இயங்கியபடி மெள்ள அந்த எல்லையை விரிவுபடுத்திக் கொண்டே போனால், போராட்டமோ பிரகடனமோ இல்லை. வலிகள் இல்லை. விரித்த கடையின் அத்தனை வண்ணங்களையும் நுகர்ந்துவிட முடியும்.

மாதுரிக்குத் திருப்தியாக இருந்தது. உள்ளேயிருந்த இந்த அமைதி, செயல்பாடுகளில் விகசித்ததால், முப்பத்தாறு வயதுவரை எந்தவொரு மலிவான நிகழ்வையும் அவள் சந்திக்கவில்லை. ஆண்களின் அனாவசிய கவனிப்புக்கும் தொந்தரவுக்கும் ஆளாவதாகப் புலம்பிப் புகார் செய்த பெண்களைப் போல், அவள் யாதொரு பிடுங்கலையும் சந்திக்கவில்லை. ஆண்களைக் கண்டு எந்த சந்தர்ப்பத்திலும் அஞ்சவில்லை; நாணமும் கொள்ளவில்லை.



பாகிஸ்தான் கிரிக்கெட் அணியின் கேப்டன்கள் கடந்த பத்து வருடங்களில் 45 முறை மாறியிருக்கிறார்கள். வக்கார் யூனிஸ் சமீபத்தில் ஒரு பேட்டியில் தம் வருத்தத்தை வெளியிட்டிருக்கிறார். "நான் இனிமேல் கேப்டன் இல்லை என்பதை யாருமே எனக்குக் கூறவில்லை. திடீரென்று ஒரு நாள் வசீம் புதிய கேப்டனாகத் தேர்ந்தெடுக்கப்பட்டதாகக் காற்றுவாக்கில் ஒரு செய்தி என் காதில் விழுந்தது!"

திட்டமிட்டபடி சித்ராவின் திருமணத்தை நடத்தி முடித்த பிறகு, அம்மா தான் பேச்சை ஆரம்பித்தாள். வீடு காலியாயிருந்தது - வெறிச்சோடி.

"எத்தனை நாளைக்கு நீ தனியா இருப்பே..?"

"ஏன்? நீதான் இருக்கியே..!"

"எனக்கு வயசாச்சு மாதுரி..!"

"எனக்கும்தான்..!" மாதுரி காதோர நரை முடியைத் தொட்டுக் காட்டினாள்... அக்டோபர் வந்தா நாற்பது..!"

"ப்ச்ஸ"... யாரும் சொல்லமாட்டா.... நாலைஞ்சு வயசு குறைச்சு சொன்னாக்கூட நம்பிடுவா..!"

அம்மா சொல்வது நிஜம் என்பது கண்ணாடியில் பார்க்காமலே தெரிந்தது. ஆனால் அவள் எடுக்க வேண்டிய முடிவுக்கு அது ஒரு காரணமாகிவிட முடியாது; கூடாது...

"கல்யாணம் பண்ணிக்கோன்னு சொல்றியா...? யோசிக்கறேன்..!"

இரண்டு மாதம் அவகாசம் வாங்கிக் கொண்டாள். அலுவலகத்திலிருந்து விடுப்பும் எடுத்துக் கொண்டாள்.

முதல் மாதம் முடிவதற்குள் தெளிவு

பிறந்துவிட்டது. கல்யாணம் எல்லா நோக்கு களிலும் நல்லது. சினேகிதத்தைப் பகிர்ந்து கொள்ள ஒரு துணை; அந்தராத்மாவில் உட்கார்ந்து கொண்டு அகலமாட்டேன் என்று அழிச்சாட்டியம் செய்யும் தாய்மை உணர்வுக்கு ஒரு வடிகால் கிடைக்கக் கூடும். திரவியம் தேடி ஓடிக் களைத்த தோள்கள், இளைப்பாறக்கூட வாய்ப்பு இருக்கிறது. நம்மை யாராவது அன்பாகப் பார்த்துக் கொண்டால் சுகமாகத்தானே இருக்கும்...?

நாளிதழில் விளம்பரம் கொடுக்கவும் அவளேதான் போக வேண்டியிருந்தது. 'மணமகன் தேவை' குறிப்புக்கான படிவத்தைப் பூர்த்தி செய்யச் சில நிமிடங்கள் ஆயிற்று.

'உழைத்துக் களைத்த நாற்பது வயதுப் பெண்ணுக்கு..' என்று எழுதுவதற்குக் கை துடித்தது. 'சே!' என்று மனதுக்குள் வைது கொண்டு எழுதினாள். படித்துப் பார்த்து, விலாசம் சரிபார்த்த அலுவலர், "உங்களுக் குத்தானா?" என்று இங்கிதமின்றிக் கேட்ட போதுகூட நாணம் கொள்ளவில்லை மாதுரி.

இத்தனை விரைவில் எல்லாம் நடந்து போகும் என்று எதிர்பார்க்கவில்லை. வரதராஜன் ஒருவன்தான் இவள் விளம்பரத்துக்குப் பதில் அனுப்பியவன். வீட்டிலேயே வந்து சந்தித்தான். பேசிக் கொள்ளும்போது அம்மாவும் கூடவே இருந்தாள்.

மாதுரியை நேருக்கு நேர் பார்த்துப் பேசினான்.

"இத்தனை நாளா நான் ஏன் கல்யாணம் பண்ணிக்கலைன்னு உங்களுக்கு நியாயமான சந்தேகம் வரும். பண்ணிக்கணும்னு தோணலை... காரணம் தெரியலை. இப்போ பண்ணிக்கணும்னு தோணுது - அதுக்கும் காரணம் தெரியலை.."

"காரணம் எங்களுக்கு அவசியமில்லை..."

"அவசியமா என்ன தெரியணுமோ, நீங்க கேட்கலாம்.."

எதுவும் கேட்கத் தோன்றவில்லை மாதுரிக்கு...

அம்மாதான் கேட்டாள்...

வரதராஜனின் பெற்றோர் காலமாகி விட்டனர். அக்கா மும்பையில் இருக்கிறார். தினமும் இரவு எஸ்.டி.டி.யில் பேசி, கல்யாணம் பண்ணிக் கொள்ள வற்புறுத்துகிறாள். ஆனால் வந்திருப்பது அந்த வற்புறுத்தலினால் அல்ல... நல்லதொரு சினேகம் வேண்டும் முதலில். முதலும் முடிவுமாக அதுவே அமைந்தால்கூட திருமணம் வெற்றிதான்.

"நீங்க கம்யூனிஸ்டா?..." அம்மாவுக்குத் திடீரென்று சந்தேகம் வந்துவிட்டது.

வரதராஜன் சிரிக்காமல் பாக்கெட்டிலிருந்த பர்ஸைத் திறந்து காட்டினான். லக்ஷ்மி நரசிம்மர் படம்; சின்ன காகிதப் பொட்டலத்தில் திருநீறு; கம்பெனி விஸிட்டிங் கார்ட்.

"கம்யூனிஸ்ட் இல்லைம்மா... கடவுள் நம்பிக்கை உண்டு; மனிதர்கள்கிட்டேயும் அதே அளவு நம்பிக்கை உண்டு.."

"காப்பி, டிபன் எடுத்துட்டு வரேன்.." அம்மா எழுந்திருக்கும்போது கொஞ்சம் தடுமாறினாள்.

அவள் உள்ளே போனதும் மாதுரியைப் பார்த்துச் சொன்னான். "நீங்களும் உள்ளே போய் உதவி பண்ணலாமே.."

மாதுரிக்கு அவனைப் பிடித்திருந்தது.

இருவரும் விரும்பியபடி எளிமையாகவே கல்யாணம் நடந்தது. தங்கைகள் நாலு பேரும் வரதராஜனின் அக்காவும், வலிய வலியப் பேசிய சம்பிரதாயக் கிண்டல்களால் சலனமுற்று நாணம் கொள்ளவில்லை மாதுரி. வரதராஜனும் அதையெல்லாம் காதில் போட்டுக் கொள்ளவில்லை. சிரத்தையாகச் சடங்குகளை நிறைவேற்றுவதில் முனைப்புக் காட்டினான்.

களேபரங்கள் முடிந்து அவரவர் புறப்பட்டுப் போனதும் வரதராஜன் அவளையும் அம்மாவையும் தன் வீட்டுக்கு அழைத்துப்

**நீங்கள் கண்கலங்கிய சம்பவம் எது? இப்படி ஒரு கேள்விக்கு சச்சின் அளித்திருக்கும் பதில் இது : "சென்னைக்குச் சென்றிருந்தபோது ஒரு ஸ்பாஸ்டிக் குழந்தை மேடையில் ஏறி என்னைப் போன்ற வேடத்தில் என்னை மிமிக் செய்தது. அந்தக் காட்சி என்னை உலுக்கிப்போட என் கண்களிலிருந்து வழிந்த கண்ணீரை என்னால் அடக்கமுடியவில்லை."**





# எபாடிக்கு கிடைத்த நோபல்!

"ஓர் இஸ்லாமியப் பெண்மணிக்கு, அதிலும் அமைதி வேண்டி சதா போராடிக் கொண்டிருக்கும் ஈரானைச் சேர்ந்தவருக்கு இந்த நோபல் பரிசை வழங்குவதில் பெருமைப்படுகிறேன்" என்று கூறியிருக்கிறார் நோபல் கமிட்டியின் தலைவர் ஓல் டான்போல்ட் ஜோஸ்.

இஸ்லாம் சமூகத்திலிருந்து படித்து முன்னேறி, ஒரு நீதிபதி ஸ்தானத்தை அடைந்தாலும், தனி மனித உரிமைக்கும், சிறுவர் சிறுமியர் உரிமைக்கும் குரல் கொடுத்ததால் பதவி இறக்கப்பட்டவர் ஷிரின் எபாடி, ஈரானின் பெண் வழக்குரைஞர்.

சிறுவர் சிறுமியர் படும் கொடுமைகளை எதிர்த்து, அதற்காக ஓர் அமைப்பும் தொடங்கி, பலமாகக் குரல் கொடுத்தவர் இவர். வந்த எதிர்ப்புகள் பல. ஆளையே தீர்த்துவிட, கொடுக்கப்பட்ட எச்சரிக்கைகளும் பலப்பல. அவரது உறுதி, தீர்மானமான எதிர்ப்பு, ஓயாத மனிதாபிமானச் செயல்கள், மனித உரிமைக்கான போராட்டம் - எல்லாம் சேர்ந்து நார்வேயின் ராஃப்டோ விருதை 2001ல் பெற்றுத் தந்தன. இப்போது உலக அமைதிக்காக உழைத்தவர் என்று நோபல் பரிசையும் பெற்றிருக்கிறார் இந்தப் பெண்மணி.

- விஷ்வக்

போனான். அவனே காரை ஓட்டி வந்தான், அமைதியாக.

வாசலில் நிற்க வைத்து அக்கா ஆரத்தி எடுத்தாள். பூஜையறையில் நமஸ்கரிக்கச் சொன்னாள்.

வரவேற்பறையில் அவர்களை உட்காரச் சொல்லிவிட்டு, அவன் பெட்டிகளை மாடி அறைக்குக் கொண்டு போனான் வரதராஜன்.

மாதுரி களைப்புற்றிருந்தாள். அம்மாவின் முகத்தில் களைப்பை மீறிய அதீத நிம்மதி.

"மாதுரி!" - மாடியிலிருந்து அழைத்தான் வரதராஜன்.

"வரேன்!" - படியேறிச் செல்கையில் நிமிர்ந்து பார்த்தாள். அவன் கண்களின் புன்னகை இதமாக அழைத்தது.

"இதுதான் நம்ம ரூம்... உன் வசதிக்கு ஏதாவது மாத்தணும், செய்யணும்னா சொல்லு... பண்ணிடலாம்."

இரட்டைக் கட்டிலைத் தவிர்த்துவிட்டு சோஃபாவில் உட்கார்ந்தான்.

"வா, உட்காரு.."

அவன் காட்டிய இடத்தில் அவன் பக்கத்தில் அமராமல், சட்டென்று தரையில் உட்கார்ந்தாள்.

"ஏன் தரையில உட்கார்ற...?" அன்பில் தோய்ந்து கரகரத்து வெளிப்பட்டது கேள்வி.

அவள் முகம் கவிழ்ந்திருந்தது. முகவாயைத் தொட்டு அவன் நிமிர்த்த, நாணத்தில் பூரித்துச் சிவந்தன அவள் கன்னங்கள்.

பெருமுயற்சியுடன் அவன் கண்களைப் பார்த்தபொழுது, அவற்றிலும் நாணம் கசிந்து பிரகாசித்தது.

மெள்ள அவன் கையைப் பற்றி முத்தமிட்ட பிறகு தன்னிடம் கொடுப்பதற்கு எதுவும் மிச்சமில்லை என்பது புரிந்தது.

இந்த நாணம் போலித்தனமல்ல; இது சத்தியம்.. உயரிய பரஸ்பர ஒப்படைப்பின் உதயம்.

மாதுரி மனத்துக்குள் அந்த உதயத்தை வணங்கினாள்.

வரதராஜன் அவள் கரம் பற்றி உதட்டருகே எடுத்துச் சென்றான்...

வந்தனாவிடம் இதை விளக்க முடியாது... அவள் வாழ்விலும் ஒரு வரதராஜன் வந்து சேரட்டும் என்று பிரார்த்தித்தாள் மாதுரி.●

எப்பொழுதும்
போதாமைகளில்
அயற்சியடைகின்றது
அன்பு.
கழுத்தை நெறிக்கும்
நியதிகளில்
திணறித் திகைக்கின்றது
வேண்டும் வேண்டாமைகளில்
வீழ்வதும், மீள்வதுமாய்
சுழன்றலைகிறது
பிண்டம் போல்
திரளும்
வாழ்க்கையில்
வலிக்க வலிக்க
உயிரை யாசித்து
நிற்கின்றது.



# அன்பு

லீனா மணிமேகலை







**வெல்லும் உறவுகள் - மரிய சார்லஸ்**

பகிர்ந்து கொள்ளாத அன்பு, பேசித் தீர்க்காத பிரச்னை, வெளிப்படுத்தாத மன இறுக்கம், என மன வலிக்குக் காரணமானவை பல. இவை போல மனக் குறைகளே, இருக்கும் திருப்தியையும் முழுமையாகப் பெற முடியாமல் வாழ்வைக் குறைவு படுத்தி விடுகின்றன. அதை மாற்றவும் மனத்தைத் தேற்றவும், நடைமுறை வழிகளைக் கூறும் உளவியல் நூல்.

*அரும்பு பதிப்பகம், 49, டெய்லர்ஸ் சாலை, கீழ்ப்பாக்கம், சென்னை - 40. விலை ரூ. 50/-*

**ஆஸ்கர் - 'அ' முதல் - சந்திரன்**

அடுத்த நாட்டுக்காரன் சொன்ன பிறகே நம் அருமைகளைத் தெரிந்து ஒப்புக் கொள்கிற இந்தியச் சாபம் இந்த ஆஸ்கரிலும் இருக்கிறது, 'காந்தி' போல. பாலிவுட், கோலிவுட் என்ற பெயர் சூட்டலும்கூட ஒரு சாயலுக்குத்தான். 'என் இனிய தமிழ் மக்கள்' இதைத்தான் கேட்கிறார்கள் என்று, ஜாதி மத, அரிவாள், விடலைத்தனம் என்று சினிமா பண்ணிக் கொண்டிருக்கும் நம் ஆட்களுக்கு, ஆஸ்கர் எல்லாம் அறியப்படாத கிரகங்களில் ஒன்று. கூடச் சேர்ந்து பிழைப்புக்காக ஓடினாலும் ஆங்காங்கே சிதறி விலகிக் கிடக்கிற அறிவு ஜீவிகளுக்கு, கலைத் தீவிரவாதிகளுக்கு, என்றைக்கேனும் தேறி விடலாம் என்கிற நம்பிக்கையாளர்களுக்கு, இந்த நூல் அரிச்சுவடி, அகராதி, நிகண்டு, நவீனம், காவியம்.

*புது தமிழ்ப் பதிப்புகள், 2/15, நேதாஜி நகர் முதல் தெரு, திருவொற்றியூர், சென்னை - 19, விலை. 150/-*

**கூவாத குயில்கள் - மீனா சங்கர நாராயணன்**

வழக்கமாக வாழ்க்கையில் நடைபெறும் யதார்த்தங்கள்தாம். பூக்காரியின் தோள் மீது எட்டிப் பார்க்கும் குழந்தையையும், கண்ணற்றவரைக் கைப்பிடித்து சாலையைக் கடந்ததும், பையுடன் பள்ளிக்கு ஓடுகிற சிறுவனையும், அவசரத்தில் பார்த்துவிட்டு, அரைக்கணமே ரசித்துவிட்டு, அப்படியே மறந்து போய் விடுகிறோம். அப்படி யதார்த்தமாய் நடப்பவற்றைக் கோத்து நெஞ்சில் தங்கிவிடுகிற விதமாய்ப் புனைந்த சிறுகதைகள். மானுட நேயங்களைச் சேர்த்த ஆத்மார்த்தமான தொகுப்பு.

*ஸ்ரீ செண்பகா பதிப்பகம், 24. கிருஷ்ணா தெரு, தி. நகர், சென்னை - 17, விலை. ரூ. 45/-*

**நாற்றங்கால் காற்று - கவிதாசன்**

பாரதியும், ஜனநாயகமும், அரசியல் நேர்மையும், தொழில் பக்தியும் - என சொல்ல வரும் கருத்துகள் உயர்ந்தவைதான்; முன்னைத் தமிழ்க்கவிகளைச் சற்று முனைந்து பயின்றிருந்தால் இன்னும் ஏற்றம் பெற்றிருக்கும். தாகம் இருக்குமளவிற்கு வேகம் தெரிகிறது. இருந்தும் கவிதையின் ராகமும் கூடி இன்னும் பாகமும் பட்டால் வாசிக்கவும் யோசிக்கவும் வைக்கும்.

*குமரன் பதிப்பகம், 3, முத்து கிருஷ்ணன் தெரு, தி.நகர், சென்னை - 17, விலை. ரூ.30/-*

**முருகப் பெருமான் அவதாரமும் திருத்தலப் பெருமையும் - கெம்பு ஆறுமுகம்**

தமிழோடு பிறந்தவன், அமுதோடு வளர்ந்தவன், மலை மீது நிற்பவன், படைவீடு கொண்டவன், இரு மாதர் இணை சேரும் இளமாறன், விடை வாகன் தொழு தேத்தும் குருநாதன், தமிழன், அழகன், அமரன், குமரன், முருகன். தமிழ் இதயங்கள் நீங்கலாக, தமிழகத்தில் அவன் கோயில் கொண்டுள்ள தலங்களின் தொகுப்பு.

*அநுராகம், 19. கண்ணதாசன் சாலை, தி.நகர், சென்னை - 17,. விலை ரூ. 45/-*

**- விஷ்வக்**

குகனை வணங்குவோம்! கோடி சுகம் பெறுவோம்!!

செந்தமிழ் முருகன் கோயில் கொண்டுள்ள

# திருச்செந்தூரில் கந்த சஷ்டி பெருவிழாவில்

## முருகனடியார்களுக்கு, சஷ்டிக்கு மறுநாள் (31.10. 2003) அன்னதானம் செய்து செழிப்புடன் வாழ வாருங்கள் !

**பேரன்புடையீர் ! வணக்கம். அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி தங்களுக்கு அனைத்து நலன்களையும் தந்தருளப் பிரார்த்திக்கிறோம்.**

வேண்டுவோர்க்கு வேண்டியபடி அருளும் முருகப்பெருமான் அமர்ந்து ஆட்சி செய்யும் ஆறுபடை வீடுகளில் **இரண்டாவது படை வீடு** திருச்செந்தூராகும். சூரனை வதம் செய்த முருகன் சிவனை வழிபட்ட கடற்கரை ஸ்தலமான திருச்செந்தூரில் **கந்த சஷ்டி பெருவிழா 25.10.2003. முதல் 30. 10. 2003. வரை** சிறப்பாக நடைபெற உள்ளது. பேரின்பத்தை அள்ளித்தரும் **கந்த சஷ்டி திருநாள்** விரதங்களிலே உயர்வானதாக கருதப்படுகிறது. மரமாக மறைந்திருந்த சூரபத்மனை இரண்டாகப் பிளந்து ஒரு பகுதி சேவலாகவும், மறு பகுதி மயிலாகவும் ஆட்கொண்டு முறையே கொடியாகவும் , வாகனமாகவும் ஏற்றுக்கொண்ட பேரருள் நாள் **கந்த சஷ்டி திருநாள்** ஆகும்.

துஷ்ட சக்திகளை அழிக்கக்கூடிய நன்னாள் **கந்தசஷ்டி திருநாள்**. சஷ்டி என்றாலே பேரின்பம். துலாம் மாதமான ஐப்பசி மாத அமாவாசை திதியை அடுத்து வரும் பிரதமை திதியில் தொடங்கி ஆறு நாட்கள் உண்ணாவிரதமிருந்து சஷ்டி திதியில் கடல் நீரில் சட்கோணம் வரைந்து முருகப்பெருமானின் மூலமந்திரத்தை ஜபித்து திருமுருகனின் திருக்கல்யாணத் திருக்காட்சியைக் கண்டு விரதம் நிறைவடைந்ததும், மறுநாள் 31.10.2003 **ஏழாம் திருநாளன்று "ஸ்ரீ அன்னபூரணி அன்னதான சேவா டிரஸ்ட்"** என்ற தனி அமைப்பின் மூலம் திருச்செந்தூர் ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில்அருகில், சன்னதித் தெருவில் அமைந்துள்ள **ஸ்ரீ பாலாஜி திருமண மண்டபத்தில்** அன்னதானம் நடைபெற உள்ளது.

கடல் அலை தாலாட்டும் **திருச்செந்தூரில்** கந்த சஷ்டி விழாவின் போது சஷ்டி விரதமிருந்து எண்ணிய நலன் பெற்று புண்ணிய பலம் பெறும் முருகனடியார்களுக்கு அன்னதானம் செய்து அனைத்து வெற்றியும், வளமும் கிடைத்து கலியுகத்தில் கண்கண்ட தெய்வமாக இருக்கும் அருள்மிகு சுப்பிரமணிய சுவாமியின் திருவருள் பெற்று பெருவாழ்வு வாழ வேண்டி அன்போடு அழைக்கிறோம். இந்த அன்னதானத் திருப்பணியில் முருக பக்தர்கள் பங்கேற்று தங்களால் இயன்ற நன்கொடையை அனுப்பி உதவுமாறு வேண்டுகிறோம்.

**தாங்கள் அளிக்கும் நன்கொடை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்ளப்படும்.**

- **ரூ.500- அனுப்பும் அன்பர்களுக்கு, ஆன்மீகம் மாத இதழ் ஆறு மாதத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.**
- **ரூ.1000- அனுப்பும் அன்பர்களுக்கு, ஆன்மீகம் மாத இதழ் ஒரு வருடத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.**
- **ரூ.5000- அனுப்பும் அன்பர்களுக்கு, ஆன்மீகம் மாத இதழ் ஆறு வருடத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.**

ரூ. 500, ரூ.1000, ரூ. 5000 அனுப்பும் முருகபக்தர்களுக்கு திருச்செந்தூரில் பூஜிக்கப்பட்ட அருள்மிகு சுப்பிரமணிய சுவாமியின் வெள்ளி டாலரும், பிரசாதமும், வண்ணபடமும், சிறிய அளவில் கந்தர் சஷ்டி கவசம் புத்தகமும் அனுப்பிவைக்கப்படும்.

ரூ.5000 - அனுப்பும் அன்பர்களுக்கு, ஒவ்வொரு வருடமும் **திருச்செந்தூரில் கந்த சஷ்டி பெருவிழாவில் ஏழாம் திருநாளன்று அன்னதானம்** செய்து ஆறு வருடங்கள் **ஆன்மீகம் மாத இதழ்** தங்களுக்கு அனுப்பி வைக்கப்படும். அன்பர்கள் ஒவ்வொருவரின் பூஜை அறையும் புனிதம் பெற வேண்டும் என்ற இறை சிந்தனையோடு ரூ. 5000 செலுத்துபவர்களுக்கு 1024 பக்கங்களுடன் கூடிய பெரிய அளவில் உள்ள **அருணகிரிநாதர்** அருளிச் செய்த **"திருப்புகழ்"** நூலை அனுப்பி வைக்கிறோம். அன்னதானத்திற்கு நன்கொடையை அனுப்புவோர் தங்களுடைய வேண்டுதலையும், பிரார்த்தனையையும் தெரிவித்தால் அதற்கேற்ப நாங்கள் **திருச்செந்தூரில் அன்னதானம்** செய்கிறோம்.

எல்லோரும் எல்லாவளமும் பெறவேண்டும் என்ற இறை சிந்தனையோடு ஆறு ஆண்டுகளுக்கு மேலாக **காசி , இராமேஸ்வரம், திரு அண்ணாமலை** ஆகிய புண்ணிய ஸ்தலங்களில் **அமாவாசை, பௌர்ணமி** நாட்களில் மாதா மாதம் நடைபெறும் அன்னதான திருப்பணிகளைத் தொடர்ந்து திருச்செந்தூரிலும் கந்த சஷ்டி பெருவிழாவின் போது அன்னதானத்திருப்பணி நடைபெறவிருக்கிறது.

இந்த அன்னதானத்திருப்பணி (திருக்கோயிலுக்கு உட்பட்டது அல்ல) ஆன்மீகம் இதழ் வாசகர்களுக்காகவும், அன்னதான சேவையில் கைங்கர்யத் தொண்டு புரிந்து வரும் அனைத்து அன்பர்களுக்காகவுமே நடத்தப்படுகிறது.

அன்னதான சேவையில் ஈடுபட விரும்பும் முருகபக்தர்கள் தங்கள் நன்கொடை யை Sri Annapoorani Annadhana Seva Trust, Chennai - 4 என்ற பெயரில் Cheque / D. D/ M. O. மூலம் கீழ்கண்ட முகவரிக்கு அனுப்பி திருச்செந்தூர் ஸ்ரீ சுப்ரமணிய சுவாமியின் பேரருளைப் பெற அன்புடன் வேண்டுகிறோம்.



**நன்கொடைகளுக்கு 80G பிரிவின் படி வரி விலக்கு உண்டு.**

Cheque / D. D/ M. O. அனுப்ப வேண்டிய முகவரி


## ஸ்ரீ அன்னபூரணி அன்னதான ஸேவா டிரஸ்ட்

**SRI ANNAPOORANI ANNADHANA SEVA TRUST (Regd.)**

**68, Nadu Street,(Opp. Sri Kapaleeswarar Temple) Mylapore, Chennai - 600 004.**

**TEL : 2495 9302, E-mail:siva siva @ vsnl.net**




ஸ்ரீ சுப்பிரமணியர் ஷட அக்ஷர சக்கரம்

கந்த சஷ்டியின் போது விரதமிருக்கும் அடியார்களுக்கு அமுதளித்து எல்லாவிதமான நலன்களும் அடைவோமாக !

# 13

**வா**ழ்க்கை என்பது ஒரு மலையேற்றம். மலை ஏற ஏற ஒவ்வொன்றும் சிறியதாகி அற்பமாகி பார்வையை விட்டு மறைந்தபடியே உள்ளன. ஏறி ஏறி உச்சியில் கால் வைத்ததும், மலையே அற்பமாகி மறைந்து விடுகிறது. ஏறும் போதெல்லாம் நான் நான் என்று நாம் உணர்ந்த சுயமும் அற்பமாகி விடுகிறது. எல்லாவற்றையும் அற்பமாக்கி விடும் வானம் மட்டுமே எஞ்சுகிறது.

**- ஜெயமோகன்**

*('காடு' நாவலிலிருந்து)*

ஒரு நாளில் இருபத்தி நான்கு மணி நேரத்தில் நான் எனக்கே எனக்கென்று சேமித்து வைத்துக் கொள்வது, அதிகாலை நேரங்களை மட்டுமே. அதிகாலையில் எழுந்து ஆளற்ற தெருவில் கொஞ்ச நேரம் நடப்பேன். இரவின் தடயங்கள் ஒரு கறுத்த இலையைப் போல தெருவெங்கும் உதிர்ந்து கிடக்கும். பேப்பர்காரர்களும், டீக்கடைக் காரர்களும் துயிலெழுந்து, அந்த நாளுக்கான பரபரப்பை ஆரம்பித்து வைக்க, சேவல் இல்லாத மாநகரத்துக் தெருவெங்கும் விட்டு விட்டு பேட்டரிக் குரலால் அலாரம் அடிக்கும். மாநகரத்துப் பள்ளிகள் ஏழு எட்டு மணிக்கே திறந்து விடுவதால், பிள்ளைகளை எழுப்பி அலுவலகம் கிளம்ப ஆயத்தமாகும் பெற்றோர்களுக்கான அலாரம். கிழக்கே ஒரு குழந்தை மூடிய தன் பிஞ்சு விரல்களைத் திறப்பதைப் போல, சூரியன் அவிழத் தொடங்கும். அருகிலுள்ள குடியிருப்பை, சேர்ந்தவர்கள் தொப்பையைக் குறைக்க சோடியம் விளக்குக் கம்பங்களை எண்ணிக் கொண்டே ஓடத் தொடங்குவார்கள். இரவெல்லாம் கண் விழித்த களைப்பில் சோடியம் விளக்குகள் கண்ணடித்துக் கொண்டிருக்கும். நான் வீடு திரும்பி மொட்டை மாடியில் உஷ்ணம் உறைக்கும் வரை எழுதத் தொடங்குவேன். எழுதி முடித்துத் திரும்பிப் பார்க்கையில் தேநீர் கோப்பை சூடு ஆறியிருக்கும்.

சில மாதங்களாக என் அதிகாலை நேரங்கள் திருடு போகின்றன. எலி வளையில் சேமித்த நெல் மணிகளைக் கடப்பாரைகள் அபகரிப்பது போல திடீரென்று என் அதிகாலையின் மேல் தாக்குதல்கள் நடக்கின்றன. சினிமாக்காரர்களை அதிகாலையில் சென்றால் தான் பார்க்க முடியும் என்பது எழுதப்படாத விதி என்று யாரோ ஒரு புண்ணியவான் சொல்லிப்போக, விடியலின் லயமான நிசப்தத்தில் என் வீட்டுக் கதவில் கைரேகைகள் பதிகின்றன.

முந்தின நாள் ஏதாவது ஒலிப்பதிவு முடிந்து பின்னிரவு மூன்று மணி வாக்கில் தான் படுத்திருப்பேன். ஐந்து மணிக்கு கதவைத் தட்டி 'வணக்கம், கவிஞர் இல்லீங்களா... நான் சேலத்திலிருந்து கவிஞர் மாம்பழதாசன்' என்று ஒரு குரல் நுழையும். செந்தமிழில் மிரண்டு போய் பாட்டி என்னை எழுப்புவார்கள். ஹாலுக்கு வந்தால்... வணக்கத்திற்குப் பிறகு ஆபத்து தொடங்கும். "நான் ஆயிரம் பல்லவி எழுதி வைத்திருக்கிறேன். கவிஞர்



அதைப் படித்துப் பார்த்து கருத்துச் சொல்ல ணும்..." "அப்படீங்களா" என்று பொதுவாகத் தலையாட்டுவேன். 'ஒவ்வொன்றும் ஏவுகணை மாதிரி, ஏற்றி விட்டால் சீறிப் பாயும்.' என் 'அப்படீங்களா' தேய்ந்து 'உம்' என்று சுருக்கமாக மாறும்.

"ஒன்று படிக்கிறேன் கேட்கிறீர் களா..." "இல்ல வேணாங்க." "சும்மா கேளுங்க... குயிலுன்னா கறுப்பு, கொக் குன்னா வெளுப்பு...!" "இல்லங்க போதும்!"

இந்த மாதிரி பாடல்கள் "எப்ப வும் அவ நினைப்பு" என்று முடியும் என மனத்தில் தோன்றும். வலிக்கா மல் பக்குவமாகச் சொல்லி எப்படி இவரை அனுப்பி வைப்பது? அதற் குள் அவர் அடுத்த ஏவுகணையை வெளியில் எடுப்பார். "இதெல்லாம் என் னுடைய கவிதைத் தொகுப்புகள் மொத்தம் பதின்மூன்று வந்திருக்கு. எல்லாமே நூல கத்தில் இருக்கு." வசமாக மாட்டிக் கொண்டு ஒரு புத்தகத்தை பிரிப்பேன். மூக்கைத் தேடும் மூக்குத்திகள் என்று ஆரம்பித்து ஒரு கவிதை, முதிர்கன்னியின் சோகத்தை மூன்று லட்சத்து எழுபத்தெட்டாவது முறையாக தட்டையான மொழியில் சொல்லும். மெல்ல குரலைச் செதுக்கிக் கொண்டு "நீங்க நிறைய படிக்கணும். கவிதை இப்போ நவீன கட்டத்துக்கு வந்திருச்சு. மொழியும் பாம்பு மாதிரி தான். சட்டை உரிச்சுக்கிட்டே இருந் தாத்தான் நிக்க முடியும். தொல்காப்பியன் தொடங்கி வண்ணதாசன், வஸந்த் செந்தில், ரமேஷ் பிரேம் வரைக்கும் படிக்கணும்" என்பேன். என்னுடைய அப்படீங்களாவை



அவர் எடுத்துக் கொண்டு "அப்படீங்களா" என்பார்.

"கவிதை மட்டுமல்லாம நாவல், சிறுகதை, கட்டுரைன்னு நிறைய படிக்கணும். இப்ப எஸ்.ராமகிருஷ்ணன்னு..." என்று ஆரம்பிப் பேன். "தெரியும். நம்ம சண்முகா பிலிம்ஸ் மேனேஜர் தானே" என்பார். உரையாடல் அந்தக் கணத்தில் முடிவுற்று காபி கொடுத்து அவரை வழியனுப்புவேன். என் தூக்கத்தை ஜிப்பா பாக்கெட்டில் செருகி வைத்துக் கொண்டு துக்கத்துடன் வெளியேறுவார்.

சில வாரங்களுக்கு முன்பு ஓர் அதி காலையில் மீண்டும் என் வீட்டுக் கதவில் கைரேகை பதிந்தது. ஒரு பாடலின் பல்லவி தடைப்பட்டு நானே கதவைத் திறந்தேன். பதினேழு வயது மதிக்கத் தக்க பையன்



# கிராமம் நகரம் மாநகரம்

ஒருவன் இருந்தான். கையில் ஒரு டிரங்குப் பெட்டி. கசங்கிய உடைகள். "வணக்கம்ணே... என் பேர் பாண்டித்துரை." "சொல்லுங்க.. என்ன வேணும்?" "மதுரைக்குப் பக்கத்திலேருந்து வர்றேன். கவிதை எழுதுவேன். உங்ககிட்ட முன்னுரை வாங்கணும்." எனக்குக் கோபம் கோபமாக வந்தது. கோயம்பேடில் பேருந்தை விட்டு இறங்கி நேராக என் வீட்டை நோக்கிப் படையெடுப்பு. இவன் வயதில் நான் இப்படி எழுத்தாளர்களைத் தேடி ஊர் ஊராக அலைந்த காலங்கள் ஞாபகம் வரக் கோபத்தை அடக்கிக்கொண்டு உள்ளே அழைத்துச் செல்றேன்.



அரைஞாண் கயிற்றிலிருந்து சாவி எடுத்து டிரங்குப் பெட்டியைத் திறந்து, பழுப்பேறிய மஞ்சள் நோட்டு ஒன்றை எடுத்துக் கையில் கொடுத்தான். "இதெல்லாம் என் கவிதைங்க. உங்க முன்னுரை வேணும்." "கவிதை எனக்கு பிடிச்சா தான் முன்னுரை எழுதுவேன். வேற யாருக்கிட்டேயாவது வாங்கிக்கிங்க தம்பி" என்றேன். "இல்லண்ணே, உங்கப் பாட்டு எனக்குப் ரொம்ப பிடிக்கும். கவிதையை படிச்சுப் பாருங்க. பிடிக்கலன்னா கொடுத்திருங்க." குரல் கம்மி அழத் தொடங்கிவிடுவான் போலிருந்தது. "சரி அடுத்த வாரம் வாங்க" என்று வழியனுப்பி வைத்தேன். மறுநாள் இரவு அந்த நோட்டைப் பிரித்து படிக்கத் தொடங்கினேன். பெரும்பாலும் காதல் கவிதைகள். நீ தனியா வரலேன்னா தண்டவாளத்தில் தலை வைப்பேன்' ரகத்தைச் சேர்ந்தவை. சட்டென்று ஒரு கவிதை என்னைச் சலனப்படுத்தியது. மழைக்கு ஒதுங்கும் மாடுகளைப் பற்றி எழுதியிருந்தான். கவிதை மிகப் பிரமாதமாய் வந்திருந்தது. மேற்குத் தொடர்ச்சி மலையும், மாடுகளின் கொம்புகளுமாக கவிதையில் ஒரு மண் வாசம் அடித்தது. பிரமாதமாய் வரக்கூடிய கவிஞன் என்று மனத்திற்குப் பட்டது. வெட்சித்திணையில் ஆரம்பித்து மாட்டிற்கும் இலக்கியத்திற்குமான உறவுகளை கோடிட்டுக் காட்டி, தமிழ்க் கவிதையுலகில் அவன் பங்கை 'காக்கைப் பாடினியார்' போல "மழைக்கு ஒதுங்கும் மாடார்" என குறித்து ஒரு முன்னுரை எழுதி முடித்தேன். குறைந்த பட்சம் ஒரு ஐம்பது பேரிடமாவது அந்த கவிதையைச் சிலாகித்து சொல்லிக் கொண்டிருந்தேன்.

முன்னாள் ஆஸ்திரேலிய கிரிக்கெட் அணியின் கேப்டனான இயான் சேப்பல் அந்த நாட்டில் ஒரு டூர் அடித்துக் கொண்டிருக்கிறார். சும்மா பிக்னிக் மாதிரி அல்ல. ஒரு நோக்கத்துக்காக ஏற்பாடு செய்யப்பட்டிருக்கும் டூர் இது.

பல்வேறு நாடுகளிலிருந்து ஆஸ்திரேலியாவுக்கு வந்து சேருபவர்களைச் சமமாக நடத்துவதா அல்லது புதிய சட்டங்களின் மூலம் அப்படிப்பட்ட வருகையைக் குறைக்கலாமா என்று ஆஸ்திரேலியாவில் இப்போதெல்லாம் அடிக்கடி பட்டிமன்றம் நடக்கிறது. தஞ்சமென்று ஆஸ்திரேலியாவை நாடுபவர்களுக்கு ஆதரவாக அந்த நாடு முழுவதும் பிரசாரம் செய்து வருகிறார் இயான் சேப்பல்.

அடுத்த வாரமும் அதிகாலையில் வந்தான். உள்ளே அமர வைத்து தேநீர் கொடுத்து மாட்டை பற்றிய கவிதையை சிலாகித்துச் சொன்னேன். தலைகுனிந்தபடி அமர்ந்திருந்தான். "எந்த ஊருன்னு சொன்னீங்க..." மதுரைக்குப் பக்கத்தில் ஏதோ ஒரு பட்டியின் பெயரைச் சொன்னான். "வாழ்ந்து பார்த்தவனாலத்தான் இப்படி எழுத முடியும். காதல் கவிதையை விட்டுட்டு இந்த மாதிரி அனுபவங்களைப் பதிவு செய்யுங்க" என்றேன். "எங்க வீட்ல நாலு மாடு இருக்குங்க. ஒசந்த ஜாதி மாடுங்க. மலையடிவாரத்துக்கு ஓட்டிட்டுப் போய் நான் தான் மேய்ப்பேன். அப்பா குடிப் பாருங்க. கள்ளச் சாராயம் குடிச்சிட்டு எங்கேயாவது கருவேலம்புதர்ல விழுந்து கிடப்பாரு. மாட்டை வைச்சுத் தாங்க எங்க பொழப்பு. படிப்பு ஏறல. மேல படிச்சு வைக்க வீட்லயும் வசதி இல்ல. சின்ன வயசுலே இருந்தே ஏதாவது கிறுக்கிட்டிருப்பேன். அதான் உங்கள மாதிரி பாட்டெழுதி

பிழைக்கலாம்னு தோணிச்சு. அதுக்கு மொதல்ல புஸ்தகம் போடணும்னு சொன்னாங்க. அதான்..." என்று இழுத்தான். மாநகரத்து மூக்கணாங்கயிறு இன்னமும் தன் மேல் பதியாத துள்ளலுடன் சொல்லிக் கொண்டிருந்தான். தீயைத் தீண்டாமல் உணர முடியாது என்று எண்ணி நான் மௌனமாக இருந்தேன். என்னுடைய முன்னுரையை கண்கள் கலங்க படித்து முடித்து விடை பெற்றுப் போனான்.

சில நாட்கள் கழித்து மீண்டும் ஓர் அதிகாலை என் வீட்டுக் கதவு அதிர்ந்தது. திறந்தேன். மழைக்கு ஒதுங்கும் மாடார்.

"வாங்க தம்பி!" "புஸ்தகம் வந்திருச்சிங்க. மொதல் புஸ்தகம் உங்களுக்குக் கொடுக்கலாம்னு..." புத்தகத்தை வாங்கிப் பார்த்தேன். வழவழ தாளில் பிரமாதமாக அச்சிடப்பட்டிருந்தது. வண்ணத்துப் பூச்சியின் இறகைப் போல அட்டை வண்ணங்கள் இயல்பாக சங்கமித்திருந்தன. பைண்டிங் வாசனை கலந்து மெழுகுவர்த்தியின் மென்மையுடன் அட்டை இருந்தது. "புத்தகம் நல்லா வந்திருக்கு. எந்த பதிப்பகம்?" என்றேன். "நானேதாங்க போட்டேன்." "அப்படியா, நிறைய செலவாகியிருக்குமே?" "ஆமாங்க..." "எப்படி சமாளிச்சிங்க?" "நாலு மாடு இருந்திச்சின்னு சொன்னேன்ல... அதுல ரெண்ட வித்துட்டேன்." "அடப்பாவி" என்று சொல்லியபடி புத்தகத்தைக் கீழே போட்டேன். அதன் மெழுகு அட்டையில் இரண்டு மாடுகளின் கொம்புகள் முளைத்திருந்தன. அவனை அடிப்பதைப் போல முறைத்தேன். அப்பாவியாக புன்னகைத்துக் கொண்டிருந்தான். "ஆத்தா தான் அழுதுக்கிட்டிருந்துச்சு. அதெல்லாம் பாத்தா முடியுங்களா? அடுத்த வாரம் ஊர்ல வெளியீட்டு விழா வச்சிருக்கேன். நீங்க தான் வெளியிடணும்..." "இல்ல என்னால முடியாது..." என்றேன் தீர்மானமாக. என் அனுமதி இல்லாமல் அச்சிடப்பட்டிருந்த அழைப்பிதழைக் காட்டினான். என் பெயர் கொட்டை எழுத்துகளில் இருந்தது. "நீங்க வருவீங்கன்னு போட்டுட்டேன். தயவு செஞ்சு வரணும். இல்லேன்னா அவமானமா போயிடும்." "அவன் கெஞ்சுவதைப் பார்க்க பாவமாய் இருந்தது.

மேற்குத் தொடர்ச்சி மலைக்கு அருகில் அவன் கிராமம் ஒரு திருவிழா கொண்டாடுவதைப் போல மாறியிருந்தது. வழியெங்கும் சுவரொட்டிகள். ஸ்பீக்கர் கட்டி சினிமாப் பாடல் போட்டு, ஒரு திறந்த வெளி மேடை ஷாமியானா பந்தல். பெயர் எழுதி நம்பர் போட்ட இரும்பு நாற்காலிகள். மொய் எழுதுவதைப் போல உறவினர்கள் ஒவ்வொருவராக மேடைக்கு வந்து பொன்னாடை, கைகடிகாரம், மோதிரம் என்று அந்த ஊர்க் கவிஞனை அமர்க்களப்படுத்திக் கொண்டிருந்தார்கள். மேடையில் இருந்து பார்க்கையில் கால் இரும்பு நாற்காலிகளைச் சுற்றி, பட்டுப் பாவாடையுடன் சில சிறுமிகள் விளையாடிக் கொண்டிருந்தார்கள். கூட்டம் முடிந்ததும் அனைவருக்கும் ஆடு வெட்டி விருந்து தயாராகிக் கொண்டிருந்தது. கூட்டம் முடிந்து காரில் இரயில்வே ஸ்டேஷன் வரை அழைத்து வந்து என்னை வழியனுப்பினான்.

"உங்க பேச்சு ரொம்ப நல்லாயிருந்துச்சு. நன்றிங்க." "பரவாயில்லப்பா." "சீக்கிரம் சினிமாவுல நானும் சாதிப்பேன்ங்க." "உம்..." "ரொம்ப நன்றிங்க" என்றான் கையைப் பிடித்துக் கொண்டு.

"கல்யாணம் நடத்துற மாதிரி விழாவை தடபுடல் பண்ணிட்டீங்க. கடன் கிடன் வாங்கினீங்களா?" என்றேன். "இல்லீங்க மீதி ரெண்டு மாட்டையும் வித்திட்டேன்" என்றான். என்னைப் போல அதிர்ந்து ரயில் கிளம்பி, நான்கு மாடுகளின் கொம்புகளுடன் மாநகரத்தை வந்தடைந்தது. அதற்கு பிறகு நேற்று காலை வரை யார் யாரோ அதிகாலையில் கதவைத் தட்டுகிறார்கள். அவன் மட்டும் வரவேயில்லை.

(சந்திக்கிறேன்)



இங்கிலாந்து கிரிக்கெட் அணியின் வேகப் பந்து வீச்சாளரான டேவன் மால்கம் சமீபத்தில் கிரிக்கெட்டிலிருந்து ஓய்வு பெறுவதாக அறிவித்திருக்கிறார். நாற்பது டெஸ்ட் பந்தயங்களில் 128 விக்கெட்களை எடுத்திருக்கிறார்.

## நேற்று...இன்று...நாளை...

# தலைநகர் மாறலாம்; தலையெழுத்து மாறுமா?

இரண்டாவது உலக யுத்தத்துக்குப் பிறகு ஜெர்மனியில் ஒரு விசித்திர நிலை. மேற்கு ஜெர்மனியில் ஜனநாயகம் வேரூன்ற, கிழக்கு ஜெர்மனியில் கம்யூனிஸ ஆதிக்கம். தலைநகர் பெர்லினோ, கிழக்கு ஜெர்மனியின் இடையில் அமைந்திருந்தது. பெர்லின் நகரின் மேற்குப் பகுதிக்கு மேற்கு ஜெர்மனி உரிமை கொண்டாடிய போதிலும், அதனைத் தன் தலைநகராக வைத்துக் கொள்ள முடியவில்லை. காரணம், ஒவ்வொரு தடவையும் தலைநகரை அடையவும், திரும்பி வரவும், கம்யூனிஸ கிழக்கு ஜெர்மனியைக் கடந்து தான் போக வேண்டும். எனவே "பான்" என்ற ஊரைத் தலைநகராகத் தேர்ந்தெடுத்து, நிர்வாக நகரம் உருவாக்கியது மேற்கு ஜெர்மனி. ஒரு நிர்பந்தத்தின் பேரில் உருவான புதிய தலைநகரம் பான்.

★ ★ ★

முகமது பின் துக்ளக் என்று ஒரு மொகலாய அரசன் இருந்தான். அவன் தன் தலைநகரம் நாட்டின் மையப் பகுதியில் இருக்க வேண்டும் என்று நினைத்தான். டில்லியிருந்து வேறு இடத்துக்குத் தலைநகரை மாற்றினான். அதிகாரிகளும் மக்களுமாக ஏராளமான பேர் குடி பெயர்ந்தார்கள். அதனால் ஏற்பட்ட துன்பம் தவிர, புதிய இடமும் சரிப்பட்டு வரவில்லை. மறுபடியும் டில்லியையே தலைநகராக அறிவித்தான். மக்கள் 'அப்பாடா' என்று பெருமூச்சு விட்டனர்.

தான் பிடித்த முயலுக்கு மூன்றே கால் என்று சாதிக்க முற்படும் புத்திசாலியைவிட, தன் தவறைத் திருத்திக் கொள்ளத் தயங்காத சராசரி மனிதன் எவ்வளவோ மேல்.

★ ★ ★

பிரிட்டிஷ் ஆட்சிக் காலத்தில் யு.எஸ். ராமசுந்தரம் என்று ஒரு இஞ்சினியர் இருந்தார். இந்தத் தமிழர், அரசுப் பணியில் இந்தியா முழுவதும் மாற்றலாகிப் போய், ஏராளமான முன்னேற்றங்களுக்கு வழி வகுத்தார். கிண்டி இன்ஜினியரிங் கல்லூரியில் அவர் படித்தபோது (இன்று அண்ணா பல்கலைக் கழகம்) அவர் பெற்ற மதிப்பெண்களுக்கு இணையாக, அதற்கு முன்பும் பின்பும் யாரும் பெற்றதில்லை என்று கூறப்படுகிறது. இதற்காகத் தங்க மெடல் வென்றார். ஐம்பது ஆண்டுகளே உயிர் வாழ்ந்த இவர், மிகக் குறுகிய காலத்தில் மிக அதிகமான விமான நிலையங்களை அமைத்தது பெரும் சாதனை. இரண்டாம் உலக யுத்த காலத்தில் இந்த அத்யாவசியப் பணிக்காக பிரிட்டிஷ் அரசாங்கத்தால் மிகவும் போற்றப்பட்டார். அவர் அமைத்த விமான தளங்கள், சாலைகள், அணைகள் முதலானவை இன்றும் பயன்பட்டு வருகின்றன. அரசும் அரசு இஞ்சினியர்களும் செய்யும் காரியங்கள், இப்படி நிரந்தரப் பயன் தரத்தக்கவையாக இருக்க வேண்டும். அதோடு பொருளாதார முன்னேற்றத்துக்கும் வழி வகுப்பதாக விளங்க வேண்டும்.

★ ★ ★

யு.எஸ். ராமசுந்தரம் நினைவுச் சொற்பொழிவு ஆண்டு தோறும் நிகழ்கிறது. சில மாதங்களுக்கு முன் ஹாங்காங்கிலிருந்து டாக்டர் செங் இங்கு வந்து அண்ணா பல்கலைக் கழகத்தில் சொற்பொழிவாற்றினார். இவர் ஹாங்காங் வீட்டு வசதித் துறைத் தலைவர். நூற்றியறுபது ஆண்டுகளுக்கு முன் மீனவர் கிராமமாக இருந்த ஹாங்காங், இன்று உலக



• ஹாங்காங் ஏர்போர்ட்

வர்த்தகத்தில் முன்னணி நகரங்களில் ஒன்று.

இந்த வளர்ச்சிக்கு ஏற்ப விமான நிலையம் போதுமானதாக இல்லை. எனவே, இருபது பில்லியன் அமெரிக்க டாலர்கள் செலவில் புதிய விமான நிலையத்தை உருவாக்கினார்கள். (ஆயிரம் மில்லியன் என்பது ஒரு பில்லியன்) அரசு முதலீடு, தனியார் முதலீடு, உலக நாடுகளில் பெற்ற கடன் எல்லாம் உதவ, சர்வதேச டெண்டர் விட்டு, எட்டு ஆண்டுகளில் கட்டி முடித்தார்கள். இதற்காக ஹாங்காங் நகரிலிருந்து இருபத்தைந்து கிலோ மீட்டர் தள்ளி இருந்த இரு தீவுகளைத் தேர்ந்தெடுத்து, அவற்றின் மீது 1255 ஹெக்டேர் பரப்புள்ள மேடை அமைத்தார்கள். அதுவே விமான தளமாயிற்று. அங்கேயிருந்து பல இடங்களுக்குப் போக ஐந்து சாலைகளும், ரயில் பாதைகளும் போடப்பட்டன. சாலைகளை இணைக்க, கடலுக்கு மேல் இரண்டு பிரும்மாண்டமான பாலங்கள் உருவாயின. விமான நிலையம் அருகே, அங்கு பணியாற்றுவோரும், பிறரும் வாழும் வண்ணம், இரண்டு லட்சம் பேர் குடியேற ஒரு நகரை நிர்மாணித்தார்கள். விமான நிலையத்துக்குள்ளேயே பல இடங்களுக்கும் போக, 3.5 கி. மீட்டர் நீளமுள்ள, நகரும் பாதைகள் உள்ளன. ஒரு முனையிலிருந்து மற்றொரு முனைக்கு பயணிகளை அழைத்துப் போக, டிரைவர் இல்லாத ரயில் ஓடுகிறது. இது ஒரு செகண்டில் 750 மீட்டர் தூரத்தைக் கடக்கிறது. பயணிகளின் ஸூட்கேஸ்கள் முதலியன, ஒரு மணி நேரத்தில் 13680 என்ற கணக்கில் விமானங்களில் ஏற்றி, இறக்கப்படுகின்றன. பயணிகளுக்காக ஒரு நாளைக்கு 80,000 சாப்பாடுகள் தயாராகின்றன. இவ்வ எல்லாவற்றையும் விட முக்கியமானது என்னவென்றால், இந்த விமான நிலையம் சம்பாதிக்க ஆரம்பித்து, போட்ட முதலின் பெரும்பகுதியை ஹாங்காங் அரசு ஏற்கெனவே திரும்ப எடுத்துவிட்டது! மக்களின் வரிப் பணம் எப்படி முதலீடாக வேண்டும் என்பதற்கு, ஹாங்காங் விமான நிலையம் அற்புதமான எடுத்துக்காட்டு. லாபம் ஈட்டுவதுடன், அடிப்படை வசதிப் பெருக்கத்தால் நாட்டின் ஒட்டு மொத்த பொருளாதார வளர்ச்சிக்கும் உதவுகிறது.





# செம்பியன்



● படம்: ஞானசேகரம்

★★★

வடபழனி வாசகர் ஆரூர் சேகர் கேட்கிறார்: "புதிய தலைமைச் செயலகம், நிர்வாக நகரம் என்று இரு பெரும் செலவினங்களைத் தமிழக மக்கள் தலையில் சுமத்துகிறது தமிழக அரசு" என்று தலையங்கத்தில் எழுதியிருக்கிறீர்கள். காகித விலை ஏறிப் போச்சுன்னா, அந்தச் செலவினத்தை நீங்க வாசகர் தலையில் சுமத்தவில்லையா?"

இந்த வாரம் இந்தப் பகுதியில் எழுதப்பட்டவை ஆரூர் சேகருக்கும் அவரைப் போன்ற சில சந்தேகக்காரர்களுக்கும் பதிலாக அமையும். இன்னமும் புரியவில்லை என்றால் புரியாததுபோல் நடிப்பதாகத்தான் அர்த்தம்!

★★★

புதிய தலைமைச் செயலகத்துக்கு வந்த அமைச்சர் கேட்டார். "எங்கய்யா அண்டர் செக்ரட்டரியைக் காணோம்?"

"அவர் நிர்வாக நகரத்துக்கு ஆன் டியூடில போயிருக்கார் ஸார்!"

"அங்க ஃபோன் பண்ணுய்யா; அமைச்சர் பேசணும்கிறார்னு சொல்லு..."

"ஃபோன் போட்டுப் பார்த்தேன் சார்; ஆன் டியூடில அவர் தலைமைச் செயலகத்துக்குப் போயிருக்கிறதாச் சொல்றாங்க!"

# ஆ ஹா! ரூ.50,000 பரிசு!






ஆ ஹா! ரூ.50,000 பரிசு! **திருச்சி குவிஸ் போட்டி கூப்பன் - 4**

1. ஒருபுறம் காவிரி, மறுபுறம் அதன் கிளை நதியான .................................... ஆகியவற்றால் சூழப்பட்டுள்ளது ஸ்ரீரங்கம்.
2. ஸ்ரீரங்கத்தில் வைகுண்ட ஏகாதசியன்று திறக்கப்படும் பரமபதவாசல் அமைந்த திருவீதியின் பெயர் ......................................
3. ஸ்ரீரங்கம் கோவிலிலிருந்து ஒரு கிலோமீட்டர் தொலைவிலுள்ள .................................... மண்டபம் பக்தர்களின் ஸ்நான கட்டமாக விளங்குகிறது.
4. திருச்சியிலிருந்து சுமார் முப்பது கிலோ மீட்டர் தொலைவிலுள்ள முருகத் தலமான ....................................யில் மயில்கள் சரணாலயம் உள்ளது.
5. .................................... ஜெயராமன் பிரபல வயலின் இசைக் கலைஞர்.
6. திருச்சி மாவட்டத்திலுள்ள .................................... மாடு, முறுக்கு ஆகிய இரண்டிற்குமே பெயர் பெற்றது.

ரூ.50,000 மெகா பரிசைப் பெற நீங்கள் செய்ய வேண்டியது ரொம்ப ரொம்ப 'சிம்பிள்'!

எதிரேயுள்ள கூப்பனில் இடம் பெற்றுள்ள கேள்விகளுக்குப் பதில் எழுதி வைத்துக் கொள்ளுங்கள். அடுத்து வரும் 2, 9 நவம்பர் இதழ்களிலும் இதே போன்று குவிஸ் கூப்பன்கள் இடம் பெறும். ஆறாவது வார இறுதியில் ஆறு கூப்பன்களையும் நிரப்பி, உங்கள் பெயர், விலாசத்துடன் எங்களுக்கு அனுப்ப வேண்டும்.

- அனைத்துக் கேள்விகளுக்கும் சரியான பதில்கள் எழுதிய திருச்சி மாவட்ட கல்கி வாசகர் ஒருவருக்கு ரூ.50,000 பரிசு வழங்கப்படும்.
- ஒருவருக்கு மேற்பட்ட வாசகர்கள் சரியான பதிலை எழுதியிருந்தால், இருக்கவே இருக்கிறது குலுக்கல் முறை.
- ஆறுதல் பரிசுகளாக, நூற்றாண்டு கண்ட முதல் தமிழ்ப் புத்தக நிறுவனமான அல்லயன்ஸ் கம்பெனி, சென்னை, வழங்கும் ரூ.85/- மதிப்புள்ள 'சோ' எழுதிய 'எங்கே பிராமணன்?' புத்தகம் - 120 நபர்களுக்கு.



- உறையின் மீது 'ஆஹா! ரூ. 50,000 (திருச்சி)' என்று குறிப்பிட வேண்டும்.
- விடைகள் 20.11.2003க்கு முன்னதாக வந்து சேர வேண்டும்.
- போட்டி தொடர்பாக விசாரணைகள் அனுமதிக்கப்படமாட்டாது.
- இந்தப் போட்டி திருச்சி மாவட்ட கல்கி வாசகர்களுக்கு மட்டுமே.
- ஆசிரியரின் தீர்ப்பே இறுதியானது.

பா.ராகவன்

# 18

# மெல்லினம்

சண்டை, கடும் சண்டை. உலக யுத்தம் கூட இப்படித்தான் நடந்திருக்க வேண்டும். 'டமால், டுமீல், டிஷ்யூம் டிஷ்யூம். ஆ..ஊ..ஐயோ, அம்மா, அடிக்காதேடி சனியனே, உன்னைக் கொல்லாம விட மாட்டேன் பார். சீ போ, இனி உன் கூடப் பேசக்கூட மாட்டேன். லைஃப் லாங் காய்தான் ஐயோ, நான் சொன்னால் நீ நம்ப மாட்டியா? காட் ப்ராமிஸா நான் அதைச் சொல்லல்லே... சொல்லல்லே... சொல்லல்லே..!'

குட்டிக்குக் கோபம் அடங்கவேயில்லை. எத்தனை நம்பிக்கையுடன் அவள் ரஞ்சனாவிடம் ஜக்குவின் வீரபராக்கிரமங்களைச் சொல்லியிருந்தாள். அதுவும் எத்தனை ஜாக்கிரதையாக! அந்த வயலட் புடைவை கட்டிய பெண்ணின் ஆவியை கன ஜாக்கிரதையாக ஒரு ரத்தக் காட்டேரியாக உருமாற்றி, புதிய கதைச் சட்டை போட்டு, புதுப் பொலிவுடன் ரகசியமாக அளித்திருந்தாள். அது ஒரு பெரிய பரிசு அல்லவா? பொக்கிஷமல்லவா? அதைப் போய் இந்த ரஞ்சனா சனியன், அவள் அம்மாவிடம் அப்படியே உளறிக் கொட்டியிருக்கிறாளே... இவளை எப்படி இனிமேல் நம்புவது? இவளை எப்படி ஃப்ரெண்டாக வைத்துக் கொள்வது? தனக்கு ஃப்ரெண்டாக இருப்பதோடல்லாமல் ஜக்குவும் ஃப்ரெண்டாக வேண்டுமாம், மகாராணிக்கு! ஆசையைப் பார்! வெவ்வவ்வே.

ரஞ்சனாவுக்கு அழுகை அழுகையாக வந்தது. அவள் சற்றும் எதிர்பார்க்கவில்லை. அதிர்ச்சியாகத்தான் இருந்தது. குட்டி குறிப்பிட்ட ரத்தக் காட்டேரி குறித்து ஒரு சொல்கூட அவள் தன் அம்மாவிடம் சொல்லியிருக்கவில்லை. எப்படிச் சொல்ல முடியும்? படிப்பு மீதல்லவா ப்ராமிஸ் பண்ணியிருக்கிறாள்? கவனமாக அதை மாற்றி, ஏழு ராட்சஸர்கள் அவள் வீட்டு வாசலில் வந்து நின்று மிரட்டியதாகத்தான் சொல்லியிருந்தாள். இந்த அம்மா எப்படி நூல் பிடித்த மாதிரி ராட்சஸர்களை விட்டு விட்டு, ரத்தக் காட்டேரிக் கதையைக் குட்டியின் அம்மாவிடம் சொன்னாள்? அம்மாவுக்கு மந்திரசக்தி இருக்குமோ? தான் மாற்றிச் சொன்னாலும் உண்மை என்ன என்று மனத்துக்குள்ளிருந்து எடுத்துப் பார்த்து விடுவாளோ?

சேச்சே. இதென்ன குழப்பம்? ஒன்றுமே புரியவில்லை. குட்டியின் கோபம் நியாயமானது தான். அவள் அடித்ததையும் கடித்ததையும்கூட ரஞ்சனாவால் பொறுத்துக் கொள்ள முடிந்தது. ஆனால் ஏழு ராட்சஸர்கள் எப்படி ரத்தக் காட்டேரியாக அம்மா மூலம் உருமாறினார்கள் என்பதுதான் அவளுக்குப் புரியாத புதிராக இருந்தது.

ஆனால் குட்டியின் கோபம், ராட்சஸர்கள் மீண்டும் ரத்தக் காட்டேரியாக உருமாறியது பற்றியே அல்ல. அவள் எப்படி அந்தக் கதையைப் போய் அம்மாவிடம் சொல்லலாம்? அடிப்படையிலேயே அல்லவா தப்பு நடந்திருக்கிறது?

"இப்போ என்ன ஆச்சு? உங்கம்மா எங்கம்மாகிட்டே சொன்னாங்களா? எங்கம்மா எங்க அப்பா கிட்டே சொல்லி, நேரே போய் ஜக்குவோட அப்பாகிட்டே கம்ப்ளைண்ட் பண்ணச் சொல்லியிருக்கா. இன்னிக்கு ஈவினிங் பயங்கர ப்ராப்ளம் ஆகப் போவுது.ஜக்குவோட அப்பா அவனைக் கூப்பிட்டு விசாரிச்ச நெக்ஸ்ட் செகண்டே அவன் என்கிட்ட வந்து கேப்பான். இல்லாட்டி, இருந்த இடத்துலேருந்தே என் பேச்சு கா விட்டுடுவான். உன்னால எங்க ஃப்ரெண்ட்ஷிப்பே போச்சு!"

கேவிக் கேவி அழத் தொடங்கியிருந்தாள் குட்டி.

ரஞ்சனாவுக்கும் அழுகை வந்தது. ஒரு மேதையைக் குட்டி மூலம் நட்பாக்கிக் கொள்ள அவள் மிகவும் ஆவலாயிருந்தாள். ஆனால் அவளுக்கே நட்பு போய் விடுமாறு அல்லவா செய்துவிட்டோம்? தன் வாய் ஏன் சும்மா இல்லை? அல்லது தன் அம்மாவின் வாய் ஏன் சும்மா இல்லை? அட, அதுதான் போகட்டும். இந்தக் குட்டியின் அம்மாவுக்குக் கூடவா 'வாய் சும்மா இருக்காது?

எல்லாமே சிக்கல். பெரிய சிக்கல். ரத்தக் காட்டேரியை விரட்ட முடிந்த ஜக்குவால், அவன் அப்பாவைச் சமாளிக்க முடியுமா என்று தெரியவில்லை. ரத்தக் காட்டேரிகள் மந்திரத்துக்கு பயப்படும். அப்பாக்கள் எப்படி பயப்படுவார்கள்? கடவுளே, நீதான் ஜக்குவைக் காப்பாற்ற வேண்டும். குட்டியுடன் அவன் காய்விடாமல் இருக்க வேண்டும். குட்டி தன் மீது கொண்டிருக்கிற கோபமும் சீக்கிரம் அடங்க வேண்டும். எல்லாம் சரியானால்

பிள்ளையாருக்கு மூன்று தோப்புக்கரணம்!

அவளுக்கு ஆறவேயில்லை. அன்று மாலை வீட்டுக்குப் போனதும் முதல் காரியமாக அம்மாவிடம் சண்டை பிடித்தாள். அவள் எப்படிக் கதையை மாற்றிச் சொல்லலாம்?



"நான் ஏழு ராட்சசர்கள்னுதானே சொன்னேன்? நீ எப்படி ரத்தக் காட்டேரின்னு சொல்லியிருப்பே குட்டியோட அம்மா கிட்டே?"

"என்ன எழவானா என்னடி? இனிமே பேய், பூதம், ராட்சஸன்னு எதையாவது கேட்டுக்கிட்டு வந்து அளந்தேன்னா நல்லா நாலு சாத்து சாத்தப் போறேன்" என்றாள் ரஞ்சனாவின் அம்மா.

சொல்லிவிட்டாளே தவிர, அவளுக்கும் அது ஆச்சரியமாகத் தான் இருந்தது. குட்டியின் அம்மாவிடம் புகார் சொல்லும்போது எதற்காக ரஞ்சனா சொன்ன ராட்சஸர்கள் கதையை ரத்தக் காட்டேரிக்கதையாக தான் மாற்றி னோம்? சொல்கிற புகாரின் தீவிரத்தை ராட்சஸர்களைக் காட்டிலும் ரத்தக் காட்டேரிகள் அதிகரிக்கக்கூடும் என்று பட்டிருக்கலாம். ரத்தக்காட்டேரிகள். தனக்குக் கூட கற்பனை எத்தனை அழகாகப் படர்ந்து சிறகு விரிக்கிறது. எப்படியோ, குழந்தைகள் இனியாவது இந்த மாதிரிக் கதைகளில் வாழாமல் இருந்தால் சரி. வீட்டிலும் கேபிள் கனெக்ஷனைக் கூட ரத்து செய்ய முடியுமானால், நன்றாக இருக்கும். எங்கு பார்த்தாலும் பில்லி சூனிய சீரியல்கள். சனியன்.

இரவு ரஞ்சனா உறங்கிய பிறகு அவள் குட்டியின் அம்மாவுக்கு போன் செய்து தன் நன்றியைத் தெரிவித்துக் கொண்டாள். "ரொம்ப கரெக்டா ஆக்ஷன் எடுத்திருக்கீங்க நிர்மலா. இனிமே குழந்தைகள் இந்தமாதிரி கதைகள் யார் சொன்னாலும் உட்கார்ந்து கேட்காது. படிக்கிற வயசுல என்னெல்லாம் டைவர்ஷன் பாருங்க."

நிர்மலாவுக்கும் அந்தத் தொலைபேசி அழைப்பின் சாரம் மிகவும் பிடித்திருந்தது. குழந்தைப் பராமரிப்பு. எத்தனை பெரிய விஷ

யம். இப்படியான சிக்கல்கள் வரும் என்று யாரும் நினைத்தும் பார்க்க முடியாது. பேய்க் கதைகள் கேட்டு இரவுகளில் அலறுகிற குழந்தைகள். பிரச்னையின் வேரை வெட்டிவிடுவது தான் ஒரு நல்ல அம்மாவின் லட்சணம். தான் ஒரு நல்ல அம்மா என்று இன்னொரு நல்ல அம்மா சான்றிதழ் அளிக்கிறாள். அதுவும் ராத்திரி ஒன்பதரைக்கு மேல் நம்பர் தேடி போன் செய்து. ரொம்ப நல்லது.

"நான் என் ஹஸ்பெண்ட் கிட்டயே சொல்லிட்டேன். அந்தப் பையன் ஜக்குவோட அப்பாவைப் பார்த்துப் பேசிட்டுத்தான் மறுகாரியம் பார்க்கணும்னு, ஸ்டிரிக்டா சொல்லிட்டேன். அவன் நல்ல பையன்தான். நல்லா படிக்கவும் செய்வான். ஆனா, ஏன் புத்தி இப்படியெல்லாமும் போறதோ தெரியலை" என்று சமூகக் கவலை பட்டாள் நிர்மலா.

"நல்ல காரியம் பண்ணீங்க நிர்மலா. முடிஞ்சா குட்டியை அந்தப் பையனோட சேராமப் பார்த்துக்கோங்க. அவ பிரில்லியண்ட் கேர்ள். கண்ட கதைகள் கேட்டு பயந்து அலறினா, உடம்புக்கு என்ன ஆறது? ம்?"

ஆனால் குட்டியின் அப்பாவுக்கு இந்த அற்ப விஷயத்தைப் பெரிதுபடுத்த வேண்டாம் என்று தோன்றியது.

"குழந்தைகள் தானே நிர்மலா? நாலுவிதமா பேசத்தான் செய்யும். விளையாடத்தான் செய்யும். உன் பையன் பேய்க்கதை சொல்லி என் பொண்ணை பயமுறுத்தறான்னு போய் கம்ப்ளைண்ட் பண்ணினா நல்லவா இருக்கும்? மோர் ஓவர் ஜக்கு இஸ் எ குட் பாய். ரொம்ப சமத்து. யாரோ அவனுக்கு அந்தக் கதையைச் சொல்லியிருக்கணும். அவன் இவகிட்ட சொல்லியிருக்கான். இப்படியே பெரிய ரவுண்ட் ஆயிடுச்சு. ஜஸ்ட் லீவ் இட்" என்றார் அவர்.

"ம்க்கும்" என்று இடித்துக் கொண்டாள் நிர்மலா.

குட்டிக்கு இன்னும் சந்தேகம் தீர்ந்த பாடில்லை. அம்மாவின் சொல் கேட்டு அப்பா, விஷயத்தைக் கொண்டு போய் ஜக்குவின் வீட்டில் உடைத்திருக்கிறாரா? இல்லையா? காலையிலேயே அவர் சொல்லியிருந்தால் இந்நேரம் ஜக்கு நேரே வந்து காய் விட்டு விட்டுப் போயிருப்பான். ஒருவேளை ஜக்குவின் அப்பா இன்னும் அவனைக் கூப்பிட்டு விசாரிக்கவில்லையோ? அல்லது தன் அப்பாவே விஷயத்தை இன்னும் சொல்லவில்லையா? சொல்ல வேண்டாமே என்கிற அவர் முடிவு மட்டும் உறுதி முடிவாக இருந்துவிட்டால் எத்தனை உத்தமம்?

அவளுக்கு ஒரு யோசனை தோன்றியது. அம்மா அந்த இடத்தை விட்டு அகன்று ஹாலுக்குப் போகிறவரை பொறுமையாகக் காத்திருந்தாள். கதவுகளைச் சாத்திவிட்டு விளக்கணைக்க அவள் எழுந்து கொண்டதும், தொபுக்கட்டீர் என்று அப்பாவின் மடியில் குதித்து, அமர்ந்து கழுத்தைக் கட்டிக் கொண்டு கொஞ்ச ஆரம்பித்தாள்.

"அப்பா, ப்ளீஸ்ப்பா. இனிமே நான் பேய்க் கதையெல்லாம் கேக்க மாட்டேன். சொல்ல மாட்டேன். ப்ராமிஸ்ப்பா. இந்த ஒரு வாட்டி விட்டுடுங்களேன். ஜக்கு வீட்டுல போய் கம்ப்ளைண்ட் பண்ணாம பாருங்களேன்? அப்புறம் அவன் என் பேச்சு கா விட்டுடுவான். என் கூட பேசவேமாட்டான். லைஃப் முழுக்க அப்புறம் காய்தான்னு சொல்லிடுவான்பா... ப்ளீஸ்பா..."

அவர் குழந்தையின் தலையைக் கோதிவிட்டார்.

"ம்ம்.. ஜக்கு உனக்கு அவ்ளோ முக்கியமான ஃப்ரெண்டா?" என்று கேட்டார்.

"ஆமாப்பா. ரொம்ப முக்கியம். என் பெஸ்ட் ஃப்ரெண்ட். எவ்ளோ கெட்டிக்காரன் தெரியுமா அவன்? ஒருவாட்டி கூட எந்த சப்ஜெக்டுலேயும் அவன் செண்டமுக்குக் குறைஞ்சதே

"மானேஜர் டேபிள்ல நிறைய சீன வெடி கட்டு இருக்கும்போதே நினைச்சேன். இப்படி ஏதாவது பண்ணுவார்னு..."

"என்ன பண்ணினார்...?"

"நான் தூங்கிட்டு இருக்கும்போது ஒரு சரத்தைப் பத்த வச்சு என் டேபிள் அடிலே வீசிட்டார்!

– எம். அருள்மூர்த்தி

இல்லை..." படிப்பை முன்னிறுத்தினால் தான் அப்பாவுக்கு நம்பிக்கை வரும் என்று அவளுக்குத் தோன்றியது.

"அப்புறம்?"

"நிறைய விஷயம் தெரியும் அவனுக்கு. கார்டனிங்கெல்லாம் தெரியும். அனிமல்ஸோட லேங்குவேஜெல்லாம் தெரியும்."

"அடடே!"

"ப்ராமிஸ்பா! அவனோட வெங்கடாஜலபதி என்ன பேசினாலும் அவனுக்குப் புரியும், அவன் பேசறதும் அதுக்குப் புரியும். உங்களுக்குத் தெரியுமா? ஒருநாள் அவன் ஸ்கூலுக்குப் போயிருக்கும்போது, அந்த நாய் வீட்டை விட்டு எங்கியோ வெளில போய் சுத்திட்டு வந்திருக்கு. இவன் வந்ததுமே அதைக் கண்டுபிடிச்சுட்டான். எப்படிடா தெரிஞ்சுதுன்னு கேட்டா, அது ஊர் சுத்தின ஸ்மெல்லை வெச்சே கண்டுபிடிப்பேன்னு சொன்னான். நாயோட ஸ்மெல்! எவ்ளோ க்ரேட் இல்லே? என் கண் எதிரேயே அதைக் கூப்பிட்டு இனிமே வெளில போனேன்னா, கார்ப்பரேஷன்காரன்கிட்டே பிடிச்சிக் குடுத்துடுவேன்னு மிரட்டினான். உடனே அது என்ன பண்ணித்து தெரியுமா?

வவ்வ்வூவ்வ்வ்னு என்னமோ ஒரு சத்தம் குடுத்தது. அழுவே அழுதுடுத்து. கண்ணுலே ருந்து தண்ணி! நான் பார்த்தேன்ப்பா! நம்ப முடியலை! என்னதுடான்னு கேட்டா, ரொம்ப சாரி, இனிமே வெளில போகவே மாட்டேன், காட் ஃப்ராமிஸ்னு சொல்லி அழுறதாம்! அவன் காலடில படுத்துண்டு அது எழுந்திருக்கவே மாட்டேன்னுடுச்சு. தெரியுமா?"

குட்டியின் அப்பா, மிகுந்த அக்கறையும் ஆர்வமுமாக அவள் சொல்வதைக் கேட்டு விட்டு, "சமத்து, நீ படுத்துக்கோ, மணியா யிடுச்சு பார்" என்று சொன்னார்.

"அப்ப நீங்க அவப்பா கிட்ட சொல்ல மாட்டிங்க தானே?"

"சொல்லலை" என்றார் சிரித்துக்கொண்டே.

"சமத்து அப்பா" என்று அவரை இறுக்கிக் கட்டிக் கொண்டு முத்தம் கொடுத்தாள். மிகுந்த மன நிம்மதியுடன் படுக்கைக்குப் போனாள். இந்த ராத்திரி எப்போது முடியும்? விடிந்ததும் முதல் காரியமாகப் போய் ஜக்குவைப் பார்க்க வேண்டும். என்னத்தையாவது கொஞ்ச நேரம் பேச வேண்டும். இன்று பொழுது விடிந்ததிலிருந்தே மனசு சரியில்லை. எத்தனை குழப்பம், கலக்கம்! ஐயோ, கோபம் வேறு. பாவம் ரஞ்சனா. அவளும் தன்னை மாதிரிதானே? தனக்கு அவளிடம் சொல்லத் தோன்றியது போலத்தானே அவளுக்கும் யாரிடமாவது சொல்ல வேண்டும் என்று பட்டிருக்கும்? அது ஒரு தப்பா? அதற்குப் போய் இத்தனை பெரிய கலாட்டாவைத் தான் செய்திருக்க வேண்டாம். எத்தனை அடிகள், கிள்ளுகள், ஐயோ பாவம்! எவ்வளவு வலித்திருக்கும்! பதிலுக்கு அவள் ஒருமுறை கூடக் கிள்ள வில்லை. ஆனால் எப்படி அழுதாள்! தனக்கு ஏன் இத்தனை ஆங்காரமும் துவேஷமும் வந்துவிட்டது இன்று?



ஜக்கு. ஆம். அவனுக்கு ஒரு பிரச்னை. அதன் மூலம் தனக்கும் அவனுக்குமான நட்பு பாதிக்கப்படும் என்று தோன்றிவிட்டதனால் தான் எல்லாமும். நல்லவேளை, அம்மா மாதிரி, ரஞ்சனாவின் அம்மா மாதிரி, தன் அப்பா இல்லை. அவர் சமத்து. தன்னை மாதிரி, ஜக்குவை மாதிரி. அதனால்தான் அம்மாவின் பேச்சைக் கேட்டு ஜக்குவின் வீட்டுக்குப் போய் புகார் செய்ய மாட்டேன் என்று உத்தரவாதம் அளித்திருக்கிறார். எத்தனை நல்ல அப்பா!

ஆனால் அவள் ஒரு முடிவு செய்துகொண்டாள். ரஞ்சனா உட்பட இனி யாரிடமும் எப்போதும் ஜக்குவைக் குறித்த விஷயங்களைப் பகிர்ந்து கொள்வதில்லை. காட் ப்ராமிஸ்.

**உ**றங்கியது தெரியாமல் உறங்கி, விடிந்தது தெரியாமல் விழித்தெழுந்தபோது அவளுக்கு ஒரு ஆச்சர்யம் காத்திருந்தது. ஜக்குவே அவள் வீடு தேடி வந்திருந்தான். ஐயோ இந்த அம்மா என்னத்தையாவது அவனிடம் உளறாமல் இருக்க வேண்டுமே என்று பதறி எழுந்து வாசலுக்கு ஓடினாள்.

நல்லவேளை, அம்மா குளித்துக் கொண்டு தான் இருந்தாள். அப்பாதான் அவனுடன் பேசிக் கொண்டிருந்தார். குட்டி வந்ததைப் பார்த்ததும் "ராத்திரிதான் சொல்லிண்டிருந்தே. இதோ, உன் ஃப்ரெண்டு வந்துட்டான் பாரு" என்று சொன்னார்.

"நான் மூணு நாள் ஊருக்குப் போறேன் குட்டி" என்றான் ஜக்கு.

"ஊருக்கா! எந்த ஊருக்கு? உங்கப்பா, அம்மாவெல்லாம் வராங்களா?"

"ம்ஹூம். ஸ்கூல் எஸ்கர்ஷன்."

அவளுக்கு அந்தத் தகவல் மிகவும் அதிர்ச்சியாக இருந்தது. ஜக்கு மூன்று நாட்கள் இருக்க மாட்டான்! போயும் போயும் இப்போதா அவன் பள்ளியில் எஸ்கர்ஷன் ஏற்பாடு செய்ய வேண்டும்?

"எந்த ஊருக்குப் போறே?" ஏமாற்றம் தொனிக்கும் குரலில் அவள் கேட்டாள்.

"எங்கெங்கியோ. சீர்காழி, சிதம்பரம், கங்கை கொண்ட சோழபுரம், தஞ்சாவூர்... இன்னும் நிறைய ப்ளேஸஸ்."

"நிஜமாவே முடிவு பண்ணிட்டியா?" அவளுக்கு அழுகையே வந்துவிடும் போலிருந்தது.

"என்ன கேக்கறே நீ? கண்டிப்பா எல்லாரும் வரணும்னு ஸ்கூல்ல சொல்லிட்டாங்க. போன வாரமே பணம் கட்டிட்டேனே?"

"என்கிட்டே சொல்லவேயில்லையே நீ?"

"மறந்துட்டேன்" என்றான் ஜக்கு.

"இன்னிக்கா கிளம்பறே?"

நாளைக்கு காலைல. ஏர்லி மார்னிங் பஸ் வந்துடும். மொத்தம் ரெண்டு பஸ். ஹண்ட்ரட் ஸ்டூடண்ட்ஸ்."

"அப்ப உன் வெங்கடாஜலபதி?" என்றாள் குட்டி.

"தாத்தா பார்த்துக்கறேன்னு சொல்லியிருக்கார்" என்றவன், சற்று நிறுத்திவிட்டு, மெதுவாக 'விக்கியை மட்டும் கூட்டிண்டு போறேன் ரகசியமா" என்றான்.

அழுகையும் ஆத்திரமுமாகப் பீறிட்டு வந்தது குட்டிக்கு.

(தொடரும்)

# திருப்பதியில் ஹெலிகாப்டர் தளம்?

சந்திரபாபு நாயுடுவை நக்ஸலைட்டுகள் தாக்கியதையடுத்து, திருப்பதியில் ஒரு சர்ச்சை கிளம்பியிருக்கிறது. மலைப் பாதையில் நூறு சதவிகித பாதுகாப்பு என்பது நிச்சயமில்லாத சூழ்நிலையில், கோவிலுக்கு வரும் வி.வி.ஐ.பி.களைத் திருமலைக்கு அழைத்துச் செல்வதற்கு வசதியாக மலை மீது, ஹெலிகாப்டர் தளம் அமைக்கலாமா? கூடாதா? என்பதே இப்போதைய சர்ச்சை.

விபத்து நடந்த ஸ்பாட்டுக்குச் சென்று, பார்வையிட்ட ஆந்திர உள்துறை அமைச்சர் தேவேந்திர கௌரு, வி.வி.ஐ.பி.களின் பாதுகாப்புக்காக, மலை மீது ஒரு ஹெலிகாப்டர் தளம் அமைப்பதற்கான வாய்ப்புகளை அரசு பரிசீலிக்கும் என்று கூறினார். இதைச் சொன்ன கையோடு, "இது குறித்து மாநில அரசு தன்னிச்சையான முடிவு எடுக்காது. திருமலை - திருப்பதி தேவஸ்தான நிர்வாகிகளுடன் கலந்து - ஆலோசித்து இறுதி முடிவு எடுக்கப்படும்" என்றும் எச்சரிக்கை உணர்வுடன் கூறினார்.





நடைமுறைச் சூழ்நிலையின் அடிப்படையில், 'இது நல்ல முடிவுதான்' என்று ஒரு தரப்பினர் இம் முடிவை வரவேற்கிறார்கள். ஆனால் கோவிலைச் சேர்ந்த ஆகம சாஸ்திர பண்டிதர்கள் 'திருமலையில் ஹெலிகாப்டர் தளம் அமைப்பது ஆகம விதிகளுக்குப் புறம்பானது' என்று எதிர்ப்புத் தெரிவிக்கிறார்கள். இது போன்ற ஒரு திட்டத்தை 1976ல் மத்திய அரசு திருமலையில் செயல்படுத்த முயற்சி செய்தது. அப்போதும், ஆகம சாஸ்திர பண்டிதர்களின் எதிர்ப்பு காரணமாக, மத்திய அரசு ஹெலிகாப்டர் தளம் அமைக்கும் எண்ணத்தைக் கைவிட்டது" என்கிறார்கள்.

திருமலையில், எழுந்தருளியுள்ள வெங்கடேச பெருமானுக்கு மேலாகப் பறந்து வந்து, இறங்கி, பெருமாளைத் தரிசிப்பது சரியல்ல என்றும் இவர்கள் வாதிடுகிறார்கள்.

இது ஒரு புறம் இருக்க, திருப்பதியிலிருந்து, திருமலைக்கு, சாலை வழியைத் தவிர பக்தர்கள் போய் வர வசதியாக கயிற்று வழி (ரோப் வே) அமைக்கும் ஒரு திட்டமும் வெகு காலமாக இருந்து வருகிறது. ஆனால் இதற்குத் திருப்பதி - தேவஸ்தானம் அனுமதி மறுத்து வருகிறது. திருப்பதி - திருமலை கயிற்று வழி அமைக்கப்பட்டால், திருமலைக்குச் சுற்றுலாப் பயணிகளாக வருகிறவர்கள் எண்ணிக்கை அதிகரித்து விடும். இது மலையின் புனிதத்துவத்தைக் கெடுத்து விடும் என்று தங்களின் நிலைப்பாட்டுக்குக் காரணம் சொல்கிறார்கள்.

- கௌதம் ராம்

# இதற்கும் ஒரு டிசைனர்!

இதற்கெல்லாமா டிசைனர் இருப்பார்கள்? என்று கேட்காதீர்கள்.

''புடைவை, நகை, வீடு, ரங்கோலி, மெஹந்தி... என பல துறைகளில் அதற்கென வடிவமைப்பாளர்கள் இருப்பது மாதிரிதான் 'பயோ-டேட்டா டிஸைனிங்'கும்'' என்கிறார் பெங்களூரிலிருக்கும் உமாமணி. இந்தியா விலேயே இவர் ஒருவர்தான் மேற்கூறிய பணியைச் சிறப்பாகச் செய்பவர் என்ற பாராட்டையும் பரவலாகப் பெற்றிருக்கிறார்.

''எனக்கு ஹெச்.ஆர். துறையில் பல வரு டங்கள் வேலை பார்த்த அனுபவம் உண்டு. கூடவே ஒவ்வொரு வருடமும் கேம்பஸ் இன்டர்வ்யூ என்று கல்லூரிகளுக்குச் சென்று மாணவர்களை நேர்முகத் தேர்வு செய்வதும் உண்டு. இதில் நான் பார்த்த வரை, பலர் பயோ டேட்டா சரிவர எழுது வதில்லை. தன்னிடமிருக்கும் திறமைகளை, செய்த சாதனைகளைப் பற்றிச் சொல்லுவ தில்லை. ஒருத்தருக்குப் பல வருட அனு பவம் இருக்கும். வேலையை மாற்ற நினைக் கும்போது என்னிடம் வருவார். குறைந்தது மூன்று சிட்டிங் பேச்சுவார்த்தை எங்களுக் குள் நடக்கும். வெறும் தன் பெயர், முகவரி, வயது, கல்வி இதைக் கொட்டை கொட்டை யாக எழுதி, பிறகு அனுபவம் என்று இரண்டு மூன்று கம்பெனிகளில் வேலை பார்த்ததை எழுதினால் ஆயிற்று என்று தவ றாக எடை போடுகிறார்கள். உங்களுடைய பர்ஸனாலிட்டி வெளிப்படுவது பயோ - டேட்டாவின் மூலமாகத்தான், என்பதை மறக்காதீர்கள். நான் டிஸைன் செய்யும் போது எல்லா விவரங்களையும் கேட்டு, பிறகு வாழ்க்கையில் உங்கள் லட்சியம், குறிக்கோள் என்ன வென்பதையும் கேட்பேன். அனுபவஸ்தராக இருந்தால் பணிக் காலத்தில் அவர் புதிய தாக ஏதேனும் திட்டம் அமல் படுத்தியிருக்கிறாரா, குழுவிற்குத் தலைமை தாங்கியிருக் கிறாரா, தேக்க நிலை யில் இருந்த வேலையை முழு மூச்சாக முடித்திருக்கிறாரா?... போன்ற விவ ரங்களைக் கோர்வையாக, சுவையாக எழு தித் தருவேன். மாணவர்களாக இருந்தால் ப்ராஜக்ட் வொர்க் பற்றி கண்டிப்பாக எழுத வேண்டும். உங்களை நீங்கள் விளம்பரப் படுத்துவது பயோ-டேட்டா மூலமாக...'' நீளமாகச் சொல்கிறார் உமா.



''கச்சிதமாக எழுதப்படும் பயோ-டேட்டா மூலம் நேர்முகத் தேர்வுக்கான அழைப்பு உடனே வருகிறது. நேர்முகத் தேர் வில் முதல் சில நிமிடங்கள் மிக முக்கிய மானவை. உங்கள் தோற்றம், குரல், பாடி லாங் வேஜ், தன்னம்பிக்கை, வாக்குச் சாதுர்யம், வேலைக்குண்டான ஆர்வம்... என, பல விதத்திலும் கண்காணிக்கப்படும். நெர் வஸாக இருந்து பிரயோசனமில்லை. அதற் காக எல்லாம் தெரிந்த மாதிரி ஆணவமாக வும் செயல்பட வேண்டாம். அவர்கள் கேட் டிருக்கும் வேலைக்குப் பொருத்தமான ஆள் நான் தான் என பாஸிட்டிவாக நினைக்கவும். வெற்றிக்கு உதவும்.'' டிப்ஸ் தருகிறார் உமா.

இதுவரை சுமார் ஆயிரத்தி ஐந்நூறு பேர்களுக்கு பயோ டேட்டா தயார் செய்து கொடுத்திருக்கிறார் உமா. ரிடையர் ஆனவர்கள் கூட பயோ டேட்டா தயார் செய்து கொண்டு போகிறார்களாம் - கன்ஸல்டன்டாக வேலை வாய்ப்புத் தேட!

கட்டுரை, படம் : லதா சேகர்

● டி. சுப்ரமணியன், மேலையூர்

*? அமெரிக்காவின் கலிஃபோர்னியா மாநில கவர்னராகியிருக்கும் ஆக்ஷன் ஹீரோ ஆர்னால்ட் குறித்து..?*

! அவர் மீது சுமத்தப்பட்ட தரக்குறைவான குற்றச்சாட்டுகள் அவருக்கு வெகுவாக வோட்டுக்களை அதிகரிக்க உதவியுள்ளன. மணி சங்கர் அய்யர் கவலைப்பாரா?

● ஏ. சுகுமார், காட்பாடி

*? பிரதமர் அடிக்கடி வெளிநாட்டுச் சுற்றுப் பயணம் மேற்கொள்வது பற்றி 'முணுமுணுப்பு' அதிகமாகி உள்ளதே..?*



* மனிதாபிமானி!

# கலாமின் பிரார்த்தனை குறித்து...?

! பிரதமரின் அயல்நாட்டுப் பயணங்களுக்கும் சில்லரை தேவவதைகளின் அயல்நாட்டு ஜமாவுக்கும் வித்தியாசம் உண்டு. அயல் நாட்டு விவகாரங்களில்தான் பிரதமர் எக்ஸ்பர்ட். பலன்களைப் பற்றிச் சிந்தித்தால் முணுமுணுப்பு இராது.

● ஷோபியாப்ரியன், பூனாம்பாளையம் ★

*? எந்த கட்சி ஆட்சிக்கு வந்தால் காவிரியில் தண்ணீர் வரும்...?*

! 'வாழு, வாழ விடு' என்கிற எந்தக் கட்சி வந்தாலும் காவிரியில் தண்ணீர் வரும். ஆனால், அப்படியொரு கட்சி இந்தியாவில் இல்லையே!

● சாந்தி கல்யாண், ஈரோடு - 2

*? தி.மு.க. - பா.ஜ.க. கூட்டணி என்பது கடவுளைப் போல; உண்டு என்றால் உண்டு. இல்லை என்றால் இல்லை என்கிறாரே இல. கணேசன். ஏதாவது புரிகிறதா...?*

! தாராளமாய்ப் புரிகிறது. இல. கணேசனுக்கு இந்தக் கூட்டணி இல்லை. ஆனால், மத்திய பா.ஜ.க. தலைமைக்குத் தேவை, அதனால் உண்டு.

* கடவுள் உதாரணம்!

● ஆர். மாதவராமன், கிருஷ்ணகிரி - 1

*? திருப்பதி குண்டு வெடிப்பு விசாரணையைத் தனியார் புலனாய்விடம் ஒப்படைக்கப் போகிறதாமே ஆந்திர அரசு...?*

! குண்டு வெடிப்பு எப்படி நேர்ந்தது; யாரால், என்பதை ஆராய வேண்டியதுதான். ஆனால், அதைவிட அதன் காரணம் என்ன என்று ஆராய்ந்து பார்த்து நடவடிக்கை எடுப்பது முக்கியம்.

● கார்த்திக் அமர்த்யா, மயிலாடுதுறை ❒

*? அமெரிக்காவில் ஏழைகளின் எண்ணிக்கை பதினேழு லட்சமாக உயர்வு என்ற செய்தியைக் கண்டு ஆறுதல் அடையலாமா?*

! அமெரிக்க மக்களிடம் அனுதாபமும் அமெரிக்க அரசின் போக்கு குறித்து கலவரமும் கொள்ளலாம். அமெரிக்க அரசின் ஆஃப்கன், ஈராக் யுத்தச் செலவுகளே இதற்கு முக்கியக் காரணம்.

● ராதா ராமஸ்வாமி, திருநெல்வேலி

*? 98 பேர் கொண்ட அமைச்சரவையை உருவாக்கிய முலாயம், அநாவசியச் செலவுகளைக் குறைப்பேன் என்கிறாரே..?*

! இந்த ஜோக்கோடு போட்டி போடக் கூடிய இன்னொரு தமாஷ் : பீஹார் அமைச்சர்களின் ஊழல் தாங்கவில்லை; எனவே அடுத்த தேர்தலுக்குப் பிறகு நான் முதல்வராகப் பொறுப்பேற்க மாட்டேன்' என்று ராப்ரி கடிந்துகொள்ள, 'கவலைப்படாதீர்கள், அவர் மனம் நொந்து பேசுகிறார். அப்படியொன்றும் தடாலடியாக நான் அவளை டைவோர்ஸ்





* அயலுறவு நிபுணர்!



• நகைச்சுவைப்...

• ... போட்டி!

செய்துவிட மாட்டேன்' என்கிறார் லாலு!

● கே.வி.கே.ரகுபதி, மேல்மங்கலம்

***? ஜனாதிபதி, மரபுகளை உடைத்து சந்திரபாபு நாயுடுவைச் சந்தித்தது சரியா..?***

! கலாம், மரபு அபிமானிதான், ஆனால், அதைக் காட்டிலும் மனிதாபிமானி.

● ரேவதிப்ரியன், ஈரோடு - 1

***? மணல் குவாரிகளை அரசே தன் வசப்படுத்திக் கொண்டது பற்றி...?***

! செய்வதைத் திருந்தச் செய்யாமல், வழக்கம் போல் அள்ளித் தெளித்த அவசரக் கோலம். அதனால் நீதி மன்றத் தடைக்கு இடம் தந்துவிட்டது. கட்டடப் பணிகள் முடங்கி, முதலீடு முடங்கி, பொருளாதாரம் தேங்கி... டு பேட்!

● ஸ்ரீ வித்யா காளிதாஸ், சிதம்பரம் - 2

***? அயோத்தியில் பேரணியைத் தடை செய்தால் கடும் விளைவுகள் ஏற்படும் என அசோக் சிங்கால் எச்சரித்துள்ளாரே...?***

! அது நாம் எப்போதும் கேட்கும் அச்சுறுத்தல்தான். வி.எச்.பி. யோசித்துக் கால விரயம் செய்தால் சிவசேனா அப்பணியைச் செய்துகாட்டும் என்று அதன் தலைமை சவால் விட்டிருப்பதுதான் புதிய வெடிகுண்டு!

● ஆடுதுறை கோ. ராமதாஸன், தஞ்சாவூர்

***? தமிழக அரசு வழங்கும் கலைமாமணி விருது பற்றி...?***

! ஏற்கெனவே அது கண்டல் வினியோக மாகத் தான் இருந்து வந்தது. இப்போது மூன்று வருடத்துப் பழைய கண்டலை வினியோகித்துப் புண்ணியம் கட்டிக் கொண்டிருக்கிறார்கள். பெறுகிறவர்கள் உயர்ந்த கலைஞர்களாயினும் இதனால் சிறுமைப் பட்டுத்தான் போவார்கள்.

● எஸ்.முரளி, குறிஞ்சிப்பாடி

***? 'தனி மனிதரை விட தேசமே மிகவும் முக்கியம் என்ற எண்ணத்தை மக்கள் மனங்களிலும் தலைவர்கள் மனங்களிலும் மலரச் செய்வாயாக..!' - ஸ்ரீ பெரும்புதூரில் அப்துல் கலாம் விடுத்த இந்தப் பிரார்த்தனை குறித்து...?***

! ஏதோ கடவுளுக்கு விடுக்கப்பட்ட பிரார்த்தனையாக எண்ணாமல் தலைவர்களுக்கும் மக்களுக்கும் ஜனாதிபதி விடுக்கும் பிரார்த்தனையாக ஒவ்வொருவரும் கருத வேண்டும்.

● பி. ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி

***? "மனுவாதிகள் பிராமணவாதிகள், தலித் விரோதிகளுடன் நான் ஒத்துப் போகவில்லை... அதற்காக அரசியல் பழி தீர்ப்பதற்காக என் மீது சி.பி.ஐ.யை ஏவி விட்டிருக்கிறார்கள்..." என்று உ.பி. முன்னாள் முதல்வர் மாயாவதி குற்றம் சாட்டியுள்ளாரே...?***

! இந்த நாட்டில் லஞ்ச - ஊழல் மட்டுமே ஜாதி-மத வேற்றுமைகளுக்கு அப்பாற்பட்டது; மற்ற எல்லாவற்றிலும் ஜாதி புகுந்து விளையாடும் என்பதை மறுபடி நிரூபித்திருக்கிறார்.

ரூ.100 பரிசு பெறுபவர் :
**கார்த்திக் அமர்த்யா,**
31/79, செட்டித் தெரு,
மயிலாடுதுறை - 609 001.

★ ரூ.50 பரிசு
பெறுபவர் :
**ஷோபியாப்ரியன்,**
1/4, பூனாம்பாளையம் அஞ்சல்,
திருச்சி மாவட்டம்
- 621 009.

# குறையொன்றுமில்லை

இரண்டு, மூன்று, ஏழு எட்டாகவும் பரமாத்மா இருக்கிறான் என்று சொன்னேன். இரண்டு என்பது என்னவென்றால், ஒன்று ஞானம், மற்றது வைராக்கியம். இது இரண்டும் நமக்கு சித்திக்க வேண்டும்.

ஞானம் - பகவானைக் குறித்த சிறந்த ஞானத்தை நாம் சம்பாதிக்க வேண்டும். அதற்காக அந்த சதாசார்யனை நாம் உபாஸிக்க வேண்டும்.

சாந்தோக்ய உபநிஷத் என்ன சொல்கிறது... பிரம்மத்தை உபாஸிக்கக்கூடிய உத்தம ஞானவான்களிடத்திலே போய் நாம் அடி பணிய வேண்டும் என்கிறது. அவர்கள் இருக்கும் இடத்துக்கு நாம் போக வேண்டும். எப்படிப் போக வேண்டும்...? கையிலே தர்பம், ஸமித்து எடுத்துக் கொண்டு போக வேண்டும். அது மாத்திரம் இல்லை, குவித்த கரத்துடன் அஞ்சலி பண்ணிக்கொண்டு அங்கே போய், 'எனக்கு நல்ல ஞானத்தை நீங்கள் கொடுக்க வேண்டும்..' என்று பிரார்த்திக்க வேண்டும். உயர்ந்த ஞானத்தை நம் மனத்திலே ஏற்றி வைப்பார்கள் ஆசார்யர்கள். ஞான தீபேன பாஸ்வதா! ஞான தீபம் என்பது பிரகாசிக்கும். அப்படிப்பட்ட மகான்களுக்கு நாம் என்ன கைம்மாறு செய்ய முடியும்? சுவாமி தேசிகன் அழகாகச் சொல்கிறார்.

அந்த ஆசார்யர்கள் பண்ணிய உபகாரத்துக்குப் பிரத்யுபகாரம் நாம் பண்ண முடியுமா? எது நாம் பண்ணினாலும் அவர்களிடமிருந்து நாம் பெற்றதற்கு அது ஈடாகாது. ஒரு மனிதன் உத்தம நிலையை அடைய வேண்டுமானால், ஆசார்ய அனுக்ரஹம் இருந்தால்தான் அடைய முடியும்.

குரு என்கிற சப்தம் எதைக் காட்டுகிறது? கு என்றால் இருட்டு என்று அர்த்தம். ரு என்றால் வெளிச்சம்.

அஞ்ஞானமாகிற இருள் சூழ்ந்தவர்களாக நாம் அவர்களிடம் போகிறோம். அவர்கள் இந்த இருளை மாய்க்கிறார்கள்.

வேதம் என்பது பெரிய திருமாளிகை. இருட்டு... இருட்டு நிரம்பிய திருமாளிகை; பெரிய பவனம் அது. அதிலே எங்கே நுழைந்தாலும், எங்கே கொண்டு போய் விட்டுவிடுமோ என்று தெரியாது. உள்ளே நுழைவதற்கே பயமாக இருக்கிறது! அப்போது பரமாச்சார்யனான பரமாத்மாதான் வழி காட்டுகிறான்.

'கிருஷ்ணம் வந்தே ஜகத்குரும்' என்று ஜகத்துக்கெல்லாம் குரு அல்லவா அவன்! அவர் என்ன பண்ணினார்? அந்தத் திருமாளிகை எல்லோருக்கும் தெரிய வேண்டும் என்பதற்காக, பகவத்கீதை என்கிற விளக்கை அத்திருமாளிகையிலே ஏற்றி வைத்தான். அப்படி அவன் ஏற்றி வைத்த பிறகு, வேதார்த்தங்கள் எல்லாம் நமக்குப் புரிகின்றன. பகவான் ஆசார்யனாக இருந்து இதைப் பண்ணுகிறான்.

சுவாமி தேசிகன் இந்த ஆசார்ய குணத்தை தயா சதகத்திலே கொண்டாடுகிறார். அந்த திருவேங்கடமுடையானுடைய தயையே பகவத் கீதைக்குக் காரணம் என்கிறார். வாசுதேவனாக அவன் அவதாரம் பண்ணி இந்த தீபத்தை ஏற்றி வைத்தான். உலகத்திலே இருக்கிற இருள் அனைத்தும் மாய்ந்தது.

ஆசார்யர் அனுக்ரஹத்தினாலேதான் சிறந்த ஞானத்தை நாம் பெற முடியும் ஆனதனாலே, அப்படிப்பட்ட ஆசார்யார் அனுக்ரஹத்தை நாம் முதலில் நல்ல முறையிலே சம்பாதித்துக் கொள்ள வேண்டும்.

ஞானத்தினால்தான் வைராக்கியம் நமக்குச் சித்திக்கும். சுலபமாக வந்து விடாது வைராக்கியம். எல்லாம் போன பிற்பாடு வருவது அல்ல வைராக்கியம்.

ஒருத்தருக்கு எல்லாமே போய்விட்டது... ஒன்றும் முடியவில்லை. எதற்கும் முடியாமல் போகிறபோது வருகிற வெறுப்பு, வைராக்கியம் அல்ல.

கையிலே எல்லாம் கிடைக்கிறபோது அதை அப்படியே விட்டுக் கொடுக்க, விட்டுப் பிரிய முடிவதுதான் வைராக்கியம்.

தாயுரை கொண்டு தாதை உதவிய
தரணி தன்னைத்
தீவினை என்ன நீத்துச் சிந்தனை
முகத்தில் தேக்கிப்
போயினை என்ற போழ்து, புகழினோய்
தன்மை கண்டால்

ஆயிரம் இராமர் நின்கேழ் ஆவரோ,
தெரியின் அம்மா!''

- கம்பராமாயணத்திலே குகன் சொல்கிறான் பாருங்கள்... பரதனுடைய பிரபாவத்தை பற்றி..



ஆயிரம் ராமனைக் கொண்டு வந்தாலும் ஒரு பரதனுக்கு ஈடாக முடியுமா...? என்று கேட்கிறார்.

'தீவினை என்ன நீத்து' - அவ்வளவு ஐச்வர்யத்தையும் துரும்புக்குச் சமானமாக மதித்தானே... அத்தனையும் இருந்தும் சிறிதும் பற்றில்லையே அவனுக்கு. எல்லாம் கிடைத்துக் கொண்டிருக்கிறபோதே விட்டானே!

முக்கூர் அழகிய சிங்கர் அழகாகச் சொல்கிறார். அவர் மன்னார்குடியில் எழுந்தருளியிருந்தபோது, ஸ்ரீஜயந்தி சமயம்..

பகவானுக்கு உப்புச் சீடை, வெல்லச் சீடை என்று ஏகப்பட்ட பதார்த்தங்கள் பண்ணிக் கொண்டிருக்கிறார்கள்... அங்கேயிருந்து ஒருத்தர் வந்தார். 'எனக்கு சீடைன்னாலே பிடிக்காது..' என்றார்.

'என்ன அக்கிரமமா இருக்கே! பகவான் அவ்வளவு விரும்பிச் சாப்பிடுகிறான். ஒவ்வொரு கிருஹத்திலும் சீடை உருட்டுகிற அழகைப் பார்க்க வேண்டாமா?... என்ன அழகாக உருட்டுகிறார்கள் அவர்கள்! பகவான் நம் கிருஹத்துக்குத்தான் முதலில் வரப் போகிறான், வரப் போகிறான் என்று அவ்வளவு விசேஷமாக உருட்டுகிறார்கள்... அந்தச் சீடையைப் போய்ப் பிடிக்காது என்கிறீரே...?''

''ஒரு காலத்தில் பிடித்தது. இப்போ பிடிக்கவில்லை'' என்று பதில் சொன்னார்.

"ஏன் பிடிக்கவில்லை?''

''இப்போது பற்களே இல்லையே! நான் என்ன பண்ணுவேன்!''

பல் இல்லாததால் பிடிக்கவில்லை என்பது ஒரு சிறப்பா!

"இதர விஷயங்களெல்லாம் இத்தனை நாட்களாகப் பார்த்துக் கொண்டிருந்தேன். இப்போது பார்க்கப் பிடிக்கவில்லை. கண்

இல்லை. அதனால் பார்க்கவே பிடிக்க வில்லை.''

"வீணான விஷயங்களெல்லாம் நிறையக் கேட்டுக் கொண்டிருந்தேன். இப்போது கேட்கப் பிடிக்கவில்லை. ஏனென்றால் காது கேட்கவில்லை. அதனால் கேட்கப் பிடிக்கவில்லை...''

இப்படி, எல்லாம் போய்விட்ட பிறகு வைராக்கியம் வந்து என்ன பயன்? எல்லாம் நன்றாக இருக்கிறபோதல்லவா வைரக்கியம் வர வேண்டும்?!

எல்லாமே கைக்குக் கிடைக்கிறபோது வருவதுதான் வைராக்கியமேயொழிய, எல்லாம் போன பிற்பாடு வைராக்கியம் வந்ததென்றால், அது பிரயோஜனமில்லை.

ஆகவே, ஞான - வைராக்கியம் என்பது இரண்டு - இந்த இரண்டும் அவன் அருள் இருந்தால்தான் வரும்.



மூன்று என்பது எதைக் குறிக்கிறது...?

பர பக்தி, பர ஞானம், பரம பக்தி என்று ஆசார்யர்கள் வியாக்யானம் பண்ணி யிருக்கிறார்கள். பெரியவாச்சான் பிள்ளை வியாக்யானத்தை இங்கே அழகாக எடுத்துக் காண்பிக்கிறார். பர பக்தி: பரே பக்தி: எம் பெருமானிடத்திலே விசேஷமான பக்தி அசஞ்சல பக்தி இருக்க வேண்டும். அவன் நம்மைக் கைவிட்டுவிடுவானா என்ன! என்கிற திடமான பக்தி!

ஒரு யானைக்கு இருந்ததே அந்த பக்தி! யானை கூப்பிடுகிறது; ஆபத்து என்றதும் ஸ்ரீமன் நாராயணனைத்தான் கூப்பிடுகிறது.

நாராயண பட்டத்திரி இதை மிக அழ காகச் சொல்கிறார். ஸ்ரீமத் பாகவதத்திலே அறுபத்திரண்டு சுலோகங்களில் சொன்ன கஜேந்திர மோக்ஷ சரித்திரத்தை, பத்து சுலோகங்களிலே, சுலபமாக அழகாக எடுத்துச் சொல்லி விடுகிறார். எம் பெரு மானின் திருக்கல்யாண குணங்களை மிக உன்னதமாகச் சொல்கிறார்.

'ஒரு பிராணி - அந்த யானை கஜேந் திரன், அது ஸ்தோத்திரம் பண்ணுகிறது. அதைக் கேட்டுக் கொண்டு எல்லா தேவதைகளும் நாங்கள் பொருட்டல்ல என்று பேசாதிருக்கிறார்கள் - ஹே குரு வாயூரப்பா! சர்வாந்தர்யாமியான நீயல்லவா அங்கே நேரே வந்தாய். முதலையின் பிடியிலிருந்து அந்த கஜேந்திரன் விடு பட்டான். கந்தர்வ லோகத்தை அடைந் தான். உலகத்தின் முழுமுதற் காரணம் எது என்பதை, அந்த யானையல்லவா காட்டிக் கொடுத்தது!

யானைக்கிருக்கிற அறிவு நமக்கு வேண்டாமா...? பராசர பட்டர் ஸ்ரீ ரங்க ராஜ ஸ்தவத்தில் சொல்கிறார்: 'யானைக்கு நீ அருள் செய்ததற்காக உனக்கு வணக்க மில்லை...'

பின் எதற்காக நமஸ்காரம்?

'நீ ஓடி வந்த வேகத்துக்கு நமஸ்காரம்!'' என்கிறார் பராசர பட்டர்!

அப்படியொரு வேகமாக எம்பெருமான் எழுந்தருளினான்.

மஹாலக்ஷ்மியோடு வைகுண்டத்தில் உட்கார்ந்திருக்கிறான் பரமாத்மா. அவள் முந்தானையும் அவன் மேல் அங்கவஸ்திர மும் முடித்துப் போடப்பட்டுள்ளன. இரண்டு பேரும் விளையாடிக் கொண் டிருக்கிறார்கள்.

அங்கேயுமா விளையாட்டு? என்று கேட்பீர்கள்...

ஆமாம். அங்கேயும்தான் விளையாட்டு! என்ன விளையாட்டு?... சதுரங்கம்!

இந்திர பதவியில் இருக்கிறவனை மெள்ளத் தூக்குகிறான் பகவான். தூக்கி, அங்கேயிருந்து நரகத்திலே போயப் போகிறான்.

மஹாலக்ஷ்மி கெட்டியாக அவன் கையைப் பிடித்துக் கொண்டுவிட்டாள். "இத்தனை நாட்களாக இவ்வளவு போகங் களை அனுபவித்துக் கொண்டிருந்தானே...

அவனைக் கொண்டு போய் அங்கே நரகத்திலே தள்ளுகிறீர்களே, இது நியாயமா...? சிரமப்படுவானே..!" என்கிறாள்.

"அதற்கு நாம் என்ன பண்ணுவது? இத்தனை நாளாக புண்யத்தினுடைய பலனை அனுபவித்துக் கொண்டிருந்தான், இனிமேல் அவன் பாபத்தினுடைய பயனை அனுபவிக்க வேண்டும். அதற்காகத் தள்ளுகிறேன்!"

"இவன் எவ்வளவு புண்ணியம் பண்ணியிருக்கிறான்...?" மஹாலக்ஷ்மி கேட்கிறாள்.

"அறுபது பங்கு புண்ணியம் பண்ணியிருக்கிறான்!"

"எவ்வளவு பாபம் பண்ணியிருக்கிறான்...?"

"நாற்பது பங்கு" என்றான் பகவான்.

"அறுபது பங்கு புண்ணியம், நாற்பது பங்கு பாபம் என்றால், அறுபதில் நாற்பதைக் கழித்து விடுங்களேன் சுவாமி. இருபது பங்கு புண்ணியமே அதிகமாய் இருக்கிறது. அதனால் அவனை நரகத்திலே தள்ள வேண்டாம்" என்றாள்.

"என்ன, சாஸ்திரம் தெரியாமல் பேசுகிறாயே! மஹாலக்ஷ்மி, நீ இப்படிப் பேசலாமா...? புண்ணியத்திலிருந்து பாவத்தைக் கழிப்பதாவது! கிடையவே கிடையாதே: அந்த மாதிரி கழித்தல் கணக்கெல்லாம் பூலோகத்தில்தான் உண்டேயொழிய, நமக்குக் கிடையாது" என்று சொல்லிவிட்டான் பகவான்.

இங்கென்ன கணக்கு...? அறுபது பங்கு புண்ணியத்துக்கு உண்டான பலனையும் அனுபவிக்க வேண்டும். நாற்பது பங்கு பாவத்துக்கு உண்டான பலனையும் அனுபவிக்க வேண்டும்.

இந்த இரண்டையுமே கழிக்கிற வாய்ப்பாடு ஒன்று உண்டு... அவன் திருவடியைப் பற்றினால், இரண்டுமே ஒழியும். இது நாம் தெரிந்து கொள்ள வேண்டிய கணக்கு.

அங்கே வைகுண்டத்திலே இரண்டு பேருக்கும் தர்க்கம், சண்டை!

தோற்றுப் போகிறவர் சதுரங்க ஆட்டத்தை விட்டு ஓடிப் போகக் கூடாது என்று ஒப்பந்தம். அதனால் முடிச்சுப் போட்டுக் கொண்டு உட்கார்ந்திருக்கிறார்கள். அந்த சமயத்திலேதான் யானை கத்தியது. உடனே பரமாத்மா என்ன பண்ணினான்... எழுந்து திடீரென்று ஓடினான். ரொம்ப அழகாகச் சொல்கிறார் நாராயண பட்டாத்ரி. முடிச்சை அவிழ்க்காமலே அவன் ஓட, மஹாலக்ஷ்மி பின்னாலேயே ஓடுகிறாள்.

"சுவாமி, எங்கே போகிறீர்கள்...?" என்று கேட்டால், பதில் சொன்னால்தானே? ஓடிக் கொண்டே பின்னாலே போகிறாள். அப்போது கருடத்மான் கருடன். எதிரே வருகிறான். அவன் மேலே ஏறி உட்கார்ந்து கொள்கிறார். சங்க - சக்ராதிகள் தாமே வந்து கையில் ஏறிக் கொண்டுவிட்டன! முடிச்சை அவிழ்க்காததால் மஹாலக்ஷ்மியும் கூடவே தொங்கலாடியபடி ஏறி வருகிறாள்.

அவ்வளவு வேகமாக வரும் எம்பெருமான், 'சென்று நின்று ஆழி தொட்டான்' என்கிறார் திருமங்கையாழ்வார், ஆழியை - சக்கரத்தை - அவன் எடுத்து விடுகிற நேரம்கூட அதிகமாகி விடும் என்பதால், அதைத் தொட்டான், அவ்வளவே. சுதர்ஷன ஆழ்வார் சொந்த முயற்சியிலே போனால், எங்கே தாமதப்படுத்தி விடுவாரோ என்று சந்தேகம் வந்துவிட்டதாம் பகவானுக்கு. ஆதலால் தொட்ட வேகத்திலேயே அவன் சக்கரம் போய் முதலையை சம்ஹரித்ததாம்!

அப்படி ஒரு பிராணியை ரக்ஷிப்பதற்காக ஓடி வந்தானே, அதை நினைவிலே கொள்ள வேண்டாமா...? மற்றதிலே பற்றை விட்டு, அவன் திருவடியைப் பற்ற வேண்டாமா!

(வளரும்)

## அமரர் கல்கி நினைவு இளமைச் சிறுகதைப் போட்டியில் பிரசுரத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட சிறுகதை

# பின் விளைவுகள்

திருவரங்கம் இசைப்பித்தன்

மிகுந்த தயக்கத்தோடு முரளி ஜெயிலரைக் கேட்டான்.

"அந்த லெட்டரை அனுப்பிட்டீங்களா...?"

புருவத்தைச் சுருக்கிய ஜெயிலர், "எந்த லெட்டர்" என்று ஆரம்பித்தார்.

கடிதமே அவருக்கு மனப்பாடமாகி இருந்தது போலும். தெரியவில்லை. என் புத்தியை என் பெற்றோர் மழுங்கடித்தார்கள் என்றே வைத்துக் கொண்டாலும் இப்படி எடுப்பார் கைப்பிள்ளையாக இருந்தது தப்புதான். ஈவு இரக்கமில்லாமல் நாங்கள் நடந்து கொண்டதற்கு உனது எதிர்நடவடிக்கை மிகச் சரி. இந்தக் குறுகிய காலத்தில் எனக்கு நேர்ந்த அவமானங்கள் சரியான தண்டனைதான். இன்னும் வழக்கு முடிந்து வழங்கப் போகும் தண்டனைக்கும் தகுதியானவன்தான். எனக்கு உன் மீது கொஞ்சம்கூட கோபம் கிடையாது. உன்னால் என்னை மன்னிக்கவே முடியாது என்பதும் எனக்குப் புரிகிறது. எனவே என்னை மன்னித்து விடு என்று கேட்பதில் அர்த்தமில்லை..." என்று நிறுத்தினார். உடனே தொடர்ந்தார்.

"ப்யூட்டிஃபுல் லெட்டர்... அதான் மனப்பாடமாயிடுச்சு..."

"அது சரி ஸார்... கைதிகளான நாங்க வெளியுலகத்திற்கு நேரடியா எந்தக் கடிதமும் அனுப்ப முடியாது. நீங்க படிச்சுப் பார்த்துதான் அனுப்பறதா கூடாதான்னு முடிவெடுக்கணும்... அதான் கேக்கறேன். என்ன செஞ்சீங்க அந்த லெட்டரை?" என்றான் முரளி.

"அனுப்பிட்டேன். சந்தோஷமா?" என்ற ஜெயிலர்,

"நாளைக்கு அர்ச்சனாவுக்கு அந்த லெட்டர் போய்ச் சேர்ந்துடும். போதுமா?" என்றார்.

"போதும் ஸார். தாங்ஸ் ஸார்" என்ற முரளி கண் மூடி 'அர்ச்சனா' என்று உச்சரித்தான். அவன் மனது பழசை நினைக்கலாயிற்று.

முரளி அர்ச்சனாவைப் பெண் பார்த்து மணக்கச் சம்மதித்தான். அவன் தாயும் தந்தையும் அர்ச்சனாவின் அப்பாவிடம் ஒரு சின்ன பட்டியலை ஒப்புவித்தனர். அந்தப் பட்டியலின் மதிப்பு, அர்ச்சனாவின் குடும்பத்தின் சக்தியை மீறித்தான் இருந்தது. ஆனாலும் அவர்கள் அர்ச்சனாவை ஒரு நல்ல இடத்தில் கட்டிக் கொடுக்கப் போகிறோம் என்ற காரணத்தால் ஒப்புக்கொண்டனர். திருமண நாளன்று வெள்ளியில் ஒன்றும் தங்கத்தில் ஒன்றும் குறைய, மணமேடை வாக்குவாத மேடையாயிற்று.

அர்ச்சனாவின் அப்பாவும் அம்மாவும் அழாத குறையாக "ஒரு மாசத்துல கண்டிப்பா செஞ்சு குடுத்துடறோம்" என்றனர். "இப்படி எத்தனையோ பேர் சொல்லி ஏமாத்தியிருக்காங்க... நாங்க ஏமாற மாட்டோம்" எகிறினார் முரளியின் தந்தை.

மேடையில் அமர்ந்திருந்த அர்ச்சனா அருகிலிருந்த முரளியிடம் "ஓங்கப்பா, அம்மாகிட்ட நீங்க சொல்லக் கூடாதா...? இதென்ன நீங்க குடுத்து வெச்ச பொருட்களா...? நாங்க திருப்பித் தராம ஏமாத்திட்டோம்கறதுக்கு...? இப்ப கல்யாணத்தை நடத்த விடச் சொல்லுங்க. கடனோட கடனா நான் ரெண்டு ஐட்டத்தையும் வாங்கித் தரேன்..." என்று



சன்னமான குரலில் வேண்டிக் கேட்டுக் கொண்டாள்.

அது காதில் விழாதது போல முரளி அமர்ந்திருந்தான்.

இதற்குள் அர்ச்சனாவின் அப்பா "கொஞ்சம் பெரிய மனசு பண்ணுங்கோ சம்பந்தி" என்று முரளியின் தந்தை காலில் விழுந்தார்.

"அப்பா...!"

பொங்கி வெடிக்கும் எரிமலையாய் எழுந்தாள் அர்ச்சனா.

"என்ன நடக்கிறது என்று மற்றவர்கள் புரிந்து கொள்வதற்குள், விடுவிடு வென்று நடந்து தம்பியிடமிருந்து டி.வி.எஸ் வண்டிச் சாவியை அதட்

டிக் கேட்டு வாங்கினான். அடுத்த தெருவி லிருந்த அனைத்து மகளிர் காவல் நிலையத் திற்கு விரைந்தாள்.

அடுத்து நடந்த சம்பவங்கள் தொலைக் காட்சிக்கும் பத்திரிகைக்கும் பரபரப்பான செய்திகளாயின. காவலில் வைக்கப்பட்ட முரளி, தினமும் ஒரு சோதனையைச் சந்தித் தான்.

அவன் சஸ்பெண்ட் செய்யப்பட்டதாக சேதி ஒரு நாள். இன்னொரு நாள் அவன் நேசிக் கும் நண்பன் கன்னாபின்னாவென்று திட்டி விட்டுப் போனான். பிறகொரு நாள் சேங் ஷன் ஆகியிருந்த பேங்க் லோன் ரத்து செய்யப்பட்டதாகத் தகவல். இன் னும் அவன் வீட்டு முன் மகளிர் அணி ஆர்ப்பாட்டம், ஏதோ வொரு கவியரங்கத்தில் அவன் பெயரைக் குறிப் பிட்டே இகழ்ச்சியான பாடல்... ஒவ்வொரு நாளும் வேதனை தரும் நாளாகவே கழிந்தது. 'நான் ஏன் பெற்றோரிடம் வாதாடுவேன் என்று எவ்வளவு நம்பிக்கையோடு என்னிடம் முணு முணுத்தா... நான் கல்லு மாதிரி உக்காந்திருந் தேனே..' என்று புழுங்கினான். முரளியின் கண் முன் மணக் கோலத்தில் தன்னிடம் பேசிய அர்ச்சனா தொடர்ந்து தெரிந்து இம்சை செய்தாள்.

அவன் பெற்றோரும் தங்கள் செய்கைக்கு வெட்கிப் போய், மாய்ந்து மாய்ந்து புலம்புவ தாகக் கேள்விப்பட முரளியின் மன உளைச்சல் அதிகமானது. அர்ச்சனாவுக்கு ஒரு கடி தம் போட்டாலாவது மனபாரம் குறையாதா என்று தோன்ற, அப்படியே செய்தான் முரளி.

இரவு முழுவதும் சரியாகத் தூங்காததாலும் அவ்வப்போது அழுததாலும் அர்ச் சனாவின் கண்கள் இலேசாக உப்பிச் சிவந்திருந்தன.

"நேத்து நீ ரிசப்ஷனுக்குப் போகாம இருந்திருந்தா எவ்னோ நல்லாயிருந்திருக் கும்... என்னமோ பெஸ்ட் ஃப்ரெண்டோட குடும் பம்னு போனே..." என் றாள் அம்மா.



"நடந்து முடிந்ததைப் பேசி என்ன பிரயோ ஜனம்... இவ கல்யாணம் நின்ன நாள்ளேருந்து நாம படற பாடு கொஞ்சமா நஞ்சமா?" என்ற அப்பா, இஸ்திரி போட்ட சட்டையைத் தேடி எடுக்கும்வரை பேசாமலிருந்தார். சட்டையைப் போட்டவாறு பேசினார்.

"இன்னிக்கு உன்னைக் கூட்டிட்டுப் போக லாம்னுதான் இருந்தது... நேத்து மாதிரி ஏதாவது அமர்க்களம் ஆச்சுன்னா, எதுக்கு வம்பு; நாங்க மட்டும் போயிட்டு வந்துடறோம். ஒனக்காக நாங்களும் போகாம இருக்கலாம்தான். எத் தனையோ கடன் குடுத்து உதவியிருக்கான்.

போகலேன்னா 'என்ன ஓய், பேப்பர்ல பேரு வந்த பொண்ணைப் பெத்துட்டோம்கற தித்தாப்புல பழசை மறந்துட்டீரா... கல்யாணத்துக்கு வரலே'ன்னு நாலு பேர் முன்னால பட்டுனு கேட்பான். சோத்தை விடுவானேன்... சொல்லைக் கேட்பானேன்..." என்றார்.

அர்ச்சனாவின் திருமணம் நின்று போன முதல் சிலநாட்கள் பாராட்டுகள், புகழ் மாலைகள், பிரபல்யம் என தித்திப்பாகவே இருந்தன. பிறகு நிலைமை மாற ஆரம்பித்தது.

'அர்ச்சனா திருமணத்தை நிறுத்த வரதட்சணை காரணமல்ல. வேற்று மதத்தைச் சேர்ந்த ஒருவனுடன் அவளுக்கு இருந்த காதல்' என்று விஷமத்தனமாக ஒரு பத்திரிகை கிசுகிசு எழுத, அது பற்றி பகிரங்கமாக விசாரிக்க வந்தார்கள் சில நிருபர்கள்.

பஸ், டிப்பார்ட்மெண்டல் ஸ்டோர், கோவில் என்று எங்கு சென்றாலும் அவளை அடையாளம் கண்டு கொண்டு, அவளிடம் பேசித் தொணதொணக்கும் நபர்கள்.

உலகமே நரகமாயிற்று அர்ச்சனாவுக்கு. இதற்கெல்லாம் முத்தாய்ப்பு வைப்பது போல முந்தைய தினத்துச் சம்பவம்.

நிச்சயதார்த்தம் - கம் - ரிஸப்ஷன் நடக்கும் அந்த மண்டபத்தில் அர்ச்சனா நுழைந்தவுடனே, அத்தனைப் பேர் கண்களும் அவளை மொய்த்தன. அதைப் பொருட்படுத்தாமல் அவள் பெண் வீட்டார் கவனத்தை ஈர்க்கும் இடமொன்றில் அமர்ந்தாள்.

சில நிமிடங்களே ஆகியிருக்கும். பெண்ணின் தாயார் அர்ச்சனாவிடம் வந்து "அர்ச்சனா... ஒன் காலா நெனச்சு கையப் பிடிச்சுக் கெஞ்சறேன்... நீ இந்த எடத்தை விட்டுப் போயிடணும். புள்ள வீட்டுக்காரங்க நீ யாருங்கறதை தெரிஞ்சுக்கிட்டாங்கம்மா. இங்க நீ வரதட்சணை அது இதுன்னு போலீஸ்கிட்ட சொல்லி 'சீப் பப்ளிஸிட்டி' தேடிப்பியாம். அதனால்..."

"அய்யோ, ஆன்ட்டி, அப்படியெல்லாம் நான் செய்வேனா... அவங்க..."

"நீ ஒண்ணும் சொல்ல வேண்டாம்..." என்ற தீபாவின் அம்மா "தயவு செஞ்சு போயிடும்மா... இப்படி ஒன்னை போன்னு சொல்றதுக்கு ஸாரி...ஸாரி...ஸாரி... என்னை மன்னிச்சு எடத்தைக் காலி பண்ணு..." என்று சொல்லிக் கொண்டிருக்கும்பொழுதே தீபாவின் அப்பா வந்தார்.

"என்ன சொல்றா அவ... போறானாமா... இல்ல... செக்யூரிட்டியக் கூப்பிடணுமா...?"

வாஞ்சையோடு அடிக்கடி 'நீயும் எனக்கொரு மகதானேம்மா" என்றவரா இவர்!.

அடுத்த கணம் அர்ச்சனா அழுதவாறு வெளியேறினாள்.

"கல்யாணத்துல ஒன்னைப் பத்தி நெறய விசாரிச்சாம்மா..." என்றவாறு உள்ளே நுழைந்த அம்மா,

"ஆனா ஒருத்தர்கூட நீ ஏன் வரலேன்னு கேக் கலம்மா" என்ற அப்பா "இந்தா ஒம் பேருக்கு ஒரு கடுதாசு..." என்று நீட்டினார்.

"எவனாவது கேணப்பய உன் தைரியம் எனக்குப் பிடிச்சருக்கு... ஒன்னை மாதிரி பொண்ணைத்தான், மனைவியா அடைய விரும்பறேன்னு கிறுக்கியிருப்பான். இந்த மாதிரி ஒரு அஞ்சாறு கடுதாசு வந்தாச்சு இல்ல...?"

அப்பா சொல்லிக் கொண்டிருக்கையில் அர்ச்சனா கடிதத்தைப் பிரித்துப் பார்க்கலானாள்.

"யாரும்மா அது?" என்று அம்மா கேட்க அர்ச்சனா கடிதத்தைத் தொடர்ந்து படித்தாள்.

அப்பாவுக்குக் குடிக்கத் தண்ணீர் தந்துவிட்டு தானும் தண்ணீர் குடித்துவிட்டு வந்த அம்மா, "யாருன்னு கேட்டேன்ல?" என்றாள்.

பதில் சொல்லாமல் அம்மாவிடம் கடிதத்தைக் கொடுத்த அர்ச்சனாவின் மனத்தில், பட்டிமண்டபம் ஒன்று நடக்க ஆரம்பித்தது.

முரளி மெதுவாக வாயிலை நோக்கி நடந்தான். அவனால் எதையுமே நம்ப முடியவில்லை. அர்ச்சனா கேஸை வாபஸ் வாங்கிட்டதால வழக்கே இல்லாமல் போய் விட்டது... அதனால் அனைவருக்கும் விடுதலை' என்று வேகவேகமாக நடைபெற்ற நிகழ்ச்சிகள், முரளிக்கு அதிர்ச்சி தந்தன. இன்ப அதிர்ச்சியாக இல்லை.

வெளியே வந்தவன் அர்ச்சனாவைக் கண்டான். கூட சில பத்திரிகை / தொலைக் காட்சிக்காரர்கள்.



"இந்த வெடிக்குப் பேரு சதாம் உசேன் வெடியா?"

"ஆமாங்க... பத்த வச்சா புஷ்னு சத்தம் மட்டும்தான் வரும்...!"

- அருள் மூர்த்தி

தன்னைச் சார்ந்தவர்கள் யாரும் வராததைக் கண்ட முரளிக்கு மனது வலித்தது. அர்ச்சனா அருகே வர முரளியின் உடம்பெல்லாம் கூசியது.

"வாங்க" என்ற அர்ச்சனா, "பழசையெல்லாம் மறக்க முயற்சிப்போம்" என்றாள்.

'பதிலுக்கு என்ன பேசுவது' என்று புரியாமல் நின்ற முரளியிடம் "செஞ்ச தப்புக்குத் தண்டனையா அவமானங்களை சந்திச்சு, இப்ப மனம் வருந்திக்கிட்டிருக்கீங்க... அதனாலதான் வழக்கை வாபஸ் வாங்கிக்கிட்டேன்..." என்றாள்.

பத்திரிகைக்காரர்கள் விறுவிறுவென்று எழுதிக் கொண்டிருக்க "ஒங்களை போலீஸ்ல புடிச்சுக் குடுத்ததைப் பத்திரிகை டீ.வி மூலமா உலகம் பாத்தது... அதே மாதிரி வழக்கை வாபஸ் வாங்கி நீங்க வெளியே வரது தெரிய வேணாமா... அதான்... நானே இவங்களுக்குத் தகவல் குடுத்து இங்கே வரவழைச்சேன்" என்றாள் அர்ச்சனா.

"அர்ச்... மிஸ் அர்ச்சனா... ஒங்களுக்கு ஒண்ணு தெரியுமா...?" என்ற முரளி "சட்டத்து மூலமா எனக்குக் கெடைக்கப் போற தண்டனையை விடக் கொடுமையான தண்டனை இப்ப குடுத்திருக்கீங்க" என்று கண் கலங்கினான்.

"அதெல்லாம் ஒண்ணுமில்ல... குறள் சொல்றாப்பல அவர் நாண நன்னயம் செய்யணும்கற நோக்கத்துல நான் வழக்கை வாபஸ் வாங்கலே... நானும் சில கசப்பான சம்பவங்களைச் சந்திச்சேன்... அதெல்லாம் இனிமே நடக்காம இருக்க, இது உதவாதான்னுதான் வழக்கை வாபஸ் வாங்கினேன்..." என்றாள் அர்ச்சனா.

"அந்த சம்பவங்கள்ள ஒண்ணு ரெண்டை... ஒங்களுக்கு ஆட்சேபணை இல்லன்னா... சொல்றீங்களா?" என்று ஒரு பத்திரிகை நிருபர் கேட்டார்.

"அவை எந்த விதத்துல வழக்கை வாபஸ் வாங்கக் காரணமாயிருக்கும்னு நீங்க அலசணும்... அப்படித்தானே...?" என்று பதில் சொன்னாள் அர்ச்சனா.

"என் கல்யாணத்தன்னிக்கு எது சரின்னு தோணுச்சோ அதைத்தான் செஞ்சேன்... இப்ப எது சரின்னு தோணுதோ அதைத்தான் செய்யறேன்... எதிர்காலத்துல முரளியைக் கணவரா ஏத்துக்கறது சரின்னு தோணினா இவரையே கல்யாணமும் செஞ்சுப்பேன்... வணக்கம்" என்று பத்திரிகை/தொலைக் காட்சிக்காரர்களை நோக்கி, கை கூப்பினாள் அர்ச்சனா.

"ஆல் தி பெஸ்ட்... நான் வரேன்..."

விடைபெற்றுச் செல்லும் அர்ச்சனாவை அனைவரும் பிரமை பிடித்தாற் போல பார்த்துக் கொண்டிருந்தனர். ○

# அப்பாவி வேஷம்!

## நாகேஷ்

சுமார் இருநூறு அடி நீளமுள்ள ஹாலில், பல்வேறு செக்ஷன்களும் இருந்தன. அதன் ஒரு கோடியிலிருந்து, மறு கோடியில் இருந்த எங்கள் செக்ஷனுக்கு, என் கையைப் பிடித்து, தரதர வென்று இழுத்துக் கொண்டு போனார் என்னுடைய மேலதிகாரியான சீனிவாச அய்யங்கார்.

ஆபீசுக்கு பனியன், அண்டர்வேர் அணிந்து கொண்டு வந்து, ஒரு கூத்தடித்து, லீவு வாங்கிக் கொண்டு போய், ஸ்னூக்கர் ஆடும் அறையில் பாண்ட் - சட்டைக்கு மாறி, அங்கே ஜாலியாக நான் ஸ்னூக்கர் ஆடிக் கொண்டிருந்த விஷயம் யார் மூலமாகவோ, அய்யங்கார் காதுவரை போய் விட்டது. நேரே தானே ஸ்பாட்டுக்கு வந்து விட்டார். என் ஒரு கையில் ஸ்னூக்கர் ஆடும் நீளமான க்யூ . இன்னொரு கை அய்யங்காரின் பிடியில்.

பனியன் - அண்டர்வேரில் பார்த்து அதிர்ந்தவர்கள் இப்போது, இந்தக் காட்சியைப் பார்த்து அதிர்ந்தார்கள்.

"என்ன நாகேஸ்வரா? இன்னிக்குக் காலையிலேயே ஸ்னூக்கரா? பேஷ் பேஷ்!"

"திமிர் புடிச்சு, எல்லாரையும் வெறுப்பேத்தினா, இது மாதிரிதான் ஆகும்!"

"ஸ்னூக்கர் டேபிளை நாகேஸ்வரன் செக்ஷனுக்கே இடம் மாத்திட்டாங்களா?"

இப்படி கமெண்ட்கள் வேறு. நான் எல்லாவற்றையும் ஒதுக்கித் தள்ளிவிட்டு, அய்யங்கார் இழுத்த இழுப்புக்கு ஓடிக் கொண்டிருந்தேன்.

அய்யங்கார் முகத்தில், அந்த அளவு கோபத்தை நான் பார்த்தது கிடையாது. "நீர் ரொம்ப தைரியசாலி! ராத்திரி வீடு திரும்புகிறபோது, தாம்பரம் ரயில்வே ஸ்டேஷனுக்கு வெளியே, இருட்டில் யாராவது, 'நில்' என்று அதட்டல் போட்டால், உடனே இரண்டு காது கடுக்கன்களையும் கழற்றி, இவ்ளோதான் இருக்கு. எடுத்துண்டு, என்னை விட்டுடு. ஒண்ணும் பண்ணிடாதே! என்று தைரியமாய்ச் சொல்லிடுவீரே!" என்று நாம் கேலி பண்ணுவோமே, அவர் முகத்திலா இத்தனைக் கோபம்! என்று ஆச்சரியமாக இருந்தது.

நேரே செக்ஷன் சூப்ரின்டன்டெண்ட் சுப்பாராவ் முன் கொண்டு போய் நிறுத்தினார். "நாகேஸ்வரன் சுத்த மோசம்; ஒழுங்காய் வேலை பார்ப்பது கிடையாது. தினமும் ஆபீசுக்கு லேட். எப்போது பார்த்தாலும் டிராமா எழுதுகிறேன் என்று பேப்பரில் எதையோ எழுதிக் கொண்டிருக்கிறார். சாயங்காலம், ஆபீஸ் முடிகிறவரை இருப்பதே இல்லை. செக்ஷனில் வேலை

பார்க்கிற நேரத்தைவிட, இவர் ஸ்னூக்கர் ஆடும் அறையில் இருக்கிற நேரம்தான் அதிகம்...'' பெரிய குற்றச்சாட்டுப் பட்டியலே ஒப்பித்தார்.

"வாட்மேன்? வாட் ஹேப்பன்டு டு யூ?'' என்றார் சுப்பாராவ் என்னைப் பார்த்து. நான் அப்பாவி போல முகத்தை வைத்துக் கொண்டு கொஞ்ச நேரம் அமைதியாக இருந்துவிட்டு, "சார்! தப்பு ஏதும் செய்யவில்லை! நான் செய்தது ஏதாவது தவறு என்று நீங்கள் நினைத்தால், அதற்காக மன்னிப்பு கேட்டுக் கொள்கிறேன். ஐயம் எக்ஸ்டிரீம்லி சாரி சார்'' என்றேன் பணிவான குரலில்.

"இல்லை சார்! நாகேஸ்வரன் நடிப்புல புலி! உங்ககிட்டே தப்பே செய்யாத அப்பாவி போல வேஷம் போடறார்'' என்றார் அய்யங்கார்.

"இங்க வாங்க'' என்று தன் நாற்காலிக்குப் பக்கத்தில் வரும்படி அய்யங்காரை அழைத்தார்.

"அதோ பாருங்க'' என்று தன் நாற்காலிக்கு நேர் எதிரே இருந்த நுழைவாயிலுக்கு அப்பால் கை காட்டினார். தென்னக ரயில்வே அலுவலக வளாகத்துக்கு நேர் எதிரில் அமைந்துள்ள பொது மருத்துவமனை காம்பவுண்டை ஒட்டிய பஸ் ஸ்டாப் தெரிந்தது.

''தினமும் நாகேஸ்வரன் லேட்டா வராரா? நீங்க எப்படி? கரெக்ட் டயத்துக்கு வந்துடறீங்களா? நீங்க இரண்டு பேரும் ஒரே நேரத்துல, பஸ் ஸ்டாப்பிலிருந்து ரோட்டைக் கிராஸ் பண்ணி, ஆபீசுக்கு வருவதைத்தான் நான் தினமும் பார்க்கிறேனே! இரண்டு பேருமே ஆபீசுக்கு வரும்போது பதினோரு மணியாயிடுது. இந்த லட்சணத்தில், 'நாகேஸ்வரன் ஆபீசுக்கு லேட்' என்று நீங்க புகார் பண்ணறீங்களோ? நீங்க ஒழுங்கா நேரத்துக்கு ஆபீஸ் வந்து, ஆபீஸ்ல ஒழுங்கா வேலை பார்த்தா, உங்க கிழே வேலை பார்க்கிறவங்களும் ஒழுங்கா இருப்பாங்க! அதைப் புரிஞ்சுக்கோங்க!'' என்று என்னைத் திட்டுவதற்குப் பதிலாக, அவரைக் கடிந்து கொண்டார்!

அய்யங்காரின் முகம் சுருங்கிப் போனது.

ஒருநாள், தி.நகர் சிவா - விஷ்ணு கோவிலுக்கு எதிரில், கிளப் ஹவுஸ் என்று ஓர் இடம் இருப்பதாகவும், அங்கு தங்குவதற்கு அறைகள் இருப்பதாகவும் கேள்விப்பட்டேன். அங்கே போய்ப் பார்க்கலாமே என்று தோன்றியது. ஒருநாள் மாலை கிளப் ஹவுஸுக்குப் போனேன்.

நான் பாட்டுக்கு உள்ளே போனேன். ஒருத்தர் என்னை 'யார் நீங்க, யாரைப் பார்க்கணும்?' என்று விசாரித்தார்.

"என் பேர் நாகேஸ்வரன். ரயில்வேயில் வேலை பார்க்கிறேன். நாடகங்களில் நிறைய நடிக்கிறேன். நீங்க கூட பார்த்திருக்கலாம்'' என்று ஆரம்பித்து, எனக்கே உரிய குறும்புடன் மடமடவென்று பேசிக் கொண்டிருந்தேன்.

சிரிக்கச் சிரிக்கப் பேசிய என் பேச்சை ரொம்ப ரசித்துக் கேட்ட அவர், "நாம ரெண்டு பேரும் பேசிக்கிட்டே இருக்கோம். நீங்க வந்த வேலை என்னன்னு கேட்கலை...? சொல்லுங்க... யாரைப் பார்க்க வந்தீங்க?'' என்று கேட்டார்.

"எனக்கு இங்கே யாரையும் பார்க்க வேணாம். 'கிளப் ஹவுஸ்'னு ஒரு இடம் சிவா-விஷ்ணு கோவில் எதிரில் இருக்குன்னு கேள்விப்பட்டேன். சும்மா பார்த்துட்டுப் போகலாமேன்னு வந்தேன்'' என்று நான் சொன்னதும், "தங்க இடம் பார்க்கறீங்களா?'' என்று கேட்டார் அவர்.

"இங்கே தங்கினா நல்லாத்தான் இருக்கும். ஆனா, இடம் தருவாங்களான்னு தெரியலையே!'' என்றேன்.

''நான்தான் கிருஷ்ணமூர்த்தி. கிளப் ஹவுஸை நான்தான் கவனிச்சுக்கிறேன். நான் சொல்றேன். நீங்க இங்கேயே தாராளமா தங்கிக்கலாம்!''

"ரூம் வாடகை எவ்வளவு? ரொம்ப





• படம்: நன்றி ஃபிலிம் நியூஸ் ஆனந்தன்

வாடகை எல்லாம் தருகிற அளவுக்கு எனக்கு வசதி இல்லை!"

"உங்ககிட்ட வாடகை பத்தி ஏதாவது பேசினேனா? உங்களை மாதிரி ஒரு கலகலப்பான மனுஷர் இங்கே தங்கி இருப்பதில் எங்களுக்கெல்லாம் சந்தோஷம்! எப்போ வறீங்க?'' வாஞ்சையுடன் கேட்டார் கிருஷ்ணமூர்த்தி.

"இதோ... இன்றைக்கே வந்தால் போச்சு! பெரிசா எடுத்துக் கொண்டு வர, சாமான்கள் எதுவும் என்கிட்டே இல்லை!" என்று சொல்லி, கிருஷ்ணமூர்த்திக்கு நன்றி சொல்லிவிட்டுப் புறப்பட்டேன்.

கிளப் ஹவுஸில் பல தரப்பட்டவர்களும் தங்கி இருந்தார்கள்.

கிளப் ஹவுஸில் கீழேயும், மாடியிலுமாக தனி அறைகள், இரண்டு பேருக்கான அறைகள், நாலு பேர் தங்கும் அறைகள் என்று நிறைய அறைகள் இருக்கும். பணம் கொடுக்காமல், ரூமில் தங்க என் மனது இடம் தரவில்லை.

அதே நேரம் இரவு நேரத்தில் படுக்க இடம் வேண்டும் அவ்வளவுதானே! அதற்கு ரூம் தான் வேண்டும் என்று இல்லை. கிளப் ஹவுஸில் ரூம்களுக்கு வெளியில், ஆங்காங்கே போடப்பட்டுள்ள மர பெஞ்சு போதும் என்று நினைத்தேன். என் ஜாகை கிளப் ஹவுஸுக்கு மாறியது.

என்னுடைய நாடக அனுபவத்தின் அடிப்படையில், கிளப் ஹவுஸ் நாட்களை 'வசந்த காலம்' என்றால் மிகையில்லை. வாரத்தில் ஏழு நாட்களும் ஏதாவது ஒரு நாடகக் குழுவிலிருந்து அழைப்பு வரும். நானும் நாடகம் ஆரம்பிப்பதற்கு ஒரு மணி நேரம் முன்னால் அரங்கத்துக்குப் போய் என்ன கேரக்டரில் நடிக்க வேண்டுமோ, அதற்குரிய வசனங்களை ஒரு தடவை பார்த்துக்கொண்டு மேடை ஏறி விடுவேன். தங்கு தடை இல்லாமல், ஸ்கிரிப்டில் இருக்கும் வசனங்களுடன், சிச்சுவேஷனுக்கு ஏற்ப நானே சில டயலாக்குகளைச் சேர்த்து காட்சிக்கே மெருகூட்டி விடுவேன். ஒரே கைத்தட்டல்தான்.

ஒய்.ஜி.பி.யின் நாடகக் குழுவில் யாராவது வராது போனால் எனக்குக் குஷியாகிவிடும். அவரது யு.ஏ.ஏ குழுவின் எந்த நாடகமானாலும், போய் நடித்துக் கொடுத்தால், நாடகம் முடிந்தவுடன் எனக்குரிய சன்மானத்தைக் கொடுப்பார். பணத்தை வாங்கி, பாக்கெட்டில் வைத்துக் கொண்டு ஒய்.ஜி.பி.யின் மனைவி (ராஜலட்சுமி என்ற அவரை ராஜம்மா என்றுதான் கூப்பிடுவோம்)யிடம் போய் அப்பாவி போல முகத்தை வைத்துக் கொண்டு நிற்பேன்.

"என்ன டல்லா இருக்கே?'' என்று பாசத்துடன் அவர் கேட்பார்.

என் பணக் கஷ்டம் பற்றி அவரிடம் ஒரு குரல் அழுதுவிட்டு, "ஏதோ, உங்களைப் போன்ற நல்லவர்கள் என் மீது பாசம் வைத்து, நாடக வாய்ப்புகள் கொடுப்பதால்தான் என் வாழ்க்கைச் சக்கரம் ஓடிக் கொண்டிருக்கிறது'' என்பேன்.

"அவ்வளவு கஷ்டமா உனக்கு?'' என்று கேட்டுவிட்டு, தன் கைப்பையிலிருந்து ஒரு பத்து ரூபாயை எடுத்துத் தருவார். நன்றி சொல்லிவிட்டு, இரட்டை சன்மானத்துடன் சந்தோஷமாகச் சைக்கிளை மிதித்துக் கொண்டு புறப்படுவேன்.

இரவில் கிளப்ஹவுஸ் பெஞ்சுகளில் ஏதாவது ஒன்று காலியாக இருக்கும். நான்பாட்டுக்கு, அந்த பெஞ்சில், கையை மடித்து, தலைக்கு வைத்துக் கொண்டு, படுத்து விடுவேன். படுத்த சில நிமிடங்களில் நிம்மதியாய்த் தூங்கிவிடுவேன்.

சில சமயங்களில், யாராவது வந்து எழுப்பி, பெஞ்சை காலி பண்ணச் சொல்வார்கள். கவலையே படாமல், எழுந்து, தரையில் படுத்து, தொடர்ந்து தூக்கத்தைத் தொடருவேன்.

இப்படி கட்டை பெஞ்சிலும், தரையிலும் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்த நான், ஆசையாக ஒரு சொகுசு மெத்தை வாங்கினேன். அந்த மெத்தையை எல்லாரிடமும் காட்டி பெருமைப்பட்டேன். ஆனால் அன்று இரவு அந்த மெத்தையில் படுத்தபோது, தூக்கம் வராமல் தவித்தேன்.

அந்தக் கதை அடுத்த வாரம்.

(சிரிப்பு தொடரும்)



# தமாஷாகச் சில தண்டனைகள்...

**வி**த்தியாசமான தண்டனைகளை வழங்கி வியக்க வைத்துக் கொண்டிருக்கிறார் நீதிபதி கற்பகவினாயகம். நமக்கும் ஒரு சான்ஸ் கிடைத்தால், நாம் என்ன தீர்ப்பு வழங்குவோம் என்று யோசித்தபோது...

**டெ**பாசிட்தாரர்களின் பணத்தைச் சுருட்டிக் கொண்டு ஓட்டம் பிடிக்கும் ஃபைனான்ஸ் கம்பெனி முதலாளிகளின் கால்களில் கோணிப் பைகளை மாட்டிவிட்டு, Sackrace ஓடச் சொல்லலாம். பத்து நாள் எண்பது மணி நேர தண்டனையில் பரம யோக்கியர்களாக மாறிவிடுவார்கள்!

**ஆ**பாசப் படம் எடுக்கும் ஆசாமிகளை, நாகப்பாம்புகள் நிறைந்த ஒரு தனியறையில் ஒரு மாத காலம் அடைத்து வைக்கலாம். அவையெடுக்கும் திகில் படங்களைப் பார்த்து, திருந்தி, பிறகு சாதாரண காமிராவால் புகைப்படம் எடுக்கக் கூடத் தயங்குவார்கள்.

**ஊ**ழல் மேல் ஊழல் செய்து சொத்துகளைக் குவிக்கும் அரசியல்வாதிகளை ரிசர்வ் வங்கிக்கு அனுப்பி, தினசரி கோடானு கோடி ரூபாய் நோட்டுகளை விரல் வலிக்க வலிக்க, சரியாக எண்ணித் தரச் சொல்லலாம். அப்புறம் பணம் என்றாலே உதறி விடுவார்கள்.



**ஹை**ஸ்பீடில் வண்டி ஓட்டுபவர்களை ரோடு இன்ஜின் டிரைவர்களாக ஓராண்டுக்கு நியமிப்பது நல்ல பலனைத் தரும். ஒரு அவசரத்திற்கு மாப்பிள்ளை அழைப்பு கார்களையும் ஓட்டச் சொல்லலாம்.

**வ**ரதட்சிணை கேட்டு கொடுமை செய்பவர்களை, ஐந்து பெண்களை தத்து எடுத்து, திருமணம் செய்து தரச் சொல்லலாம். அதிலும் செவ்வாய் தோஷம், மூல நட்சத்திரம் உள்ள பெண்களாகத் தேர்ந்தெடுத்து, வரன் தேடச் சொல்லலாம்.

**பெ**ட்டி, பெட்டியாக லஞ்சம் கேட்கும் அதிகாரிகளை சென்ட்ரல் ஸ்டேஷன், எக்மோர் ஸ்டேஷன்களில் போர்ட்டர்களாக ஒரு வருடத்துக்கு நியமிக்கலாம். ஏகப்பட்ட பெட்டிகளைத் தலையிலும், கைகளிலும் சுமந்து அவஸ்தைப் பட்டு, பெட்டிப் பாம்பாய் அடங்கி விடுவார்கள்.

**ஏ**கப்பட்ட தில்லு முல்லு செய்யும் ஃபினாட் பிரமோட்டர்களை இரண்டு வருடங்களுக்கு இடுகாட்டில் கல்லறைகள் கட்டும் வேலையை செய்யச் சொல்லலாம். அவர்களுக்கு நாளாவட்டத்தில் தன்னைப் போல ஒரு 'அடக்கம்' வந்து விடும்.

- பாஸு



# ஜில்லு மல்லு

—கதிர்


ஏண்டா, பைக்குக்கு பெடல் வச்சு ஓட்டுறியா? அநியாயத்துக்கு மெதுவாப் போற?


என்னைக்குமே நார்மல் ஸ்பீட்ல போனாதான் சேஃப்டி


பஸ்ல போற உனக்கெல்லாம் எதுக்கு பைக்கு?


அப்பா...


பைக்குன்னா... இப்படி ஓட்டணும்... சும்மா... காதுக்குள்ள சங்கு ஊதுனமாதிரி இருக்கு பாரு...


அதே ... மாதிரி.. சவுண்ட் வருது. திரும்பி வரான் போலிருக்கு.


ஆஹா... காதுல சங்கு ஊதற மாதிரி ஓட்டினான்னு சொன்னியே, அப்படி போனா இப்படித்தான் சங்கு ஊதணும்...

விழாக்கால
அனுபவங்களை
என்றென்றும்
நினைவில்
நிறுத்துவது
சாரதா’ஸ்

# சாரதா’ஸ்

முகூர்த்தப்பட்டு புடவைகளுக்கு அதிர்ஷ்டமான இடம்

45, என்.எஸ்.பி. ரோடு, திருச்சி-2 போன்:2702077
தன்பில்டிங், [illegible], மவுண்ட்ரோடு, சென்னை-2. போன்: 2852177.

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / PMG (CCR) 572 / 03 - 05
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 358 * Registered as a Newspaper in Srilanka




ஸ்பெஷல் கலர்ஸ்!



ஸ்பெஷல் தீபாவளி!

பட்டு புடவைகள் | பேன்ஸி சேலைகள் | சர்ட்டிங் சூட்டிங் | ரெடிமேட்ஸ்
டிரெஸ் மெட்டீரியல்ஸ் | மேட்சிங் ரகங்கள் | கைத்தறி | ஃபர்னிஷிங்



# தி சென்னை சில்க்ஸ்™

தமிழகத்தின் மாபெரும் ஜவுளி சாம்ராஜ்யம்

23, உஸ்மான் ரோடு, தி. நகர், சென்னை - 17. ✆: 24310888

558 - 560, ஒப்பணக்கார வீதி, கோயமுத்தூர் - 1. ✆: 2391555
74, புது மார்க்கெட் வீதி, திருப்பூர் - 4. ✆: 2242888
85-A, R.K.V. ரோடு, ஈரோடு - 1. ✆: 2213270




Online shopping: www.thechennaisilks.com